# சாதக சிந்தாமணி

## பாகம் 3

| | | | |
|---|---|---|---|
| | சூரி<br>செ | சுக் | புதன் |
| சந்<br>ராகு | இராசி | | சனி |
| | | | கே |
| | குரு | | ல |




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

சரசுவதி மகால் நூலகம்
மற்றும் ஆய்வு மையம்

தஞ்சாவூர்

தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண். 536

# சாதக சிந்தாமணி

*மூலமும் உரையும்*

**மூன்றாம் பாகம்**

சிறப்புக்கேண்மைப் பதிப்பாசிரியர் மற்றும் உரையாசிரியர்

***முனைவர் திருமதி. சத்தியபாமா காமேஸ்வரன்,***

எம்.ஏ.,எம்.ஃபில்.,எம்.எட்.,பிஎச்.டி.,

சோதிடவியல் பட்டயம், சுவடியியல் பட்டயம்.




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

**சரசுவதி மகால் நூலகம்**

**மற்றும் ஆய்வு மையம்**

தஞ்சாவூர்.

2011 ] [ விலை ரூ. 140-00

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | சாதக சிந்தாமணி மூன்றாம் பாகம் |
| பதிப்பாசிரியர் | : | முனைவர் திருமதி சத்தியபாமா காமேஸ்வரன் |
| வெளியிடுபவர் | : | இயக்குநர், சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர். |
| வெளியீட்டு எண். | : | 536 |
| ISBN | : | 978-81-921829-1-9 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதல் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : | செப்டம்பர், 2011 |
| தாள் | : | TNPL 18.6 கி. கி |
| நூல் அளவு | : | 24 x 14 செ. மீ. |
| பக்கங்கள் | : | 360 |
| படிகள் | : | 1000 |
| எழுத்து | : | 12 புள்ளி |
| அச்சிட்டோர். | : | ஒளி அச்சு, சரசுவதி மகால் நூலகம். |
| புத்தகக்கட்டு | : | லேமினேசன் அட்டை |
| பொருள் | : | சோதிடம் |
| விலை | : | ரூ. 140-00 |

# வெளியீட்டாளர் முகவுரை

தஞ்சையில் அமைந்து தரணி முழுமைக்கும் அறிவுச்செல்வமாக பயன்பட்டுக் கொண்டிருக்கும் அரும்பெரும் நிறுவனம் சரசுவதி மகால் நூலகமாகும். சுவடிக் கருவூலமாகவும், பன்மொழி நூற்களஞ்சியமாகவும், ஆய்வு மையமாகவும் திகழும் சரசுவதி மகால் நூலகம் ஆற்றிடும் தொண்டு அளப்பரியது.

இந்நூலகத்தின் முக்கிய நோக்கம் இலக்கியம், இலக்கணம், மருத்துவம், சோதிடம், சிற்பம் போன்ற அரிய சுவடிகளைப் பதிப்பித்து அச்சு நூலாக்கி மக்களுக்குப் பயன்படச் செய்தலேயாகும்.

இந்நூலகத்தில்சற்றேறக்குறைய ஐம்பதாயிரம் பன்மொழிச் சுவடிகள் பாங்குறப் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. இச்சுவடிகளிலிருந்து இதுவரை 535 நூல்கள் வெளியிடப்பட்டுள்ளது. இப்பணி தொடர்ந்து நடைபெற்று வருகின்றது.

தற்போது தமிழ்ச் சுவடி எண் 783 மற்றும் 784 ஆகிய இரு சோதிடச் சுவடிகளிலிருந்து சாதக சிந்தாமணி என்னும் சோதிடப் பாடல்களை சிறப்புக்கேண்மைப் பதிப்பாசிரியர் திருமதி சத்தியபாமா காமேஸ்வரன் அவர்கள் சிறப்பாகவும் செம்மையாகவும் பதிப்பித்துள்ளார். முதல் பாகம் 2008 ஆம் ஆண்டிலும், இரண்டாம் பாகம் 2009 ஆம் ஆண்டிலும் வெளியிடப்பெற்றது. மூன்றாவது பாகம் 536வது வெளியீடாக தற்போது வெளிவருகின்றது.

நம் முன்னோர்களின் வானியல் அறிவு எந்த அளவிற்கு சிறந்தது என்பதற்கு இந்நூலில் எடுத்துக் காட்டப்படும் பாடல்களே சான்று. சோதிடத்தைக் கற்க விரும்புவோருக்கு இந்நூல் மிகவும் பயனுள்ளது. சோதிடர்களும், சோதிட ஆர்வலர்களும் இந்நூலைப் படித்து அதன் மூலம் நற்பலனைப் பெறுவார்கள் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

சிறப்பு மிக்க இந்நூல் வெளிவர நிதியுதவி நல்கிய நடுவண் அரசுக்கும் மாவட்ட ஆட்சித் தலைவரின் நேர்முக உதவியாளர் (பொது) மற்றும் நூலக நிருவாக அலுவலர்(பொ.) திரு. செ. முகம்மது ஆரிப் சாகிப் அவர்களுக்கும் இந்நூலக பாதுகாப்பாளர் மற்றும் நூலகர் முனைவர் ப. பெருமாள் அவர்களுக்கும், இந்நூல் கணினி அச்சில்வெளிவர கணினிப் பிரிவில் பணியாற்றியவர் களுக்கும் எனது பாராட்டுதல்களை தெரிவித்துக் கொள்கிறேன்.

தஞ்சாவூர்
27-8-2011

*கா. பாஸ்கரன், இ.ஆ.ப.,*
*மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும் இயக்குநர்,*
*சரசுவதி மகால் நூலகம்.*



# பதிப்புரை

தெய்வீகக் கலையான சோதிடக்கலை மக்களால் பெரிதும் விரும்பப்படும் கலையாகும். ஒருவனுடைய பிறந்த நேரம், கோள்களின் நிலை ஆகியவற்றை அடிப்படையாகக்கொண்டு, அவனுடைய வாழ்வில் ஏற்படக்கூடிய இன்ப துன்பங்களைக் கணித்துக் கூறுவதால் என்றைக்கும் இக்கலைக்கு வரவேற்பு அதிகம். இக்கலைக்கு ஆதாரங்களாக விளங்குவன சோதிடநூல்கள். சென்ற நூற்றாண்டின் தொடக்கம்வரை தமிழ்நூல்கள் ஓலைச்சுவடிகளில் எழுதப் பட்டிருந்தன. அவற்றுள் பல இன்று அச்சேறிவிட்டன. இன்னும் சில ஓலைச்சுவடிகளிலேயே உறங்கிக் கிடக்கின்றன. பதிப்பிக்கப்பட்டு அச்சேறிய அச்சுநூல்கள் பலவும் இன்று கிடைப்பதில்லை. எனவே, ஓலைச்சுவடிகள் நம்முன்னோர் நமக்கு விட்டுச்சென்ற கலைக் கருவூலங்கள் என்பதைக் கருத்தில்கொண்டு, பல நிறுவனங்கள் இவற்றைப் பாதுகாத்து, தக்கவர்களைக் கொண்டு இந்நூல்களைப் பதிப்பித்து வெளியிட்டு வருகின்றன.

அத்தகைய நூல்வெளியீட்டு நிறுவனங்களில் ஒன்றாக விளங்கும் தஞ்சை சரசுவதிமகால் நூலகம் ஓலைச்சுவடிகளில் உள்ள சோதிட நூல்கள் பலவற்றையும் வெளியிட்டு வருகிறது. அதிகமான சோதிடச் சுவடிகளைத் தன்னகத்தே கொண்டுள்ள நூலகம் என்ற சிறப்பினை உடையது. தமிழ் மொழியையன்றி வடமொழியில் உள்ள சோதிட நூல்களையும் அச்சிட்டு வெளியிடுவது இந்நூலகத்தின் தனிச்சிறப்பாகும்.

இந்நூலகத்தில் வராகர் ஓரா சாத்திரம், காலச்சக்கரம், சிநேந்திரமாலை, சாதகாலங்காரம், சகாதேவ நிமித்த சூடாமணி, நட்சத்திர சிந்தாமணி, பஞ்சபட்சி சாஸ்திரம், குமாரசுவாமியம், சூடாமணி உள்ளமுடையான், சாதக பாரிஜாதம், சர்வார்த்த சிந்தாமணி முதலான தமிழ் சோதிட

நூல்களும் ஓலைச்சுவடிகளில் இருந்து பதிப்பிக்கப் பட்டு வெளியிடப்பட்டுள்ளன. மேலும், இப்பணி தொடர்ந்து நடைபெற்று வருகிறது. இந்நூலகத்தில் பாதுகாக்கப்பட்டு வரும் ஓலைச்சுவடிகளில் **சாதக சிந்தாமணி** என்ற நூலும் ஒன்று.

**சாதக சிந்தாமணி சுவடிகள்**

தஞ்சை சரசுவதி மகால் நூலகத்தில் சாதக சிந்தாமணி என்ற தலைப்பில் சுவடிகள் (சுவடி எண்கள் 783, 807, 1102, 1103, 1887a) கிடைத்தன. அந்த ஐந்து சுவடிகளையும் ஆய்வு செய்தபொழுது, இந்த ஐந்து சுவடிகளில் வெவ்வேறு மூன்று நூல்கள் இருப்பது கண்டறியப்பட்டது. சுவடி எண்கள் 807, 1102, 1103 ஆகியவை ஒத்த நூல்கள். இவை சாதக நூல் என்ற நூலாகும். சிறந்த நூல் என்பதைக் குறிக்க சாதகமாம் சிந்தாமணி என்ற தொடர் இருந்ததால், சாதக சிந்தாமணி எனத் தலைப்பிட்டு சுவடிகள் விவர அட்டவணையில் அமைத்துள்ளனர். சுவடி எண். 1887a இல் அமைந்துள்ள நூல் சாதக கணிதாமிர்தம் என்ற நூலாகும். இந்நூலுக்கும் சாதக சிந்தாமணி என்றே தலைப்பிடப்பட்டுள்ளது. இவையன்றி, சுவடி எண். 783இல் சாதக சிந்தாமணி என்ற நூல் காணப் படுகிறது. இந்நூல், தில்லைநாயகப் புலவர் என்பவரால் எழுதப்பட்ட சாதக சிந்தாமணி என்ற நூலாகும். இச்சுவடியில் சாதக சிந்தாமணியின் தொடக்கம் முதல், முதலாம் பாவம் வரையில் மட்டுமே பாடல்கள் அமைந்துள்ளன. இந்நூலகத்தின் பிற சோதிடச்சுவடிகளை ஆய்வு செய்த பொழுது, இரண்டாம் பாவகப் பலன் (சுவடி எண். 784) என்ற தலைப்பிலமைந்த சுவடியில் இரண்டாம் பாவம் முதல் பன்னிரு பாவங்கள் வரை சாதக சிந்தாமணியின் தொடர்ச்சியான பாடல்கள் இருந்தது கண்டறியப்பட்டது. அதன் விளைவாக சுவடி எண். 783, 784 ஆகிய இரு சோதிடச் சுவடிகளில் இருந்த சோதிடப்பாடல்கள் பதிப்புப் பணிக்கு எடுத்துக்கொள்ளப்பட்டது. இந்நூலில் பாயிரப் பாடல் களோடு சேர்த்து 1563 விருத்தப்பாக்கள் உள்ளன.

சாதகத்தைப்பற்றி விரிவாகக் கூறும் நூலாக இது விளங்குகிறது. இந்நூலின் விரிவு கருதி, மூன்று பகுதிகளாகப் பிரித்துப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. முதல் பாகத்தில் சோதிடம் தொடர்பான அடிப்படைச் செய்திகளாக காலநிகண்டு, காரக நிகண்டு ஆகியவை அமைந்துள்ளன. இப்பகுதியில் பாயிரப் பாடல்களோடு சேர்த்து 260 விருத்தப் பாடல்கள் உள்ளன. இரண்டாம் பகுதியில் இல்க்கன பாவம் முதல் ஆறாம் பாவம் வரையில் உள்ளது. மூன்றாம் பகுதியில் ஏழாம் பாவம் முதல் பன்னிரண்டாம் பாவம் வரையில் பதிப்பிக்கப்பட்டுள்ளது. ஓலைச் சுவடியில் மூலம் மட்டுமே அமைந்திருந்தது. படிப்போருக்கு எளிமை கருதி, பதிப்பாசிரியரால் இப்பாடல்களுக்கு உரை எழுதப்பட்டுள்ளது.

**நூலாசிரியர்**

சாதக சிந்தாமணி என்ற இந்நூலின் ஆசிரியர் தில்லைநாயகப் புலவர். தமிழிலக்கிய வரலாற்றினை எழுதிய கா. சுப்பிரமணியப்பிள்ளை பத்தொன்பதாம் நூற்றாண்டுப் புலவர் வரிசையில், திருவானைக்காத் தில்லைநாயக சோதிடர் என்பவர் சாதக சிந்தாமணி என்னும் சோதிட நூலை இயற்றினார் என்று எழுதியுள்ளார். தில்லைநாயகர் திருவானைக்கா என்னும் பதியிலே பிறந்தார் என்பதற்குச் சான்றாகச், சாதக சிந்தாமணியில்,

அம்புவனப் பெரியோர்பால் சாதகசிந் தாமணியென்
றடியேன் சொல்லச்
சம்புவன நாதர்பங்கில் அகிலாண்ட தேவியவர்
சரணம் காப்பாம். (சாதகசிந்தாமணி; பாயி: 3)

என்ற பாடலடிகள் அமைந்துள்ளன. சம்புவன நாதரையும் அகிலாண்ட தேவியையும் துதித்திருப்பதால், இவர் திருவானைக்காவில் பிறந்தவராக இருக்கலாம் என்று கருதினார் போலும். ஆனால் இவர் இயற்றிய காலச்சக்கரம் என்ற நூலின் சிறப்புப் பாயிரத்தில்,

"அருணெறி தழைக்குந் தொண்டைநன் னாட்டில்
அணிதிகழ் நந்திமா நகர்வாழ்
இருநிதி யானையான் அருந்தவ னாதன்
இசைந்தருள் தில்லைநா யகனே" (காலச்சக்கரம்; பாயி:2)

என வருவதைக்கொண்டு இவர் தொண்டை நாட்டில் நந்திமா நகரில் பிறந்தவர் என்பது புலனாகிறது. மேலும் இந்நூலாசிரியரின் தந்தையார் பெயர் அருந்தவநாதன் என்பதையும் அறியலாம்.

"திரைகொடா வழுதிப் புகழ்தொண்டை நாடன்
தில்லை நாயக மகபதியே"

என்ற யோக மஞ்சரி நூலின் இறுதிப் பாடலும் இவர் தொண்டை மண்டலத்தைச் சார்ந்தவர் என்பதைக் கூறும் சான்றாக விளங்குகிறது.

"காராளன் புகழ்தொண்டை வளநாட்டில் நந்தியர்கோன்
கமழும் காவித்
தாராளன் பெருபற்றப் புலியூரான் கனகசபை
தன்னைப் போற்றும்
ஏராளன் அருந்தவன்சேய தில்லைநாய கன்கணிதத்
தியற்கை யாயும்
சீராளன் சாதகசிந் தாமணியென் பொருள்விளங்க
செப்பி னானால்" (சாதக சிந்தாமணி; பாயிரம்:10)

என்ற பாயிரப்பாடலால் அருந்தவநாதன் வேளாளர் குலத்தைச் சேர்ந்தவர் என்பதையும் பெரும்பற்றப் புலியூரில் எழுந்தருளியுள்ள கனகசபையைப் போற்றுபவர் என்பதால் இவர் சைவ சமயத்தைச் சார்ந்தவர் என்பதையும் இவருடைய புத்திரரே தில்லைநாயகன் என்பதையும் அறியலாம். மேலும் 'அட்டகவர்க்கம்' என்ற நூலின் பாயிரத்தில்,

"அருந்தவன் செல்வன் தில்லைநா யகவேள்
அரும்பொருள் விரித்துரைத் தனனே"
(அட்டவர்க்கம் பாடல் எண்: 107)

என்று கூறப்பட்டுள்ளது. இதில் அருந்தவநாதனின் மைந்தன் தில்லை நாயகவேள் என்று சுட்டப்பட்டிருப்பதைக் காணலாம்.

"தொல்லைநா யகன்வஞ்செய் சிவகாம வல்லிபதம்
தொழுது போற்றித்
தில்லைநாயக னடியேன் சாதகசிந் தாமணியைச்
செப்ப லுற்றேன்"

*(சாதக சிந்தாமணி பாயிரம்: 11)*

என்ற பாடலடிகள் தில்லைநாயகப் புலவர், தில்லை நாயகனான சிவபெருமான் மீது எல்லையற்ற அன்பு பூண்டவர் என்பதையும் இவர் சைவ சமயத்தைச் சார்ந்தவர் என்பதையும் காட்டுகின்றன.

**ஆசிரியர்**

தில்லைநாயகப்புலவர், ஆசிரியர், ஞானாசிரியர் இரண்டு ஆசிரியர்களைப் பெற்றவர். சாதக சிந்தாமணியில்,

"உண்ணிறைந்த இருள்நீக்கிப் பொருளிதென உணரவைத்த
உண்மை ஞானக்
கண்ணிறைந்த வேங்கடா சலசாமித் திருவடிதன்
கருத்துள் வைப்பாம்
எண்ணிறந்த எழுத்தறிவித் தியல்பாகக் கண்கருத்தும்
இலங்கச் செய்த
பண்ணிறைந்த அம்மையப்ப பூபாலன் துணைமலர்த்தாட்
பணிதல் செய்வாம்"

*(சாதகசிந்தாமணி; பாயிரம்:5)*

என்று கூறப்பட்டிருப்பதன் வாயிலாக இவருடைய ஞானாசிரியர் வேங்கடாசலசாமி என்பதையும், இருவருக்கு எண்ணும் எழுத்தும் அறிவித்த ஆசிரியர் அம்மையப்ப பூபாலர் என்பதையும் அறியலாம்.

**வடமொழி ஆசிரியர்**

தில்லைநாயகப் புலவர் தமிழில் நல்ல தேர்ச்சி உடையவர். அதைப் போலவே வடமொழியிலும் நல்ல தேர்ச்சி பெற்று விளங்கியுள்ளார்.

"திருந்திய பாரிலே அஷ்டக வர்க்கச்
சிறப்பினைக் கங்கைவார் சடையோன்
முருந்துறழ் முறுவல் உமையவட குரைத்த
முதுமறை தனைமுனி வரர்தம்
பொருந்திய பொருளால் வடமொழி யதனாற்
புகன்றன ததனைச்செந் தமிழால்
அருந்தவன் செல்வன் தில்லைநா யகவேள்
அரும்பொன் விரித்துரைத் தனனே."
(அஷ்ட வர்க்கம்; பாயிரம்: )

வடமொழியிலமைந்த நூலைத் தமிழில் மொழிபெயர்த்து எழுதியுள்ளமைப் புலனாகும். மேலும்,

"நறைகமழ் கமலப் பொருட்டில்வீற் றிருக்கும்
நான்முகக் கடவுள்தான் படைத்த
நிறையுள மாந்தர் வினைப்பய னதனால்
நிலையெனு யோகமஞ் சரியாம்
உரையென வழங்கும் வடமொழி யதனை
தூயசெந் தமிழினாற் செய்தான்
திரைகொடா வழுதிப் புகழ்தொண்டை நாடன்
தில்லை நாயக மகபதியே"
(யோகமஞ்சரி பாயிரப்பாடல்)

என்ற இவர் செய்த மற்றொரு நூலும் வடமொழியிலிருந்து மொழிபெயர்த்துத் தமிழில் எழுதியதைச் சுட்டுகிறது. இதையன்றி,

"திருவுடன் பிறந்த குழவிவெண் டிங்கட்
செஞ்சடைக் கடவுளம் பிகைக்கே

பொருள்விரித் துரைத்த காலசக் கரத்தைப்
புதியசெந் தமிழாற் செய்தோன்"
(காலச்சக்கரம்; பாயிரம் 2)

என்ற பாடலால் காலச்சக்கரத்தை வடமொழியில் இருந்து மொழிபெயர்த்துள்ளதும் புலனாகும்.

இவற்றால் தில்லைநாயகப்புலவர் வடமொழியில் நல்ல தேர்ச்சிப் பெற்றிருந்ததை அறியமுடிகிறது. வடமொழியில் உள்ள நூல்களை மொழிபெயர்த்துவைக்க இவருக்குப் பேருதவி புரிந்த பெரியார் அந்தணர் குலத்தில் வடமர் என்னும் குடியில் பிறந்த ஈசுரையர் புதல்வர் அண்ணா சாஸ்திரியார் என்பவராவார்.

நறையிருக்கும் சத்தளபங் கயத்தாமன் வடமரமச
நாக ரீகன்
நிறையிருக்கும் ஈசுரையன் செல்வனண்ணா சாஸ்திரிகள்
நெடுநீர் வைப்பின்
மறையிருக்கும் சோதிடமாம் வடமொழியைப்பெயர்த்துரைக்க
வருமீ ராறு
துறையிருக்கும் சாதகசிந் தாமணிஎன் றேதமிழாற்
சொல்வன் மாதோ!
-(சாதக சிந்தாமணி;பாயிரம்; பாடல்7)

என்ற பாடல் இதனை உணர்த்தும். மேலும் பன்னிரு துறைகளை உடையதாக இந்நூலின் உள்ளமைப்பையும் ஆசிரியர் கூறியுள்ளதை அறியலாம்.

இவையன்றி, "திரைகொடா வழுதிப் புகழ்தொண்டை நாடன் தில்லை நாயக மகபதியே" (யோகமஞ்சரி; பாயிரப் பாடல்) "தில்லை நாயக வேள் அரும்பொருள் விரித்துரைத் தனனே" (அஷ்டவர்க்கம்; பாயிரப்பாடல்) ஆகிய பாடலடிகளில் தில்லைநாயகரை மகபதி; வேள் என்று கூறியிருப்பதால் இவர் தொண்டைநாட்டின் சிற்றரசனாக இருந்திருக்கக்கூடும் என்று கருதலாம்.

## சாதக சிந்தாமணி பெயர்க்காரணம்

தமிழில், அனுபவ நட்ட சாதக சிந்தாமணி, சுந்தரானந்தர் கர்ப்ப சிந்தாமணி, கௌசிக சிந்தாமணி, சமர சிந்தாமணி, சர்வயோக தயாபர சிந்தாமணி, சோதிட கிரக சிந்தாமணி, சோதிட கோட்சார சிந்தாமணி, தசாபுத்தி சிந்தாமணி, நட்சத்திர சிந்தாமணி, நவக்கிரக சிந்தாமணி எனச் சிந்தாமணி என்ற பெயரில் பல சோதிட நூல்கள் உள்ளன. அவற்றுள் ஒன்றாக விளங்குவது சாதக சிந்தாமணி. சாதக சிந்தாமணி என்பதற்கு, சாதகம் கூறும் நூல்கள் யாவற்றிலும் சிறந்த அற்புதமணி என்பது பொருள். சாதகம் குறித்து அறிய விரும்பும் யாவருக்கும் அனைத்து செய்திகளையும் விரிவான நூலாக ஒப்பற்ற நூலாக விளங்குகின்ற தன்மையால் இப்பெயர் பெற்றது போலும். நன்னூலில், முதனூல் என்னும் சூத்திரவுரையில் தன்மையாற் பெயர்பெற்றன சிந்தாமணி, சூளாமணி, நன்னூல் முதலாயின என்று மயிலைநாதர் எழுதியிருப்பது இங்கு எண்ணத்தக்கது.

## நூலமைப்பு

சாதக சிந்தாமணியில் முதலில் காப்புச் செய்யுட்களும் பாயிரப்பாடல்களும் அமைந்துள்ளன. நூலின் தொடக்கத்தில் சோதிடத்தை அறிந்து கொள்வதற்கான அடிப்படைச் செய்திகள், காலநிகண்டு,காரக நிகண்டு என்னும் தலைப்பு களில் அமைந்துள்ளன. இதனையடுத்துப் பன்னிரு பாவங் களின் பலன்களும் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. ஒவ்வொரு பாவத்திற்கும் தனித்தனியாகப் பலன்களைக் கூறும் பன்னிரு பகுப்புகள் அமைந்துள்ளன. நூல் அளவில் பெரிதாகக் காணப்பட்டதால், மூன்று பாகங்களாக நூல் பிரிக்கப் பட்டுள்ளது. சோதிடத்தை அறிந்துகொள்ள உதவும் அடிப்படைச் செய்திகள் சாதக சிந்தாமணி - முதல்பாகமாக வெளிவந்துள்ளது.

சாதக சிந்தாமணி - இரண்டாம் பாகம் நூலில் பன்னிரு பாவங்களுக்கான பாவங்களில் ஒன்று முதல் ஆறு வரையிலான பாவங்களின் பலன்களை விரிவாக எடுத்துரைக்கிறது. முதல் பாவத்தில் 163 பாடல்களும், இரண்டாம் பாவத்தில் 153 பாடல்களும், மூன்றாம் பாவத்தில் 48 பாடல்களும், நான்காம் பாவத்தில் 88 பாடல்களும், ஐந்தாம் பாவத்தில் 39 பாடல்களும், ஆறாம் பாவத்தில் 150 பாடல்களும் அமைந்து ஒன்று முதல் ஆறு பாவம் வரையில் 695 பாடல்கள் காணப்படுகின்றன.

தற்போது வெளிவரும் சாதகசிந்தாமணி - மூன்றாம் பாகம் என்ற இந்த நூலில் பன்னிரு பாவங்களுக்கான பலன்களில் ஏழு முதல் பன்னிரண்டு வரையிலான பாவங்களின் பலன்கள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. ஏழாம் பாவத்தில் 82 பாடல்களும், எட்டாம் பாவத்தில் 311 பாடல்களும், ஒன்பதாம் பாவத்தில் 36 பாடல்களும், பத்தாம் பாவத்தில் 105 பாடல்களும், பதினோராம் பாவத்தில் 24 பாடல்களும், பன்னிரண்டாம் பாவத்தில் 27 பாடல்களும் அமைந்து, ஏழாம் பாவம் முதல் பன்னிரண்டாம் பாவம் வரையில் 585 பாடல்கள் உள்ளன.

பன்னிரு பாவங்களின் பலன்களைக் கூறும் இந்நூல், சோதிடத்தைக் கற்க விரும்புவோருக்கும் சோதிட ஆர்வலர்களுக்கும், சோதிட ஆராய்ச்சியாளர்களுக்கும் மிகவும் பயனுள்ளதாகும். தில்லை நாயகப் புலவரால் எழுதப்பட்ட இந்நூலுக்குப் பழைய பதிப்புகள் சில உள்ளன. அவை முறையான பதிப்பு நெறிமுறைகளோடு பதிப்பிக்கப்பட வில்லை. மேலும், இந்நூலுக்கு இதுவரை உரை எதுவும் எழுதப்படவில்லை. படிப்போருக்கு எளிமை பயக்கும் வண்ணம், பதிப்பாசிரியரால் இந்நூலுக்கு உரையெழுதும் முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது.

சிறப்புக் கேண்மைப் பதிப்பாசிரியர் பணியை எனக்கு வழங்கி, .சாதக சிந்தாமணி . என்னும் இந்நூலைப் பதிப்பிக்க அனுமதித்து ஆணை வழங்கிய முன்னாள் மாவட்ட ஆட்சித் தலைவர் மற்றும் சரசுவதி மகால் நூலக இயக்குநர் உயர்திரு சா. விஜயராஜ்குமார், இ.ஆ.ப., அவர்களுக்கும், இந்நூல் நல்ல முறையில் வெளிவர துணைநின்ற மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும் சரசுவதி மகால் நூலக இயக்குநர் உயர்திரு கா. பாஸ்கரன், இ.ஆ.ப., அவர்களுக்கும், இந்நூலக முன்னாள் நிருவாக அலுவலர் மற்றும் வெளியீட்டு மேலாளர் (பொறுப்பு) திரு. சாமி. சிவஞானம், எம்.ஏ., அவர்களுக்கும், தற்போதைய மாவட்ட ஆட்சித் தலைவரின் நேர்முக உதவியாளர் (பொது) மற்றும் இந்நூலக நிருவாக அலுவலர் (பொறுப்பு) திரு. செ. முகம்மது ஆரிப் சாகிப் அவர்களுக்கும், நூலகர் முனைவர் ப. பெருமாள் அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலினைச் சிறப்பாக அச்சிட்டுத்தந்த நூலகக் கணினிப்பிரிவினருக்கும், நூற்கட்டுப் பிரிவினருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்நூலின் உரை குறித்துக் கருத்துக்கள் இருப்பின், தெரிவிக்க வேண்டுகிறேன்.

**கா. சத்தியபாமா**

சிறப்புக்கேண்மைப் பதிப்பாசிரியர்.



# பொருளடக்கம்

பக்க எண்

## எட்டாம் பாவம்

பக்க எண்

பக்க எண்

**ஒன்பதாம் பாவம்**

**பத்தாம் பாவம்**

**பதினோராம் பாவம்**

**பன்னிரண்டாம் பாவம்**





# சாதக சிந்தாமணி

## (மூன்றாம் பாகம்)

## ஏழாம் பாவம்

### வாலிபத்தில் திருமணம்

ஓதும்லக் கனத்திற் கோளும்
உறைந்திடப் புகர்மால் பொன்னோன்
மீதுறக் கூடி கேந்திர
மேறில்வா லிபவி வாகம்
தாதுற சாமிக் கேழிற்
றனத்தோன்கா மத்தோன் நிற்கின்
மாதுகேள் வாலி பத்தில்
வரும்விவா கந்தான் என்பர். (1)

(இதன் பொருள்) சென்ம இலக்கனத்திற் கோள் இருக்க, சுக்கிரன், புதன், குரு ஆகிய மூன்று கோள்களும் ஒன்றுகூடி கேந்திரத்தில் இருக்க, இச்சாதகனுக்கு வாலிப வயதில் திருமணம் நடக்கும். இலக்கனாதிபதிக்கு ஏழாமிடத்திற் இரண்டாமிடத்திற்கு அதிபதி, ஏழாமிடத்திற்கு அதிபதி நிற்கில், இச்சாதகனுக்கு வாலிபத்தில் திருமணம் நடக்கும்.

### இதுவுமது

ஏழுபத் திரண்டு நாலுக்
கிறைவர்சா மியுந்தான் கூடில்
வாழும்வா லிபத்தின் நல்ல
மடந்தையை மணம்செய் வானாம்
ஆளும்கீர்த் தியனும் சுன்னும்
நாலுக்குள் ளாக நிற்கில்
வாழும்வா லிபவி வாகம்
ஆமென அறைவர் மாதோ! (2)

*(இ-ள்.)* ஜென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடம், பத்தாமிடம், இரண்டாமிடம், நான்காமிடம் ஆகியவற்றிற்கு அதிபதிகளும் இலக்கனாதிபதியும் ஒன்றுகூடி இருப்பின், இச்சாதகன் வாலிப வயதில் நல்ல பெண்ணைத் திருமணம் செய்து கொள்வான். இலக்கனாதிபதியனும் சனியும் ஜென்ம இலக்கனத்திற்கு நான்காம் இடத்திற்குள் இருந்தால், இச்சாதகன், வாலிப வயதில் திருமணம் செய்து கொள்வான் என்று சோதிட நூல் வல்லுநர்கள் கூறியுள்ளார்கள்.

## திருமண திசை, புத்தி

*தானுற்ற அசுர மந்திரி*
*சாமியும் உதய கேந்திரக்*
*கோணத்தி லேயி ருக்கிற்*
*கூடும்வா லிபவி வாகம்*
*மூனுற்ற ஏழிற் பொன்னை*
*உதயத்தோன் பார்க்க ரெண்டே*
*ழானுற்றோர் பார்க்கின் மன்ற*
*லாமவர் திசைபொ சிப்பில்.* *(3)*

*(இ-ள்.)* சுக்கிரனும் இலக்கனாதிபதியும் இலக்கன கேந்திர திரிகோணங்களில் இருக்க, இச்சாதகனுக்கு வாலிப வயதில் திருமணம் நடக்கும். ஜென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் உள்ள குருவை, இலக்கனாதிபதி பார்க்க, இரண்டாமிடம், ஏழாமிடம் இவற்றிற்கு அதிபதிகள் பார்த்தால், அவர்களுடைய திசை, புத்திகளில் இச்சாதக னுக்குத் திருமணம் நடக்கும்.

## ஒருமனைவி உடையவன்

*தேய்ந்திடும் மதியும் ஏழிற்*
*சென்றுறப் பாவர் கூடப்*
*பாய்ந்திடப் பார்க்கில் ஏக*
*பத்தினி யுடைய னாவான்*

சாய்ந்திட இரண்டே ழுள்ளோர்
தனித்தனி ஆட்சி மேவக்
காய்ந்ததீ யோர்பா ராறேற்
களத்திரம் ஒன்று தானே. (4)

(இ-ள்.) தேய்பிறைச் சந்திரன், சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் இருக்க, இச்சந்திரனுடன் பாவக்கோள்கள் கூடி நிற்க அல்லது பார்க்க, ஒரே பெண்ணைத் திருமணம் செய்து கொள்ளுவான். இரண்டாமிடம், ஏழாமிடம் இவற்றிற்கு அதிபதிகள் தனித்தனியாக ஆட்சி பெற்று இருக்க, இவர்களைப் பாவக்கோள்கள் பார்க்கவில்லையென்றால், இச்சாதகனுக்கு ஒரு மனைவி இருப்பாள்.

**இரண்டு மனைவியர் உடையவன்**

அறைந்திடும் ஏழு ஏழுக்
கதிபனும் சுபவர்க் கந்தான்
மறைந்திடு நீசாங் கிசத்தை
மருவிய ஏழிற் பாவர்
உறைந்திடில் அழக தாக
உபயதா ரத்தை உள்ளோர்
நிறைந்திடுங் கெவுளி பாத்திர
நிகர்துணை முலையி னாளே. (5)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடம், ஏழாமிடத்திற்கு அதிபனும் சுபவர்க்கம் பெற்றிருக்க, ஏழாமிடம் நீசாங்கிசத்தைப்பெற்று அதில் பாவக்கோள்கள் இருக்க, இச்சாதகன் இரண்டு மனைவியரை உடையவனாக விளங்குவான்.

**இதுவுமது**

பொற்பா ரேழுக் கதிபதியும்
புகரு நீசாங் கிசத்திருந்து
மற்பார் பாவ வர்க்கமுறில்
வருமே உபய களத்திரம்தான்

கற்பார் இரண்டேழ் தனைப்பாவர்
காணா திருக்கச் சுக்கிரனும்
பிற்பார் ஏழுக் கதிபதியும்
பலக்கிற் திரமாங் களத்திரமே. (6)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்திற்கு அதிபதியும் சுக்கிரனும் நீசாங்கிசத்தில் இருந்து பாவவர்க்கம் பெற இச்சாதகனுக்கு இரண்டு மனைவியர் இருப்பர். இரண்டாமிடம், ஏழாமிடம் இவற்றை பாவக்கோள்கள் பார்க்காமல் இருக்க, சுக்கிரனும் ஏழாமிடத்திற்கு அதிபதியும் பலம்பெற்று இருந்தால், இச்சாதகனின் மனைவி நிரந்தர மானவளாக இருப்பாள்.

**இதுவுமது**

மீதுற்ற காமத் தோனும்
விளங்கிய தனத்தி னானும்
மேதுற்ற பன்னி ரண்டில்
எட்டாறில் இருக்கச் சாமி
கோதுற்றுப் பார்க்க ஏழிற்
கொடியதீக் கோளே நிற்கிற்
தீதுற்ற உபய தாரம்
சித்திக்கும் என்று சொல்லே. (7)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்திற்கு அதிபதியும் இரண்டாம் இடத்திற்கு அதிபதியும் பன்னிரண்டாமிடம், எட்டாமிடம், ஆறாமிடம் இவற்றில் இருக்க, இலக்கனாதிபதி பார்க்க, ஏழாமிடத்தில் பாவக்கோள் இருக்க, இச்சாதகனுக்கு இரண்டு தாரங்கள் இருப்பார்கள் என்று சொல்லவேண்டும்.

**இதுவுமது**

உரிய ஏழில் ஏழுடையோன்
உச்சாங கிசத்திற் பாவர்நிற்க
புரியும் வியத்திற் சேயிருக்கப்
புகரோன் பாரா தேயிருக்கிற்

சரியாய் முந்தி வருந்தாரம்
தனக்குத் தோஷம் உண்டாகிப்
பரிவில் இரண்டாம் தாரந்தான்
பண்பாய் வரும்பங் கயந்திருவே! (8)

(இ-ள்.) செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளை யொத்த அழகுடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் ஏழாமிடத்திற்கு அதிபதி உச்சாங்கிசம் பெற்றிருக்க, அதில் பாவக்கோள் நிற்க, பன்னிரண்டாம் இடத்தில் செவ்வாய் இருக்க, சுக்கிரன் பாராமல் இருந்தால், இச்சாதகன் முதலில் திருமணம் செய்த பெண்ணுக்கு தோஷம் உண்டாகி இருப்பதால், இரண்டாம் தாரத்தைத் திருமணம் செய்து கொள்ளுவான்.

**மூன்று மனைவியர் உடையவன்**

ஊன்றா தேழில் இரண்டினிற் பாவர்க ளுறவேதான்
கூன்றா னிரண்டே ழுக்கிறைவ ரும்புகரும் குலமாதே
தோன்றாப் பாவிகள் வர்க்கம் தடையிற் றுடராக
மூன்றாங் களத்திரம் உண்டாம் எனவே மொழிவீரே! (9)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில், இரண்டாமிடத்தில் பாவக்கோள்கள் இருக்க, இரண்டாமிடம், ஏழாமிடம் ஆகியவற்றிற்கு அதிபர்களும் சுக்கிரனும் பாவ வர்க்கத்தில் இருக்க, இச்சாதகனுக்கு மூன்று திருமணங்கள் நடைபெற்று மூன்று மனைவியர் இருப்பார்கள்.

**நான்கு மனைவியர் உடையவன்**

பகரும் உதயம் இரண்டேழிற்
பாவர் இருக்க அதற்குடையோர்
புகரும் இவர்கள் நால்வரும்தான்
பொருந்த நீசம் அஸ்தமனம்

அகலும் பாவாங் கிசமே
ஆகிப் பாவர் மத்தியமுறில்
நிகரில் நாலாங் களத்திரத்தான்
நிசமாய் வருமென் றிசைந்துரையே. (10)

(இ-ள்.) சென்ம இலக்கனம், இரண்டாமிடம், ஏழாமிடம் ஆகிய இவ்விடங்களில் பாவக்கோள் இருக்க, அந்த இடங்களுக்கு அதிபதிகள் இவர்கள் நீச, அஸ்தமான வீடுகளில் இருக்க, பாவாங்கிசமே ஏறிப், பாவக்கோள்களுக்கு மத்தியில் இருக்க, இச்சாதகன் நான்காவது திருமணம் செய்துகொள்வான்.

**பல மனைவியர் உடையவன்**

ஐயமில்லாவு தயத்தோன்ற னதுபத்திற் புதனே
அடுத்திருக்க மூன்றேழில் அம்புலிதான் நிற்கத்
துய்யதொரு சுபர்பார்க்க வெகுகளத்திர மாகும்
சொல்லரிய தனத்தோனும் வியத்தோனும் கூடிப்
பையவே விக்கிரமத் தானத்தில் இருக்க
பாக்கியத்தோ னுடன்குருவும் பரிவாகப் பார்க்கில்
செய்யகம லத்திருபோல் வெகுகளத்ரம் உண்டாம்
திரண்டெழுந்த குரும்பைமுலைச் சேலரிகண்
மயிலே! (11)

(இ-ள்.) திரண்டு எழுந்த குரும்பையைப் போன்ற தனங்களையும் கெண்டைமீனையும் மானையும் போன்ற கண்களையும் மயிலின் சாயலையும் கொண்ட பெண்ணே! சென்ம இலக்கனத்திற்குப் பத்தாம் இடத்தில் புதன் இருக்க, மூன்றாமிடம், ஏழாமிடம் இவற்றில் ஒன்றில் சந்திரன் இருக்க, இவர்களைச் சுபக்கோள் பார்க்க, இச்சாதகனுக்கு அதிகமான களத்திரங்கள் இருப்பார்கள். இரண்டாமிடத்திற்கு அதிபதியும் பன்னிரண்டாமிடத்திற்கு அதிபதியும் குருவும் பார்க்க, அழகான மனைவி பார்ப்பாள்.

**இதுவுமது**

பத்திரண்டுக் குடையோர்கள் சுபகேந்திர கோணம்
பற்றிநிற்கச் சுபர்பார்க்கின் வெகுகளத்திரம் உண்டாம்
நித்தியமாம் ஏழுபதி னொன்றுடையோர் கூடி
நிகர்கேந்திர கோணமுற வேகிரகம் மாறக்
குற்றமின்றி நட்பாக எதிரெதிரே பார்க்கிற்
குறித்துரையாய் வெகுகளத்திரம்கொவ்வைநறுங்
கனியை
வித்துருமஞ் செழுங்குவளைத் தனைநிகருஞ் செவ்வாய்
வெண்டரள நகைவேற்கண் மின்னிடைப்பூங்
கொடியே. (12)

(இ-ள்.) சிவந்த கொவ்வைக் கனியைப் போன்ற இதழ்களையும், செங்குவளை போன்ற வாயினையும், வெண்மையான முத்துக்களைப் போன்ற பற்களையும் கொண்ட புன்னகையையும் வேல்போன்ற கண்களையும் மின்னலையொத்த இடையையும் கொண்ட பூங்கொடி போன்ற பெண்ணே! சென்ம இலக்கனத்திற்குப் பத்தாமிடம், இரண்டாமிடம் இவற்றிற்கு அதிபதிகள் சுப கேந்திர திரிகோணங்களில் இருக்க, அல்லது சுபக்கோள்கள் இவர்களைப் பார்க்க இச்சாதகனுக்கு அதிகமான மனைவியர் இருப்பார்கள். ஏழாமிடம், பதினோராமிடம் இவற்றுக்கு அதிபதிகள் ஒன்றுகூடி, கேந்திர திரிகோணங்களில் இருக்க அல்லது கிரகம் மாற (பரிவர்த்தனைப் பெற) அல்லது ஒன்றுக்கொன்று நட்புறவுடன் பார்க்க, இச்சாதகனுக்கு அதிகமான மனைவியர் இருப்பார்கள்.

**இதுவுமது**

எண்ணரிய பாக்கியத்தோன் ஏழிடத்தி லாக
ஏழிடத்தோன் நாலிலுற இரண்டுபதி னொன்றை
நண்ணியகோள் இருவருமே கேந்திரகோ ணத்தில்
நயந்துநிற்கில் வெகுதார நாடியதா ரேசன்

திண்ணியமாய் இருந்தநவாங் கிசபதியோன் இருந்தச்
செய்யவங்கி சாதிபதி சுபருடனே கூடிப்
பண்ணரிய சுபகேந்திர கோணமதில் இருந்து
பாராவ தாங்சமுறில் வெகுகளத்திரம் என்பர். *(13)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாம் இடத்திற்கு அதிபதி ஏழாமிடத்தில் இருக்க, ஏழாமிடத்திற்கு அதிபதி நான்காமிடத்தில் இருக்க, இரண்டாமிடம், பதினோராம் இடம் இவற்றிற்கு அதிபதிகள் கேந்திர திரிகோணங்களில் நிற்க, இச்சாதகனுக்குப் பல மனைவியர் இருப்பார்கள். ஏழாமிடத்திற்கு அதிபதி நின்ற நவாங் கிசாதிபதி இருந்த அங்கிசாதிபதி சுபக்கோளுடன் கூடி சுப கேந்திர திரி கோணங்களில் இருந்து, பார்வதாங்கிசம் ஏறி இருக்க, இச்சாதகனுக்குப் பல மனைவியர்கள் இருப்பார்கள்.

**இதுவுமது**

ஆனகுடும் பேசநின்ற இராசியோன் இருந்த
அங்சபதி கோபுராங் கிசமேறி பெலக்கில்
ஈனமின்று நூறுகளத் திரமுண்டாம் ஏழுக்
கிறைவன்வெள்ளி இருந்தபதிக் கதிபரங்ச முற்றோர்
தானேகேந் திரகோணத் திருந்துபா ராவ
தாங்சமுறில் இருநூறு களத்திரமுண் டாகும்
மானமுறு காமத்தோன் இரவியாய்ப் பாவ
வர்க்கமுறிற் பாவசிந்தை கற்புடைய ளாமே. *(14)*

*(இ-ள்.)* இரண்டாமிடத்திற்கு அதிபதி நின்ற இராசியாதிபதி இருந்த அங்கிசாதிபதி கோபுராங்கிசமேறி பலம் பெற்று இருக்க, இச்சாதகனுக்கு நூறு களத்திரங்கள் இருப்பார்கள். ஏழாமிடத்திற்கு அதிபதி, சுக்கிரன் நின்ற இடத்திற்கு அதிபதியின் அங்கிசம் இருந்தவர் கேந்திர திரிகோணங்களில் பார்வதாங்கிசமுறில், இச்சாதகனுக்கு இருநூறு களத்திரங்கள் இருப்பார்கள். ஏழாமிடத்திற்கு அதிபதி சூரியனாக பாவ வர்க்கம் இருக்க, பாவசிந்தனை இருப்பினும் இச்சாதகி, கற்புடையவளாக விளங்குவாள்.

### இதுவுமது

பரிவோடு காமத் தோனும்
பாராவ தாங்சம் ஏற
அரியதோர் உதயம் வாக்கு
உயர்கனம் இவற்றுள் ளோர்கள்
வரிசையாம் ஏழில் நிற்க
வந்திடும் களத்திரம் பத்தாம்
விரிவகல் அல்கு லன்ன
மென்னடை வேற்கண் மாதே! (15)

*(இ-ள்.)* விரிந்து அகன்ற அல்குலையும் அன்னத்தை ஒத்த மெல்லிய நடையையும் வேல்போன்ற கண்களையும் உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்திற்கு அதிபதி பார்வதாங்கிசம் ஏற, இலக்கனம், இரண்டாமிடம், இவற்றிற்கு அதிபதிகள் ஏழாமிடத்தில் நிற்க, இச்சாதக னுக்குப் பத்துக் களத்திரங்கள் இருப்பார்கள்.

### உயர்ந்த மனைவி உடையவன்

கூறுகாமா திபனிருந்த நவாங்கிசா திபனும்
கூறாறுக் குடையோனும் சனியுமே கூடி
மீதுகேந் திரகோணம் தனிலிருக்கின் மின்னே!
மென்மேலு மேயதிகக் களத்திரமுண் டாகும்
ஏறுமதி இரவிகுருமால் இவர்கூடி னாலும்
இரவிமதி குருவெள்ளி சனிகூடி னாலும்
தேறுகதிர் மதிகூடி னாலுமதி புகர்மால்
சேய்கூடி னாலுமுயர் களத்திரமாம் தேனே. (16)

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்திற்கதிபதி இருந்த நவாங்கிசாதிபனும் ஆறாமிடத்திற்கு அதிபதியும் சனியும் கூடி கேந்திர திரிகோணங்களில் இருக்க, இச்சாதகனுக்கு மேலும் மேலும் மனைவியர்கள் வாய்ப்பார்கள். சந்திரன், சூரியன், குரு, புதன் ஆகிய நான்கு கோள்கள் ஒன்றுகூடி இருந்தாலும், சந்திரன், சூரியன், குரு, சுக்கிரன், சனி ஆகிய ஐந்து கோள்கள் ஒன்றுகூடி இருந்தாலும்

சந்திரன் சூரியன் கூடி இருந்தாலும், சந்திரன், சுக்கிரன், புதன், செவ்வாய் கூடினாலும் உயர்ந்த களத்திரம் இச்சாதகனுக்கு வாய்க்கும்.

**இதுவுமது**

ஒன்றேழு பதினொன்றின் மதிபுதனின் றாலும்
உதயமேழிற் புகர்நின்றி டிற்களத்திர நலமாம்
சென்றேகும் வெள்ளிக்கே ஏழின்மதி குருமால்
சேர்ந்துநிற்கில் பாக்கியமாம் களத்திரமுண் டாகும்
நின்றேகு மதிகாரி சேய்கூடி நின்றாலும்வெகு தாரம்
நிறைலாபந் தன்னிற்குரு நின்றாலும்வெகு தாரம்
நின்றேறு கதிர்க்குவிலும் குருவிருக்க ஏழில்
நாலிறையும் மதிநிற்கில் வெகுதார மாமே. (17)

(இ-ள்.) சென்ம இலக்கனம், ஏழாமிடம், பதினாராமிடம் இவற்றில் ஒன்றில் சந்திரனும் புதனும் ஒன்றுகூடி நின்றாலும், இலக்கனத்தில் அல்லது ஏழாமிடத்தில் சுக்கிரனும் இருக்க, இச்சாதகனுக்கு நல்ல மனைவி அமைவாள். சுக்கிரனுக்கு ஏழாமிடத்தில் சந்திரன், குரு , சந்திரன் ஆகிய மூன்று கோள்களும் சேர்ந்து நிற்க பாக்கியங்கள் அனைத்தையும் பெற்ற மனைவி, இச்சாதகனுக்கு அமைவாள். சந்திரன், சனி, செவ்வாய் ஆகிய மூன்று கோள்களும் கூடி இருந்தாலும் பதினோராமிடத்தில் குரு நின்றாலும் அதிகமான மனைவியர் இச்சாதகனுக்கு இருப்பார்கள். சூரியன் இருக்க, ஏழாமிடத்தில் நான்காமிடத்திற்கதிபதியும் சந்திரனும் இச்சாதகனுக்கு பல மனைவியர் இருப்பார்கள்.

**இதுவுமது**

ஒன்பதில் வெள்ளி நிற்க
ஒருபத்தில் இராகுற் றாலும்
துன்பமில் ஏழோன் உச்சம்
சொல் சேத்ர கேந்திர கோணம்

*அன்புடன் இருக்கு மேனும்*
*அழகதாய் அநேக தாரம்*
*பொன்மது மத்தி யிலவர்*
*பூங்குயில் அனைய தேனே!* *(18)*

*(இ-ள்.)* பொன்போன்ற நிறத்தையும் தேனைச் சிந்தும் மலர்களைச் சூடிய கூந்தலையும் குயில்போன்ற இனிய மொழியையும் கொண்ட பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாமிடத்தில் சுக்கிரனும் பத்தாமிடத்தில் இராகுவும் இருக்க, ஏழாமிடத் திற்கு அதிபதி உச்ச, ஆட்சி வீடுகளில் அல்லது கேந்திர திரிகோணங்களில் இருக்க, இச்சாதகனுக்குப் பல மனைவியர் இருப்பார்கள்.

### மூன்று மனைவியர் உடையவன்

*இலகு மேழுக் கிறைகுரு வெள்ளியாய்க்*
*குலவு கேந்திர கோணத் திருந்திட*
*பலமு றுஞ்சனி பார்வை யுறாவிடில்*
*அலகி ரண்டுமூன் றாகும் களத்திரம்.* *(19)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு அதிபதி குருவாகவோ சுக்கிரனாகவோ இருந்து கேந்திர திரிகோணத்தில் இருக்க, பலமிக்க சனியின் பார்வை கிட்டாவிடில், இச்சாதகனுக்கு இரண்டு அல்லது மூன்று மனைவியர் இருப்பார்கள்.

### கற்புடைய மனைவி உடையவன்

*தனத்தோன் ஏழிற் றனித்திருக்கச்*
*சாற்றும் வியாழம் மிகுநட்பாம்*
*இனத்தாம் அங்சம் உற்றிருக்கில்*
*ஏக தாரம் எனச்சொல்வார்*
*வனத்தாம் சாமிக் கேழிலுச்சர்*
*மருவ இரண்டில் உறைமதியை*
*கனத்தான் நல்லோன் பார்க்கின்வரும்*
*கற்பை யுடைய களத்திரமே.* *(20)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்திற்கு அதிபதி, ஏழாமிடத்தில் இருக்க, குரு நட்பாக, அங்கிசம் பெற்றிருக்க, இச்சாதகன் ஒரே மனைவியைப் பெற்றவனாக இருப்பான். சென்ம இலக்கனாதிபதிக்கு ஏழாமிடத்தில் உச்சக்கோள் இருக்க, இரண்டாமிடத்தில் உள்ள சந்திரனை நல்லோர்கள் பார்க்க, இச்சாதகனுக்குக் கற்பையுடைய மனைவி அமைவாள்.

**களத்திரத்தின் குணங்கள்**

மந்திரி கேந்திர கோண
மலிவுறக் காமத் தோனே
அந்தமாம் உதயம் ஏழில்
அடையிற்கற் புடைய தாரம்
தந்தா ரேசன் பாவர்
சர்ப்பத்திரே காண மேவிப்
பந்தரா குடனே பத்திற்
படிலவ மான தாரம். (21)

(இ-ள்.) குரு, கேந்திர, திரிகோணங்களில் இருக்க, ஏழாமிடத்திற்கு அதிபதி இலக்கனத்திற்கு ஏழாமிடத்திலேயே இருக்க, இச்சாதகனுக்குக் கற்புடைய மனைவி அமைவாள். ஏழாமிடத்திற்கு அதிபதி பாவக்கோள் அல்லது சர்ப்பத் திரேகாணத்தில் இருக்க அல்லது இராகுவுடன் பத்தாமிடத்தில் இருக்க, இச்சாதகனுக்கு அவமானத்தைத் தரக்கூடிய மனைவி அமைவாள்.

**இதுவுமது**

காமநேத் திரமி ரண்டுக்
கதிபர்சேய் பாம்பைக் கூடி
பாமருங் குருராங் கிசத்தில்
படிற்றுட்ட களத்திர மாகும்
மாமது வல்ல தாகி
அடுத்திடும் தாரம் ரெண்டாம்
தோமருங் கவலை எய்தித்
தொந்தரைப் படுவன் றானே. (22)

(இ-ள்.) ஏழாமிடம், இரண்டாமிடம் ஆகிய இரண்டு இடங்களுக்கும் அதிபர்கள் செவ்வாய், பாம்புடன் கூடி குரூராங்கிசத்தில் இருக்க, இவனுக்குத் தீய களத்திரம் அமையும். இவை வல்லதாக இருந்தால் இரண்டு தாரங்கள் வாய்ப்பார்கள். அவர்களால் இச்சாதகன் தொந்தரவு அடைவான்.

**இதுவுமது**

தாரேசன் மதியு மாகிச்
சத்திய பாவ மத்யம்
போரேறு பாவ வர்க்கம்
பொருந்திடிற் கடினி யாகி
பாரேனும் எண்ணா ளாகி
அடிபட்டுக் கொண்டென் னாளும்
பேரேதுர் மாக்கி என்ற
பேருள தாரம் எய்தும். *(23)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்திற்கு அதிபதி சந்திரனாகிப் பாவக்கோள்களுக்கு மத்தியில் இருந்து பாவவர்க்கம் பெற்று இருக்கில், இச்சாதகனுக்கு அமையும் மனைவி கடின சித்தம் உடையவளாகி, உலகைப் பற்றி எண்ணாதவளாக, எந்நாளும் அடிவாங்கிக்கொண்டு, தீய நடத்தையைக் கொண்டவளாக விளங்குவான்.

**இதுவுமது**

தங்குதா ரேசன் சேயாய்
சனியுறு குரூர சட்டி
அங்கிசம் ஏறி நீசம்
அஸ்தமா னந்தா னாகி
பங்கமில் சுபர்நோக் காரேற்
பரருடன் கூடிக் கொண்டே
இங்கிதக் கணவ னோடே
மிகுஞ்சண்டை இடுவள் தானே. *(24)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஏழாம் இடத்திற்கு அதிபதி செவ்வாயாக, சனி குரூர சஷ்டி அங்கிசம் ஏறி, நீசம் அல்லது அஸ்தமனம் பெற்று இருக்க, இவர்களைச் சுபக் கோள்கள் பார்க்கவில்லையென்றால், இச்சாதகி பிறருடன் உறவு கொண்டு, கணவனுடன் மிகுந்த சண்டையிடுபவளாக இருப்பாள்.

**இதுவுமது**

பன்னுதா ரேசன் மாலாய்ப்
பாவமத் தியமாய் நீசம்
துன்னுமு டத்தைச்சார்ந்து
சுபதிஷ்டி இல்லா தாயின்
மன்னுங்கா தலனைக் கொல்வள்
வருங்குல நாச மாக
உன்னுந்தீ வினைகள் செய்வள்
ஒளிகதிர் வேற்கண் ணாளே! (25)

(இ-ள்.) கதிரைப் போன்று ஒளிபொருந்தி வேல் போன்ற கண்களைக் கொண்ட பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்திற்கு அதிபதியாகப் பாவக்கோள் களுக்கு மத்தியில் நீசம் அல்லது அஸ்மனத்தைப் பெற்ற புதன், சுபக்கோள்களின் பார்வை இல்லாமல் இருந்தால், இச்சாதகி தன்னுடைய காதலனைக் கொல்வாள்; குலம் நாசமாகத் தீயச்செயல்களைச் செய்வாள்.

**இதுவுமது**

வெள்ளிதான் பாவர் மத்திய
மேவியே நீச மூடம்
தன்னிட இருந்து பாவம்
உறுவர்க்கம் பெற்று நிற்கில்
அள்ளிலை வேற்கண் நல்லாய்!
அவமான வேசை மிக்காய்க்
கள்ளியாய்த் திருடி யாகிக்
கபடியாய் இருப்பள் தானே. (26)

(இ-ள்.) இலையைப் போன்றும் வேலைப் போன்றும் கூரிய கண்களை உடைய பெண்ணே! சுக்கிரன் பாவர்களுக்கு மத்தியில் அமைந்து நீசம், அஸ்தமனம் பெற்று பாவ வர்க்கம் பெற்று இருந்தால், இச்சாதகி அவமானத்தைத் தருபவளாகத் திருடியாக, கபடம் உள்ளவளாக இருப்பாள்.

**இதுவுமது**

சனியனே பாவ மத்யம்
தனையுற்றே அத்த மானம்
புனிதமி னாச மேவி
பொருந்திய ஏழில் நிற்கில்
கனிவிலா வேசை யாகிக்
கடினியாய்த் திருடி யாகித்
தொனிபர தூஷ ணஞ்செய்
துன்மார்க்கி யாவள் மாதே! (27)

(இ-ள்.) சனி, பாவக்கோள்களுக்கு மத்தியில் இருந்து அஸ்தமனம் பெற்றுத் தீயக்கோள்களுடன் சேர்ந்து, ஏழா மிடத்தில் இருக்கில், இச்சாதகி, தீய நடத்தையை உடைய வளாகி, பிறர் பொருளைக் கவர்ந்து, குற்ற வார்த்தைகளைப் பேசி, தீயவழியில் செல்பவளாக விளங்குவாள்.

**இதுவுமது**

கொடுங்கதிர் பாம்பி னோடு
கூடித்துர்த் தானம் மேவி
நடுங்கியே பாவ வர்க்கம்
நண்ணியே நீசம் ஏறி
அடுஞ்சுபர் பாரா ராகில்
வைக்கியாதி உடைய ளாகித்
தொடும்புரு டனுக்கே நஞ்சு
சூதினால் கொடுத்துக் கொல்வாள். (28)

(இ-ள்.) சூரியன், பாம்போடு சேர்ந்து தீய ஸ்தானங் களில் இருந்து பாவவர்க்கம் பெற்று நீசம் அடைய, இதனைச்

சுபக்கோள் பார்க்காவிடில் இச்சாதகி பழிவாங்குபவளாகத் தன்னுடைய கணவனுக்கு விஷத்தைக் கொடுத்துக் கொல்பவளாக இருப்பாள்.

**இதுவுமது**

மதிசனி ஏழிற் கூடில்
வரும்பொல்லாக் களத்ரம் என்பார்
பதியும்சேய் ஏழிற் நிற்கப்
பாவிமா ரோக தாரம்
துதிகுரு ஏழிற் நீசம்
தோன்றிடிற் துஷ்டை யாவள்
அதிபதி வேடம் ஏழுற்
றாற்றுஷ்ட களத்ர மாமே. *(29)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஏழாம் இடத்தில் சந்திரனும் சனியும் சேர்ந்து இருக்க, இச்சாதகனுக்குப் பொல்லாத மனைவி வாய்ப்பாள். இலக்கனாதிபதியும் செவ்வாயும் ஏழாமிடத்தில் நிற்க, இச்சாதகனுக்கு பாவியான, நோயுடைய மனைவி கிடைப்பாள். குரு ஏழாமிடத்தில் நீசம் பெற்று இருக்க, இச்சாதகனின் மனைவி தீயவளாக இருப்பாள். ஏழாமிடத்தில் பரிவேடமிட்டால், இச்சாதகனுக்குத் தீய மனைவி வாய்ப்பாள்.

**இதுவுமது**

குசன்சனி இராகு ஏழிற்
குறிகிடு மேனும் பாவர்
நிசம்பெறு பானு வங்சம்
நின்றிடு மேனும் துஷ்டை
துசங்கொள்மா சனிநின் றாலும்
சுடரவன் மதிநின் றாலும்
கசந்துவே றாகும் பொல்லா
களத்திரம் என்று கூறே. *(30)*

(இ-ள்.) செவ்வாய், சனி, இராகு ஆகிய மூன்று கோள்களும் சென்ம இலக்கனத்திற்கு ஏழாம் இடத்தில் இருந்தாலும், பாவக்கோள் சூரிய அங்கிசம் பெற்று இருப்பினும் இச்சாதகி, கொடுமையானவள். ஏழாமிடத்தில் புதன், சனி ஆகிய இரண்டு கோள்கள் நின்றாலும், சூரியனும் சந்திரனும் இருந்தாலும், இச்சாதகர் பொல்லாத களத்திரத்தை, அடைவர். இருவரும் ஒருவரை ஒருவர் விட்டு பிரிந்து போவர்.

## இதுவுமது

இசையும்லக் கனத்திற் காரி
இருக்கிற்பொல் லாத தாரம்
அசைவில்கா மத்தில் மாந்தி
அடைந்திட அழகி லாதாள்
வசையில்சுக் கிரனுக் கேழில்
வக்கிரன் இருக்கிற் கள்ளி
திசைபடாப் பழிகள் சொல்வள்
தேசிலாப் பாவி யாமே. (31)

(இ-ள்.) சென்ம இலக்கனத்தில் சனி இருக்க, இச்சாதக னுக்குப் பொல்லாத களத்திரம் அமையும். ஏழாமிடத்தில் மாந்தி இருக்க, இச்சாதகனுக்கு அழகில்லாத மனைவி அமைவாள். சுக்கிரனுக்கு ஏழாமிடத்தில் செவ்வாய் இருக்க, இச்சாதகனின் மனைவி பிறருடைய பொருளை அபகரிப்ப வளாகவும் பழிகள் சொல்பவளாகவும் பாவம் செய்பவ ளாகவும் இருப்பாள்.

## இதுவுமது

வெள்ளிக் கேழில் இரவிநிற்கின்
மிகவுங் கலகி குளிகன்நிற்கில்
எள்ளு நிறமும் ரோகமுள்ளாள்
இராகு நிற்கில் அழகில்லாள்

கள்ளி பாவி ரோகியதாம்
கடும்பா வியருக்குள் குருவுநிற்கில்
பிள்ளை தன்னைப் பெற்றிழப்பாள்
பேசும் மதலைக் குயின்மொழியே! (32)

(இ-ள்.) சிறுகுழந்தையைப் போன்று இனிமையான குயில் போல் குரலில் பேசக்கூடிய பெண்ணே ! சுக்கிரனுக்கு ஏழாம் இடத்தில் சூரியன் நிற்கில், இச்சாதகி மிகவும் கலகம் செய்வாள். குளிகன் நின்றால், இச்சாதகி நோயுள்ளவளாக விளங்குவாள். இராகு நின்றால் இச்சாதகி அழகில்லாத வளாகவும், பிறர்பொருளைக் கவர்பவளாகவும் பாவ காரியங்களைச் செய்பவளாகவும் நோயாளியாகவும் இருப்பாள். இரண்டு பாவக்கோள்களுக்கு இடையில் குரு இருந்தால், இச்சாதகி குழந்தையைப் பெற்று இழப்பாள்.

**குழந்தைப்பேறு அற்றவள்**

இரவி உதயம் தனிலிருக்க
ஏழ்புக ரோனி ருக்கப்பொன்
பாவி பாரா திருந்திடினும்
பன்னும் ஏழிற் சனிபுதனும்
இரவி உறினும் ஓரேழில்
வெய்யோன் இருக்க உதயமொன்பான்
புரவிவ் விடம்விட் டெவ்விடத்தும்
பொன்னோன் இருக்கின் மலடியென்பார். (33)

(இ-ள்.) சென்ம இலக்கனத்தில் சூரியன் இருக்க, அதற்கு ஏழாமிடத்தில் சுக்கிரன் இருக்க, குரு பாராமல் இருந்தாலும், ஏழாமிடத்தில் சனியும் புதனும் சூரியனும் ஒன்றுகூடி இருந்தாலும் ஏழாமிடத்தில் சூரியன் இருக்க, இலக்கனம், ஒன்பதாமிடம் ஆகிய இவ்விரண்டு இடங்களை யன்றி மற்ற இடங்களில் குரு இருக்க, இச்சாதகி குழந்தைப் பேறு இல்லாதவளாக இருப்பாள்.

## இதுவுமது

புகரும் ஏழுக் குடையோனும்
புகர்க்குச் சனிக்கு நடுவுறினும்
திகரும் ஏழில் உபகேது
நிற்கு மேனும் மலடியென்பார்
பகரும் ஏழில் மதியங்சம்
பண்ண ஏழோன் தான்நிற்கிற்
சுகமில் கணவன் தனைக்கொல்வாள்
துடிநே ரிடையஞ் சனவிழியே! (34)

(இ-ள்.) துடியைப் போன்ற அழகான மெல்லிய இடையையும் மை பூசப்பட்ட கண்களையும் உடைய பெண்ணே! ஏழாமிடத் திற்கு உடையவன், சுக்கிரனுக்கும் சனிக்கும் நடுவில் இருந்தாலும், ஏழாமிடத்தில் உபகேது இருந்தாலும், இச்சாதகி பிள்ளைப்பேறு அற்றவள் என்பர். ஏழாமிடத்தில் மதி அங்சம் பெற்று ஏழாமிடத்திற்கு அதிபதி இருக்க, இச்சாதகி, தன்னைக் கொடுமை செய்த கணவனைக் கொல்வாள்.

## களத்திரத்தின் குணம்

மேடலக் கனத்திற் செங்கதிர் இருக்க
மிகும்பாவர் காமத்திற் கூட
வேடவிழ் வெள்ளி கன்னிஅங் கிசமாய்
இருந்திடிற் புருடனைக் கொல்வாள்
தேடரும் ஏழுக் குடையவன் புதனாய்த்
தீயவர் தன்னுடன் கூடி
ஈடரும் பலம்போய்ப் பாவமத் தியமாய்
நின்றிடிற் புருடனைக் கொல்வள். (35)

(இ-ள்.) சென்ம இலக்கனம் மேடமாக அதில் சூரியன் இருக்க, ஏழாமிடத்தில் பாவக்கோள் இருக்க, சுக்கிரன், அங்கிசத்தில் இருக்க, இச்சாதகி, கணவனைக் கொல்பவளாக இருப்பாள். ஏழாமிடத்திற்கு அதிபதி புதனாகத் தீயக் கோள்

களுடன் கூடி பலமற்று பாவக்கோள்களுக்கு இடையில் இருக்க, இச்சாதகி, தன் கணவனைக் கொல்பவளாக இருப்பாள்.

**இதுவுமது**

ஏழினிற் சாமி இருந்திடச் சனியின்
ஏழினிற் அங்கிச மாக
ஆழியாம் புகர்க்கோ ரேழினிற் சனியன்
உறில்விப சாரமாம் தாரம்
ஆழிய ஏழின் மிகுவிடக் கடிகை
அமர்ந்திட இராகுவும் சனியும்
நாழிய குளிகன் சேயுமே கூடித்
தானிற்கின் வேசையாம் தாரம். *(36)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் இலக்கனாதிபதி இருக்க, சனி, ஏழாமிடத்தோனின் அங்கிசம் பெற்று விளங்க, சுக்கிரனுக்கு ஏழாமிடத்தில் சனி இருக்க, இச்சாதகனின் மனைவி தீய நடத்தையை உடையவளாக விளங்குவாள். ஏழாமிடத்தில் விடக்கடிகை இருக்க, இராகு, சனி, குளிகன், செவ்வாய் ஆகிய நான்கு கோள்களும் ஒன்று கூடி இருக்க, இச்சாதகனின் மனைவி தீய நடத்தையை உடையவளாக விளங்குவாள்.

**இதுவுமது**

எழுதிலக் கினத்துக் கேழாம்
இடம்புகர் வீட தாகப்
பழுதுறு சனிசேய் நிற்கப்
பகர்பொன்னோன் பாரா னாகிற்
கெழுவிய கொழுநன் காணத்
தான்விப சாரம் செய்வள்
கழுவினில் நெய்யு ருக்கும்
கள்ளிய தார மாமே. *(37)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடம், சுக்கிரனின் ஆட்சி வீடுகளான இடபமாகவோ துலாமாகவோ இருக்க, இவற்றிலொன்றில் சனி, செவ்வாய் ஆகிய இரண்டு கோள்களும் ஒன்றுகூடி இருக்க, குரு பாராமல் இருக்க, இச்சாதகி, தன் கணவன் அறிய, தீய நடத்தையை உடைய வளாக இருப்பாள். மேலும் பிறர் பொருளை அபகரித்துத் தன்னைக் குற்றமற்றவள் எனக் காட்டிக் கொள்பவளாக இருப்பாள்.

**களத்திரன் பருவம்**

விரவேழின் மதிநிற்கில் சமவயதை உடையாள்
வெள்ளிநிற்கில் தனக்கிளையாள் சனிராகு நிற்கில்
பரவுவய ததிகமென்பார் மதிபொன்சனி கூடிற்
பகர்விருத்தை வெள்ளிசனி சேய்கூடி னாலும்
திரவுதய லக்கனத்திற் சனிஇருக்கு மேனும்
சேருதயம் இரண்டேழிற் சனிஇராகு மாந்தி
வரவிசைந்தொன் றாய்க்கூடி மகிழ்ச்சியாய் நிற்கின்
மையலாம் விதவைதனை மகிழ்ந்தணைவன் மாதே. *(38)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் சந்திரன் இருக்க, இச்சாதகனும் இவன் மனைவியும் ஒத்த வயதை உடையவர்கள். சுக்கிரன் இருக்க, இச்சாதகனின் மனைவி இவனைக் காட்டிலும் இளையவள். சனி இராகு இருக்க, இச்சாதகனின் மனைவிக்கு இவனைக் காட்டிலும் வயது அதிகம். சந்திரன், குரு, சனி ஆகிய மூன்று கோள்களும் ஒன்றுகூடி இருக்கின் இவன் மனைவி மூத்தவளாக இருப்பாள். சுக்கிரன், சனி, செவ்வாய் ஆகிய மூன்று கோள்களும் கூடி இருந்தாலும், சென்ம இலக்கனத்தில் சனி இருந்தாலும், இலக்கனம், இரண்டாமிடம், ஏழாமிடம் ஆகியவற்றில் சனி, இராகு, மாந்தி ஆகிய மூன்று கோள்களும் ஒன்றுகூடி இருந்தாலும், இச்சாதகன் விதவையோடு உறவு கொள்வான்.

## களத்திரன் குணம்

சேருதயம் இரண்டேழில் இருந்தபுகர் மதிக்குத
திகமேலிற் சனிஇராகு குளிகனுடன் நிற்கில்
கூறுமதில் அவமான நீசஸ்திரி கமனம்
குறிக்குமிவ ருடன்பாவர் இருக்கசுபர் பார்க்கில்
நேறுசங் கரசாதி மடந்தையரைப் புணர்வன்
நீடுதயம் இரண்டேழில் நின்றமதி புகர்க்கு
மாருமொரு ஏழிற்சேய் கேதுடனே கூட
அதற்குடையோர் தனைக்கூட தூரஸ்திரி கமனன். *(39)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனம், இரண்டாமிடம், ஏழாமிடம் இவற்றில் ஒன்றில் நின்ற சுக்கிரன், சந்திரன் இவர்களுக்கு ஏழாம் இடத்தில் சனி, இராகு, குளிகன் ஆகிய மூன்று கோள்களும் ஒன்றுகூடி நிற்கில், அவமானமுடைய கீழான பெண்ணுடன் இச்சாதகன் சேருவான். இவர்களுடன் பாவக்கோள்கள் இருக்க, சுபக்கோள் பார்க்க, இச்சாதகன் சங்கர சாதியைச் சார்ந்த பெண்ணுடன் சேருவான். இலக்கனம் இரண்டாமிடம், ஏழாமிடம் இவற்றில் நின்ற சந்திரன், சுக்கிரன் இவர்களுக்கு ஏழாமிடத்தில் செவ்வாய், கேதுவுடன் கூட அல்லது அவ்விடத்திற்கு உரியவனுடன் சேர, இச் சாதகன் தூரமான பெண்ணை சேருவான்.

## இதுவுமது

உதயமிரண் டேழ்பத்திற் சனிசெவ்வாய் பார்க்க
உடனிற்க இதற்குடையோர் தனைக்கூடிப் புகரை
இதயமுற்று கூடபுகருக் கேழில்நிற்கு மேனும்
எழில்விதவை தனைச்சேர்வன் சாமிக்கோ ரேழிற்
புதைவுறுதீ யோர்கூட உதயமிரண் டேழிற்
புகர்க்கேழிற் குளிகனிற்க அவர்களுடன் கூடிற்
சிதையுமுறின் மேற்பட்ட தொழுத்தயரைச் சேர்வன்
சீதளப்பங் கயமுகைபோற் சிறந்ததன மயிலே! *(40)*

(இ-ள்.) குளிர்ச்சியையுடைய தாமரை மொட்டினைப் போன்ற அழகான தனங்களையும் மயில்போன்ற சாயலையும் உடைய பெண்ணே ! சென்ம இலக்கனம், இரண்டாமிடம், ஏழாமிடம், பத்தாமிடம் ஆகியவற்றில் சனி, செவ்வாய் ஆகிய இரண்டு கோள்களும் இருக்க, அல்லது இவ்விடங்களைப் பார்க்க, இவ்விடங்களுக்கு அதிபதியைக் கூடி, சுக்கிரனோடு சேர்ந்தாலும், சுக்கிரனுக்கு ஏழாமிடத்தில் நின்றாலும், இச்சாதகன் விதவையோடு உறவு கொள்வான். சென்ம இலக்கனாதிபதிக்கு ஏழாமிடத்தில் பாவக்கோள்கள் சேர, இலக்கனம், இரண்டாமிடம், ஏழாமிடம் ஆகிய இடங்களில் குளிகன் நிற்க, சுக்கிரனுக்கு ஏழாமிடத்தில் குளிகன் நிற்க, அல்லது அவ்விடத்ததிபதிகளுடன் கூடி நிற்க, இச்சாதகன் பல பணிப்பெண்களோடு உறவு கொள்வான்.

**இதுவுமது**

நாட்டுதயம் இரண்டேழிற் சேயிரவி கூட
நவில்குளிகன் உடன்நிற்கில் விதவைதனை
அணைவன்
பூட்டுபுகர் உதயத்தில் இரண்டேழி லாகப்
புகன்மாந்தி யுடன்சேரிற் கர்ப்பஸ்திரி கமனன்
நீட்டுகதிர் சேர்ந்திருக்கத் திரள்பாவர் நாலில்
நிற்கப்பொன் பார்வையன்றி நாலோனும் மதியும்
மீட்டுபா வரைக்கூடி ஏழிநிற்க அன்றி
ஏழுக்குடை யோனைக்கூடில் எழின்மாதுர்
கமனன். (41)

(இ-ள்.) சென்ம இலக்கனம், இரண்டாமிடம், ஏழாமிடம் ஆகிய இடங்களில் ஒன்றில் செவ்வாயும் சூரியனும் கூடி இருக்க, இவர்களுடன் குளிகனும் சேர்ந்து இருந்தால் இச்சாதகன், விதவையைச் சேருவான். சென்ம இலக்கனம், இரண்டாமிடம், ஏழாமிடம் ஆகியவற்றில் சுக்கிரன், மாந்தியுடன் சேர்ந்து இருக்க, இச்சாதகன், கர்ப்பமான பெண்ணைச் சேருவான். சூரியனோடு பாவக்

கோள் சேர்ந்து நான்காமிடத்தில் இருக்க, குரு பார்வை இல்லாமல், நாலாமிடத்திற்கு அதிபதியும் சந்திரனும் பாவக்கோளைக் கூடி ஏழாமிடத்தில் நிற்க, அல்லது ஏழாமிடத்திற்கு அதிபனைச் சேரில், இச்சாதகன் அழகான பெண்களைச் சேருவான்.

**இதுவுமது**

*தூயமதி சுக்கிரனும் கூடிசேர்ந் திருக்கச்*
*சுபக்கிரகப் பார்வையின்றி நாலேழுக் குடையோர்*
*நேயமுடன் கூடியே சதுர்த்தகேந் திரத்தில்*
*நிற்கின்மா துருகமன் ஏழிரண்டுக் குடையோர்*
*ஆயநா லுடையோனைக் கூடிநிற்க வெள்ளி*
*அருக்கன்மதி பாவருடன் கூடிச்சேர்ந் திருக்க*
*வேயநா லாமிடத்திற் பாவரே இருக்கின்*
*மிகமாதுர் கமனனென விளம்புவர்கற் றுணர்ந்தோர். (42)*

(இ-ள்.) முழுச்சந்திரனும் சுக்கிரனும் ஒன்றுகூடி இருக்க, சுபக்கிரகங்களின் பார்வை இல்லாமல், நான்கு, ஏழாம் இடத்திற்கு அதிபதிகள் ஒன்றுகூடி நான்கு கேந்திரங்களில் ஒன்றில் நிற்கின், இவன் தாயின் மீது கமனம் உடையவனாக இருப்பான். ஏழாமிடம் இரண்டாமிடம் இவற்றிற்கு அதிபதிகள், நான்காம் இடத்திற்கு அதிபதியைக் கூடி நிற்க, சுக்கிரன், சூரியன் சந்திரன் ஆகியவை பாவக் கோள்களுடன் சேர்ந்திருக்க, நான்காமிடத்தில் பாவக்கோள் இருக்க இச்சாதகன் தாயின்மீது கமனம் உடையவனாக இருப்பான் என்று கற்றுணர்ந்த சோதிட வல்லவர்கள் கூறியுள்ளார்கள்.

**இதுவுமது**

*நாலுடையோன் பாவவர்க்க மாகியே பாவர்*
*நடுநிற்கப் பாவருடன் கூடவன்றிப் பார்க்க*
*வேலுதயம் பாக்கியத்துக் கிறைவர்பலம் தாழ*
*ஏழுநா லுக்குடையோர் கூடியே பலக்கிற்*

கோலுமாதுருகமனன் நாடுமிவர்தன்னைக்
குருபார்க்கின் மாதுருச மானிதனைப் புணர்வன்
சேலுமிளம் பிறையுமணிச் சிலையுமுயர் மலையும்
சேயரிக்கண் நுதல்புருவம் தனம்நிகர்தெள் ளமுதே! (43)

(இ-ள்.) கெண்டைமீன் போன்ற கண்களையும் இளம்பிறை போன்ற நெற்றியையும் நீலமணி நிறத்தைக் கொண்ட, வில்போன்ற புருவங்களையும் உயர்ந்த மலை போன்ற தனங்களையும் கொண்ட தெளிந்த அமுதத்தை ஒத்த மொழியினையுடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு நான்காம் இடத்திற்கு அதிபதி பாவ வர்க்கமாகி, பாவக் கோள்களுக்கு நடுவே நிற்க, அல்லது பாவக்கோளோடு சேர அல்லது பாவக்கோள் பலமின்றி இருக்க, ஏழாமிடம், நான்காமிடம் ஆகிய இடங்களுக்கு உரியோர் பலம் பெற்று இருக்க, இச்சாதகன் தாய்மீது கமனமுடையவன். இவர்களைக் குரு பார்க்க, இச்சாதகன் தாயாருக்குச் சமமான பெண்ணைச் சேருவான்.

## இதுவுமது

மொழியிரண் டேழ்க்குடையோர் சுக்கிரனைக் கூடி
மூன்றுநா லினிலிருக்க மூன்றுடையோன் பாவர்
அழிவுறவே கூடிநிற்கப் பார்க்கவே பொன்னோன்
அருநோக்கி லாதுவிடிற் சோதரியைப் புணர்வன்
விழிலின்முன் றினிற்பாவர் இருக்கமூன் றுடையோன்
வெகுபாவ ருடன்கூடி ஏழிநிற்க அல்லால்
பழிசெய்யும் ஏழோனைப் புகர்தனைக்கூ டச்சேய்
பார்க்கப்பொன் பார்வையற்றால் சோதரியைப்
புணர்வன். (44)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடம், ஏழாமிடம் ஆகிய இடங்களுக்கு அதிபதிகள் சுக்கிரனைக் கூடி, சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடம் அல்லது நான்காமிடத்தில் இருக்க, மூன்றாம் இடத்திற்கு அதிபதி, பாவக்கோளுடன் சேர்ந்து இருக்க, அல்லது பாவக்கோள்

பார்க்க, குருவின் பார்வை இல்லாவிடில், இச்சாதகன், சகோதரியைச் சேருவான் என்றவாறு. சென்ம இலக்கனத் திற்கு மூன்றாமிடத்தில் பாவக்கோள் இருக்க, மூன்றாம் இடத்திற்கு அதிபதியை அல்லது சுக்கிரனைச் சேர, குருவின் பார்வையின்றி இருக்க, இச்சாதகன் சகோதரியைச் சேருவான்.

**இதுவுமது**

*சந்திரன் சட்டாட்ட வியத்திருக்க வல்லாற்*
*சாற்றுசெவ்வா யுடன்கூட நாலிலுறப் பாவர்*
*வந்தியுறப் பார்க்கவொன்று நாலதிபன் கூடி*
*வருகுடும்பத் தானத்திற் காமத்தா னத்தின்*
*முந்திநிற்க தெய்வமந்திரி நோக்கில்லா தாயின்*
*மொழியுமா துருக்கிணையாம் மொய்க்குழலைச் சேர்வன்*
*இந்திரதனு வைப்பழிக்கும் புருவவில்லி னாளே!*
*இப்பொருளைக் கணிதநூல் எடுத்துரைத்த வாறே. (45)*

(இ-ள்.) இந்திரவில்லைப் பழிக்கக்கூடிய வகையில் அழகுடன் விளங்கும் புருவ வில்லினை உடைய பெண்ணே! சந்திரன், ஆறு, எட்டு, பன்னிரண்டாம் இடங்களில் ஒன்றில் இருக்க அல்லது செவ்வாயுடன் கூடி நான்காமிடத்தில் இருக்க, பாவக்கோள் பார்க்க, இலக்கனாதிபதி, நான்காமிடத் திற்கு அதிபதி ஒன்றுகூடி இரண்டாமிடம் அல்லது ஏழா மிடத்தில் நிற்க, குருவின் பார்வை இல்லையாயின் தாய்க்கு இணையான பெண்ணைச் சேருவான் என்ற கணித நூல் வல்ல அறிஞர் பெருமக்கள் எடுத்துரைத்துள்ளார்கள்.

**இதுவுமது**

*இணங்குபக விற்சனிக்க மதிசுக்கிரன் கூடி*
*ஏழில்நிற்க ஏழுடையோன் இசைநாலில் இவர்கள்*
*அணங்கியநா லுக்குடையோன் உதயமே மேவில்*
*மாதுருசோ தரிகாமி நிசியதனிற் பிறக்க*

இணங்கியமதி யேழுக்குடையோன் தனைகூடி நாலிற்
மேலதிருக்க உதயத்தோன் தனக்கொன்ப
துடையோன்
குணங்குறியும் பலயீன மாகியே நிற்கில்
மாதுருசோ தரியைக்குறித் தணைவர்காண் மாதே!(46)

(இ-ள்.) பகலில் பிறந்து, சந்திரன், சுக்கிரன் கூடி ஏழாமிடத்தில் இருக்க, நான்காமிடத்தில், ஏழாமிடத்திற் குரியவன் நிற்க, நான்காமிடத்திற்கு அதிபதி சென்ம இலக்கனத்தில் இருக்க இச்சாதகன் தாயின் சகோதரியைச் சேருபவனாக இருப்பான். இரவினில் பிறக்க, சந்திரன், ஏழாமிடத்திற்கு அதிபதியுடன் கூடி, நான்கா மிடத்தில் இருக்க, சென்ம இலக்கனாதிபதிக்கு ஒன்பதாம் இடத்திற்கு உரியவன் பலவீனமாகி இருந்தால், இச்சாதகன், தாயின் சகோதரியைச் சேருபவனாக இருப்பான்.

**இதுவுமது**

நிறைகுரு வெள்ளி கேந்திரம்
நின்றிட ஐந்தும் ஐந்துக்
கிறையுமே பாவ வர்க்கம்
எய்திடச் சனியன் பார்க்க
உறையும்லக் கனத்தில் ராகு
உறுதியாய் இருக்கு மாயின்
மறைவின்றிப் புத்ரி தன்னை
மருவுவன் மகிழ்ச்சி யாலே. (47)

(இ-ள்.) குரு, சுக்கிரன் ஆகிய இரண்டு கோள்களும் கேந்திரத்தில் நிற்க, ஐந்தாமிடமும், ஐந்தாமிடத்திற்கு அதிபதியும் பாவவர்க்கம் அடைய, இவர்களைச் சனி பார்க்க, இலக்கனத்தில் இராகுவும் இருக்க, இச்சாதகன் தன் மகளுடன் சேருவான்.

### இதுவுமது

ஒன்றொன்ப துடையோன் பாவ
        ருடன்கூடிப் பாவ வர்க்கம்
நின்றிடப் பாவ மத்ய
        நிலையுறக் கதிரோன் சுங்கன்
மன்றலாய்க் கூடி கேந்திர
        மலிவுற இலக்க னத்திற்
குன்றிடாச் செவ்வாய் நிற்கில்
        குருதார கமன னாவான். *(48)*

(இ-ள்.) சென்ம இலக்கனாதிபதி, ஒன்பதாம் இடத்திற்கு அதிபதி பாவக்கோளுடன் ஒன்றுகூடி பாவ வர்க்கத்தை அடைய, பாவக்கோள்களுக்கு இடையே இருக்க, சூரியன், சுக்கிரன் இவர்களோடு கூடி கேந்திரத்தில் இருக்க, சென்ம இலக்கனத்தில் செவ்வாய் இருக்க, இச்சாதகன் குருவின் மனைவியுடன் சேருவான்.

### இதுவுமது

ஒள்ளிய குருவும் பானும்
        உதயத்தில் இருக்க வேதான்
வள்ளிய காமத் தோனும்
        வருமூர்த்தி யோனும் பார்க்கில்
வெள்ளிய மறையோர் தங்கள்
        ஏந்திழை தன்னைச் சேர்வன்
துள்ளிய கயலைப் பாயும்
        துணைநெடுங் கண்ணி னாளே! *(49)*

(இ-ள்.) துள்ளுகின்ற கயல்மீன்களைப் போன்று அங்கும் இங்கும் பாயக்கூடிய இரண்டு நீண்ட கண்களை உடைய பெண்ணே! குருவும் சூரியனும் சென்ம இலக்கனத்தில் இருக்க, ஏழாமிடத்திற்கு அதிபதி அல்லது இலக்கனாதிபதி இவர்களைப் பார்க்க, இச்சாதகன், அந்தணப் பெண்ணைச் சேருவான்.

**இதுவுமது**

தொக்குறு காமத் தோனும்
சுடரவன் தானும் கூடிற்
பக்குவ மாகி நன்மைப்
படாதமின் தன்னைச் சேர்வர்
தக்ககா மத்தோன் நாலிற்
சதுப்பாகத் திரேகா ணத்தின்
மிக்கதீக் கோட்கள் ஒன்றின்
மிருகத்தைப் புணர்வன் மின்னே! (50)

(இ-ள்.) ஏழாமிடத்திற்கு அதிபதியும், சூரியனும் ஒன்று கூடி இருப்பின், இச்சாதகன் தீய பெண்களுடன் உறவு கொள்வான். ஏழாமிடத்திற்கு அதிபதி, நான்காமிடத்தில், கேந்திர, திரிகோணங்களில் இருக்க, இவனுடன் பாவக்கோள் சேர்ந்து இருக்க, இச்சாதகன், மிருகங்களைச் சேருவான்.

**இதுவுமது**

ஏர்த்திருங் களத்தி ரத்தோன்
இரண்டுமூன் றுடையோர் கூடிப்
பார்த்திரு நாலேழ் எய்திற்
பசுவைமை துனமே செய்வன்
கோர்த்திடும் இவரைக் காரி
நோக்கிடில் எருமை மாட்டை
தூர்த்திடும் செவ்வாய் பார்க்கில்
ஆட்டைமை துனமே செய்வன். (51)

(இ-ள்.) ஏழாமிடத்திற்கு அதிபதி, இரண்டாமிடம், மூன்றாமிடம் இவற்றிற்கு அதிபதிகள் கூடி நான்காமிடம், ஏழாமிடம் ஆகிய இடங்களில் இருக்க, இச்சாதகன் பசுவோடு சேருவான். இவரைச் சனி பார்க்க இச்சாதகன் எருமையோடு சேருவான். இவரைச் செவ்வாய் பார்க்க இச்சாதகன் ஆட்டோடு சேருவான்.

**இதுவுமது**

ஏர்த்திடுங் களத்தி ரத்தோன்
இரண்டுமூன் றுடையோர்கூடிப்
பயங்கொள் சனிசேய் ராகுவதிர்
பார்க்கிற் கழுதை தனைப்புணர்வன்
தயங்கும் இவரைச் சசிபார்க்கிற்
தானே கழுதை தனைப்புணர்வான்
மயங்கு நோயால் தூரஸ்திரி
மகிழ்ச்சி யாகப் புணர்வானே. (52)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடம், மூன்றாமிடம் இவற்றிற்கு அதிபதிகள் நான்காமிடம், ஏழாமிடம் ஆகியவற்றில் ஒன்றில் ஒன்றுகூடி நிற்க, சனி, செவ்வாய், இராகு ஆகிய மூன்று கோள்களும் பார்க்க, இச்சாதகன் கழுதையோடு சேருவான். இவரைச் சந்திரன் பார்க்க, இச்சாதகன் கழுதையோடு சேர்வான். மேலும் விலக்கான பெண்ணைச் சேருவான்.

**இதுவுமது**

கூர்க்கும்ஒன் றாறே ழன்னோர்
கூடிட ஒன்றுக் கொன்று
மார்க்கமாய்ப் பார்க்க ஆட்டை
மைதுனம் செய்வன் மாதே!
பேர்க்குமே ழுடையோன் ஆறில்
இருந்திடச் சாமி பார்க்கிற்
சேர்க்குநற் பகன்மின் னாரைச்
சேருவன் தினமும் தானே. (53)

(இ-ள்.) இலக்கனாதிபதி, ஆறாமிடம், ஏழாமிடம், ஒன்பதாமிடம் ஆகிய இடங்களுக்கு அதிபதிகள் ஒன்றுகூடி இருக்க, அல்லது ஒன்றுக்கொன்று பார்க்க, இச்சாதகன் ஆட்டோடு சேருவான். ஏழாமிடத்திற்கு அதிபதி ஆறா மிடத்தில் இருக்க இலக்கனாதிபதி பார்க்க, இச்சாதகன் பகலில் பெண்களோடு சேருபவனாக இருப்பான்.

### இதுவுமது

மீட்டுறு மாந்தி இராகு
வக்கிரன் காமத் தோனும்
கீட்டுதூ மாதி பஞ்சக்
கிரகங்கள் ஒன்றாய்க் கூடிற்
கோட்டுதா டனமுந் தந்தக்
குறிநகக் குறியும் மங்கைக்
கூடுங்கைக் குட்டும் வேண்டுஞ்
சூரன்மை துனமே செய்வன். (54)

(இ-ள்.) மாந்தி, இராகு, செவ்வாய், ஏழாமிடத்திற்கு அதிபதி, தூமாதிகளான தூமன், விதிபாதன், பரிவேடம், இந்திர தனுசு, தூமகேது ஆகிய கோள்கள் ஒன்றாகக் கூடி இருக்க, இச்சாதகன், தந்தக்குறி, நகக்குறி ஆகியவை தோன்றச் சேருவான்.

### தீய நடத்தையுடைய மனைவி

சேய்காமத் தோன்மூன்றுக் கதிபனைப் பார்த்திடக்
கூடச் செவ்வாய்
இயல்பாகவே கூடப் பார்க்கி லிவர்கேந்திரத்தில்
இலக்க னேசன்
தயவாக இருக்கிற்பகற் சும்பனஞ்செய் வான்தினமுந்
தான மோகம்
நயமாகும் இவன்மனையாள் விபசாரி யாயிருப்பள்
நளின மாதே ! (55)

(இ-ள்.) செவ்வாய், ஏழாமிடத்திற்கு அதிபதி, மூன்றாமிடத்திற்கு அதிபதியைப் பார்த்திட அல்லது அக்கோள்களோடு சேர, இவர்களோடு செவ்வாய் கூடி இருக்க அல்லது பார்க்க, இவர்கள் கேந்திரத்தில் இலக்கனேசன் இருக்க, இச்சாதகன் பகசும்பனம் செய்பவனாகவும் இவன் மனைவி தீய நடத்தையை உடையவளாகவும் விளங்குவாள்.

**தனங்கள்**

பத்தினிற்சேய் இருக்கவன்றி எதிர்பார்த்திட் டாலும்
பருதிகுசன் காமத்தோன் கூடில்சுக தனத்தாள்
வைத்தசனி இராகுவுடன் கூடில்கொஞ்ச தனத்தாள்
மந்திரிசல் லியன்கூடில் அழகுடைய தனத்தாள்
குத்திருமன் மூன்றைந்துக் குடையாரே ழோனைக்
கூடிடினும் பார்த்திடினும் பருத்ததன முடையாள்
சத்திமதி ஏழுடையோன் தனைக்கூடிப் பார்க்கச்
சலராசி ஏழாகிற் தொப்பைதனத் தவளே. (56)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பத்தாமிடத்தில் செவ்வாய் இருக்க, அல்லது அந்தத் தானத்தைப் பார்த்தாலும், செவ்வாய், ஏழாமிடத்திற்கு அதிபதி இருவரும் கூடி இருக்குமாயின், இச்சாதகி சுக தனத்தாள். சனி, இராகுவுடன் கூடி இருக்குமாயின், இச்சாதகி சிறிய தனத்தை உடையவள். குரு, சுக்கிரன் ஒன்று கூடி இருக்குமாயின், இச்சாதகி அழகுடைய தனத்தாள். மூன்றாமிடம், ஐந்தாமிடம் இவற்றிற்கு அதிபதிகள் ஏழாமிடத்திற்கு அதிபதியைப் பார்த்தாலும், இம்மூன்று அதிபதிகள் கூடி இருந்தாலும் இச்சாதகி பருத்த தன முடையவள். ஏழாமிடம் சல இராசியானால் தொப்பை தனமுடையவள்.

**இதுவுமது**

சந்திரன்மால் காமத்தோன் ஒன்றாகக் கூடி
சலஇராசி தனிலிருக்கிற் சல்லியமாம் முலையாள்
முந்தியிவர் வக்கிக்கிற் றிருக்குமெத்த முறுக்கு
முலையினாள் சனியிருக்கச் சேய்பார்க்கு மேனும்
உந்தியதோர் கடினதனம் சனிஇராகு குளிகன்
உயர்பத்தாம் இடமிருக்கில் வற்றியதோர் தனமாம்
தந்திரதூ மாதிபஞ்சக் கிரகம்பத் திருக்கிற்
சமதனமென் றுரைப்பார்கள் தான்கணித நூலோர். (57)

(இ-ள்.) சந்திரன், புதன், ஏழாமிடத்திற்கு அதிபதி ஆகிய மூன்று கோள்களும் ஒன்றுகூடி சல இராசியில் இருக்க, இச்சாதகி சல்லிய தனங்களைக் கொண்டவள். இக்கோள்கள் வக்கரித்திருக்க முறுக்கிய தனங்களை உடையவளாக இச்சாதகி விளங்குவாள். சனி இருக்க, செவ்வாய் பார்க்க இச்சாதகி, கடின தனங்களைக் கொண்டவள். பத்தாம் இடத்தில் சனி, இராகு, குளிகன் ஆகிய மூன்று கோள்களும் இருக்க இச்சாதகி, வற்றிய தனங்களைக் கொண்டவள். தூமன், விதிபாதன், பரிவேடம், இந்திர தனுசு, தூமகேது முதலான கிரங்கள் இருக்க இச்சாதகி, சம தனங்களைப்பெற்றவர்களாக விளங்குவாள்.

**இதுவுமது**

அரியபத் தினிற்பொன் நிற்கில்
அழகிய தனத்தா ளாகும்
பரிவொடு மதிதான் நிற்கில்
பருத்தெழுந் தனத்தி னாளாம்
சரியதாம் ஏழிற் சாரி
தான்பார்க்கிற் பருத்த கொங்கை
வரியராய்ச் சனிசேய் கூடின்
வற்றியவற் பதன மாமே. (58)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பத்தாம் இடத்தில் குரு இருக்க, இச்சாதகி அழகிய தனங்களை உடையவள். அவ்விடத்தில் சந்திரன் இருக்க இச்சாதகி, பருத்த தனங்களை உடையவள். ஏழாமிடத்தில் காரி இருக்க அல்லது ஏழாம் இடத்தைப் பார்க்க, இச்சாதகி, பருத்த தனங்களை உடையவள். ஏழாமிடத்தில் சனி, செவ்வாய் ஆகிய இரு கோள்களும் ஒன்றுகூடி இருக்க இச்சாதகி, வற்றிய சிறிய தனங்களைக் கொண்டவள்.

## அல்குல்

நலியும் சனியும் புதனுக்கு
நடுவில் ஏழுக் கிறையுறினும்
மலியும் ஏழுக் கிறைகேழின்
மந்தன் புகர்மால் மதியிருக்க
மெலிந்த தொடையாள் நீண்டுவற்றி
விரிவி லாத பகமுடையாள்
ஒளிசெய் வளைக்கை மதனரசம்
ஒழுகும் கனிவாய் ஒண்தொடியே! (59)

(இ-ள்.) ஒளிபொருந்திய வளையல்களை அணிந்த கைகளையும் மதனரசம் ஒழுகும் கனிவான வாயையும் உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு ஏழாம் இடத்திற்கு அதிபதி, சனி, புதன், சந்திரன் ஆகிய நான்கு கோள்களும் ஏழாமிடத்தில் சேர்ந்திருக்க, இச்சாதகி மெலிந்த தொடைகளுடன் நீண்ட வற்றிய விரிவில்லாத அல்குலை உடையவளாக விளங்குவாள்.

## இதுவுமது

உடன்படும் ஏழா னுக்கும்
உயர்வெள்ளி தனக்கும் ஏழாம்
இடஞ்சல இராசி யாக
வியன்மதி இருக்க நற்கோள்
அடர்ந்துதான் பார்ப்பா ராகில்
அழகதாய் அகன்று யர்ந்தே
படம்பெறு பகத்தை யுள்ளாள்
பாலும்தே னனைய மானே! (60)

(இ-ள்.) பாலையும் தேனையும் ஒத்த இனியமொழி பேசும் மானை ஒத்த பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்திற்கு அதிபதி நின்ற இராசிக்கும் சுக்கிரன் நின்ற நின்ற இராசிக்கும் ஏழாமிடமாக சலஇராசி இருந்து, அந்த இராசியில் சந்திரன் இருக்க, இந்தச் சந்திரனை நற்கோள் பார்க்க, இச்சாதகி அகன்று உயர்ந்த பாம்பின் படத்தை ஒத்த அல்குலை உடையவளாக இருப்பாள்.

### இதுவுமது

பன்னு மேழோனை மதிபுகர் தனைப்பொன்
பார்த்திடில் மனோர்த பகமாம்
பின்னுந்தா னிவர்கள் சுபருடன் கூடப்
பெலகேந்திர கோணத்தில் இருக்கில்
உன்னுபொற் பகமாந் தனமுமே பருத்தே
உயர்ந்தழ காய்மெது வாகும்
என்னுமிக் கோளைச் சனியனே பார்க்கில்
இவையெலாம் சூட்கமென் றுரையே. (61)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்திற்கு அதிபதி, சந்திரன், சுக்கிரன் ஆகியோரைப் பார்க்க, இச்சாதகி நல்ல அல்குலைப் பெற்றவளாக இருப்பாள். இவர்கள் சுபக்கோளுடன் கூடி பலம்பெற்றுக் கேந்திர திரிகோணத்தில் இருக்க, இச்சாதகி நல்ல அல்குலையும் பருத்து உயர்ந்த, அழகான, மென்மையான தனங்களைக் கொண்டவளாக இருப்பாள். இவர்களைச் சனிபார்க்க இச்சாதகிக்கு அல்குலும் தனங்களும் வறட்சி பொருந்தியனவாக இருக்கும்.

### இதுவுமது

வனிமதி புகர்பொன் தன்னை
மன்னிய காமத் தோனைச்
சனிசெவ்வாய் இராகு மாந்தி
தான்கூட பார்க்க வேதான்
கனிவுரு பகஞ்சா வர்க்கம்
கடினியாய் விரண மாகித்
தொனிபெறு ரோக முள்ள
தொடையினாள் என்று கூறே. (62)

(இ-ள்.) சந்திரன், சுக்கிரன், குரு ஆகிய மூன்று கோள் களையும் ஏழாமிடத்திற்கு அதிபதியையும் சனி, செவ்வாய், இராகு, மாந்தி ஆகிய நான்கு கோள்களும் பார்க்க, அல்லது அவர்களோடு சேர்ந்திருக்க, இச்சாதகி, கடினமான, புண்ணான, நோயுடைய அல்குலையும் தொடைகளையும் கொண்டவளாக இருப்பாள்.

## இரதித்தலம்

கருதும் இரதித் தலம்கூறில்
காமத் தோனைக் குருகூடின்
மருவும் தேவா லயமென்பர்
மன்னும் புகரே சலக்கரையாம்
சருவும் இராகு சனிகுளிகன்
தனக்குத் தோட்டம் வழிக்கரையில்
அருணன் தனக்கே காடுசெடி
அல்லோன் தனக்கே சுயக்கிரகம். *(63)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்திற்கு அதிபதியுடன் குரு சேர்ந்திருக்க, இச்சாதகன், உறவுகொண்ட இடம் தேவாலயம் என்பர். சுக்கிரன் சேர்ந்திருக்க, இச்சாதகன் சலக்கரையில் உறவு கொண்டிருப்பான். இராகு, சனி, குளிகன் ஆகியோர் சேர்ந்திருக்க, இச்சாதகன் தோட்டம், வழிக்கரை போன்ற இடங்களில் உறவு கொண்டிருப்பான். சூரியன் சேர்ந்திருக்க, காடு செடிகள் சூழ்ந்த இடத்தில் இச்சாதகன், உறவு கொண்டிருப்பான். சந்திரன் சேர்ந்திருக்க, இச்சாதகன் தன்சொந்த வீட்டில் உறவு கொண்டிருப்பான்.

## இதுவுமது

களத்திரா திபனைச் செவ்வாய்
கலந்திடிற் தனித்த வீடு
விளங்கிடும் கூறை யில்லா
வீடுதான் இரதித் தானம்
அளப்பலா புதனே யாகி
அவள்பிறந் தகவீ டென்பார்
வளப்பமாங் கணித நூலோர்
வகுத்துரை செய்த வாறே. *(64)*

*(இ-ள்.)* இலக்கனத்திற்கு ஏழாம் இடத்திற்கு அதிபதியுடன் செவ்வாய் சேர்ந்து இருக்க, இச்சாதகன், தனித்த வீட்டில் உறவு கொண்டிருப்பான். அவ்வீடு கூறையில்லாத வீடாக இருக்கும். புதன் சேர்ந்திருக்க, இச்சாதகன் உறவு

கொண்ட இடம் அவனுடைய மனைவியின் பிறந்த வீடாக இருக்கும் என்று கணித நூல் கற்றவர்கள் வகுத்துரைத்துள்ளார்கள்.

**இதுவுமது**

அந்தமாம் ஏழில் ரண்டுக்
கதிபர்க்குப் புகர்கேந் திரிக்கச்
சொந்தலக் கனத்திற் பாவர்
தோன்றிட சாமி தானே
பெந்திராப் பாவ ரோடே
ஏழெட்டில் அஞ்ச மேனும்
பந்தமாய்ப் பாம்பே ழோனும்
பகசும்ப னங்கள் செய்வான். (65)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் இரண்டாம் இடத்திற்கு அதிபதி இருக்க, இதற்கு கேந்திரத்தில் சுக்கிரன் இருக்க, சென்ம இலக்கனத்தில் பாவக்கோள்கள் நிற்க, இலக்கனாதிபதி பாவக்கோளோடு சேர்ந்து ஏழு, எட்டாம் அதிபதிகளின் அங்சங்களில் இருந்தாலும் பாம்பும் ஏழாமிடத்திற்கு அதிபதியும் சேர்ந்திருப்பினும் இச்சாதகன் பகசும்பனம் செய்பவனாக இருப்பான்.

**இதுவுமது**

எட்டிரண்டுக் குடையோனும் சுக்கிரனும் கூடி
இரண்டிலுற வாக்கேசன் எதிர்பார்க்கு மேனும்
தொட்டதனத் தோன்காமத் துறையைச்சேர்ந் தாலும்
துய்யதனத் தோன்காமத் தினிலிருக்கு மேனும்
வட்டமதிக் கும்புகர்க்குச் சாமிக்கும் இரண்டேழ்
வாய்த்தகிர கங்கூட வல்கிரகம் மாற
அட்டிஇவ ரங்கிசத்தோன் இப்படிநின் றாலும்
பரிந்துதான் சும்பனமே பண்ணுவன்பைங்
கொடியே!(66)

(இ-ள்.) பசுங்கொடி போன்ற பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடம், இரண்டாமிடம் இவற்றிற்கு அதிபதிகளும் சுக்கிரனும் சேர்ந்து இரண்டாம் இடத்தில் இருக்க, இரண்டாமிடத்திற்கு அதிபதி இவர்களைப் பார்த்தாலும், இரண்டாம் இடத்திற்கு அதிபதி, ஏழாம் இடத்திற்கு அதிபதியோடு சேர்ந்தாலும், இரண்டாம் இடத்திற்கு அதிபதி ஏழாமிடத்தில் இருந்தாலும், சந்திரனுக்கும் சுக்கிரனுக்கும், இலக்கனாதிபதிக்கும் இரண்டாமிடம், ஏழாமிடங்களில் சுபக்கோள்கள் இருக்க, பாவக்கோள்கள் இன்றி இவ்விடங்களில் பாவர் அங்கிசத் தோன் நின்றாலும், இச்சாதகன் சும்பனம் செய்வான்.

**இதுவுமது**

பத்தாம் இடத்துக் கிறைதனக்கும்
பண்பாம் புகர்க்கும் இரண்டேழ்கும்
உத்தா ரங்கசா திபர்தமக்கும்
ஓங்கும் நாலாம் இடத்திறைக்கும்
வித்தாம் இரண்டேழ் இறைகூட
விரைத்துக் கிரகம் மாறிடினும்
முத்தார் முலையை நெருடிமெள்ள
முகர்வுற் றினிதாய்ச் சுவைத்திடுவன். (67)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு அதிபதிக்கும் சுக்கிரனுக்கும் இரண்டாமிடம், ஏழாமிடம் இவற்றின் அதிபதி களுக்கும் அங்கிசாதிபதிக்கும் நான்காம் இடத்திற்கு அதிபதி ஆகியோருக்கு இரண்டாமிடம், ஏழாமிடம் இவற்றிற்கு அதிபதிகள் ஒன்றுகூடி இருந்தாலும் கிரகம் மாறி (பரிவர்த்தனை) இருந்தாலும், இச்சாதகன், தனங்களை வருடிச்சுவைப்பவனாக இருப்பான்.

**இதுவுமது**

இல்லாம் ஒன்றோ டேழுக்
கிறையவர் ஒன்றாய்க் கூடி
வல்லது முந்து மங்சம்
ஆகியே ஒன்றாய்க் கூடிற்

செல்லுறும் இரதித லத்திற்
செங்கைதா னடத்தி னோசை
கல்லென வுபரி மாற
காரியைக் கலந்து வாழ்வான். (68)

(இ-ள்.) இலக்கனாதிபதி, ஏழாமிடத்திற்கு அதிபதி ஒன்றாகக் கூடி, அல்லது அதன் அங்கிசம் பெற்று ஒன்றாக இருக்க, இச்சாதகன் இரதிதலத்தில் செங்கையதனால் ஓசைவர காரிகையைக் கலந்து வாழ்வான்.

**இதுவுமது**

ஒன்றுநா லேழுக் குள்ளோன்
ஒன்றாகக் கூடி நாலில்
நின்றிட ஒன்றுக் கொன்று
நிறைவொடு பார்க்க நாற்கால்
என்றரா சியிலே நிற்கில்
இனியதோர் தேனும் பந்தத்
துன்றிடக் கலவி செய்யும்
தோகையைப் புணரு வானே. (69)

(இ-ள்.) சென்ம இலக்கனம், நான்காமிடம், ஏழாமிடம் இவற்றுக்கு அதிபதிகள் ஒன்றாகக் கூடி நான்காமிடத்தில் இருக்க, அல்லது ஒன்றை ஒன்று பார்க்க, இவை நாற்கால் இராசிகளான மேடம், இடபம், சிங்கம், தனுசு ஆகிய இராசிகளில் ஒன்றி இருக்க, இச்சாதகன் தேனினும் இனிமையான பெண்ணோடு உறவு கொள்வான்.

**ஏழாம் பாவத்தில் சூரியன் நின்றபலன்**

கிலமிற்றா ரேசனுடன் குசன்கூடி நிற்கிற்
கிரந்தியுள்ளாள் இராகுநிற்கில் கடிகிரந்தி யுடையாள்
அலகில்குளி கன்கூடி னால்விரணக் கிரந்தி
அடைந்தவள்கா மத்தானத் தருக்கனே நிற்கிற்

குலவுவஞ்சன் கோபிஅற்பன் சஞ்சாரன் தரித்திரன்
கூறுமவ மானத்தன் பொல்லாத தேகன்
பலசுகவி ரோதன்கொள் பாரித்தே பகைவன்
பார்மன்னர் கோபத்தாற் பயனுடையன் என்பார். (70)

(இ-ள்.) குற்றமற்ற ஏழாமிடத்திற்கு அதிபதியுடன் செவ்வாய் சேர்ந்து நின்றால், இச்சாதகி கிரந்தி நோய் உள்ளவளாக இருப்பாள். இராகு சேர்ந்து நிற்கில் இச்சாதகி, கடி கிரந்தி உடையவள்; குளிகன் சேர்ந்து நின்றால் புண்ணோடு கூடிய கிரந்தி நோய் கொண்டவள்; ஏழாமிடத்தில் சூரியன் நின்றால், இச்சாதகன் வஞ்சகனாகவும், கோபம் உடையவனாகவும் இருப்பான்; அற்பன்; அலைபவன்; வறுமை உடையவன்; அவமானம் கொண்டவன்; ஆரோக்கியமற்றவன்; சுகம் குறைந்தவன்; திருமணம் செய்த மனைவியிடம் பகைமை பாராட்டுபவன்; அரசரின் கோபத்தால் நன்மை அடைபவன்.

**ஏழாம் பாவத்தில் மதி, செவ்வாய் நின்ற பலன்**

நவிலேழில் மதியிருக்கிற் றட்சணியன் கனவான்
நல்லகளத் திரமுடைய நவிலுறும்ஸ்திரீ வசியன்
புவிமீதிற் சஞ்சாரன் களத்திரத்தால் இலாபம்
போகபாக் கியமுடையன் சருவசன மித்ரன்
கவிநயன அலங்காரன் எழுதனிற் செவ்வாய்
கலந்திருக்கிற் பாவகளத் திரம்சனி ரோகி
குவிகளத்திர வீனன்உறு களத்திரத்தாற் சேதம்
கூறுபயக் களத்திரமாம் களத்திரத்தாற் றுக்கம். (71)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் சந்திரன் இருக்க, இச்சாதகன், பிறரைக் காப்பவன்; உயரந்தவன், நல்ல களத்திரத்தை உடையவன்; அலைச்சல் உள்ளவன், மனைவியால் இலாபம் உடையவன்; அனைத்துப் பாக்கியங்களையும் கொண்டவன்; அனைவரிடமும் அன்பு பாராட்டி நண்பனாக விளங்குவான்; அலங்காரப் பிரியன் என்பர். ஏழாமிடத்தில் செவ்வாய் இருக்க, இச்சாதகன், பாவ

களத்திரம் கொண்டவன்; ஏழாமிடத்தில் சனி இருக்க, இச்சாதகன் நோய் உடையவன். களத்திர குறைபாடு உடையவன். களத்திரத்தால் பொருள் அழிவு உடையவன்; பயமுடைய களத்திரன்; களத்திரத்தால் துக்கம் உடையவன்.

### ஏழாம் பாவத்தில் புதன் நின்ற பலன்

*தருமேழிற் புதனிருக்கிற் றனராச யோகம்*
*சஞ்சாரம் கீர்த்திப்ர தாபநல்ல தாரம்*
*பெருமையுள்ளி பரியாசன் சமர்த்தனற்ப போகி*
*பேசுகல்விப் பிரசங்கன் றிரிவசனப் பிரியன்*
*அருமையுள்ள நல்லகுண சத்தியவான் சீல*
*னாகியபுத் திரசோபன் காலத்திற் புத்திரன்*
*மருவியகன் னியர்மோகன் வார்த்தையில்வல் லவனாம்*
*மதனபா ணத்தைநிகர் வாட்டடங்கண் மயிலே.* (72)

(இ-ள்.) காமனுடைய மலரம்புகளை ஒத்த வாள் போன்ற கூரிய பெரிய கண்களையும் மயில்போன்ற சாயலையும் உடைய பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்கு ஏழாம் இடத்தில் புதன் இருக்க, பொருள் உடையன்; இராச யோகம் உடையவன்; பயணங்களை மேற்கொள்பவன்; பரிகாசம் செய்பவன்; திறமைசாலி; சுகம் குறைந்தவன், கல்வியைப் பிரசங்கம் செய்பவன்; பெண்களிடம் பேச விரும்புவான்; நல்ல குணம் உடையவன்; சத்தியவாக்குப் பேசுபவன்; ஒழுக்க சீலன்; புத்திரர்களைக் கொண்டவன்; கன்னியர் மீது விருப்பம் கொண்டவன்; பேச்சாற்றல் உள்ளவன்.

### ஏழாம் பாவத்தில் குரு, சுக்கிரன் நின்ற பலன்

*குலவேழிற் குருவிருக்க மோககளத் திரமாம்*
*கூறாடை ஆபரணம் அலங்காரச் சுகமாம்*
*இலகுதயி ரியன்சாமி பிதுர்குருத்து வேஷி*
*இராசகன்னி யர்லாபம் பிரசித்தம் உடையன்*

அலகில்பாக் கியமுடையன் புகரேழில் நிற்கில்
அதிரூபன் சனமித்திரன் வெகுகாமி கல்விப்
பலமில்பரத் திரிகமனன் தன்மசிந்தை யாகி
பகருபய களத்திரமாம் பங்கயப்பெண் ணமுதே! (73)

(இ-ள்.) செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளைப் போன்று அழகுடனும் அமுதம் போன்று இனிமையுடனும் விளங்கும் பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு ஏழாம் இடத்தில் குரு இருக்க, இச்சாதக னுக்கு விரும்பும் மனைவி இருப்பாள்; ஆடை ஆபரண அலங்காரங்களில் ஆர்வம் உடையவன்; சுகமுடையவன்; தைரியம் மிக்கவன்; காமம் உடையவன்; தந்தையையும் குருவையும் குறை கூறுபவன்; இராச கன்னியரால் இலாபம் அடைபவன்; பலருக்கும் தெரிந்தவன்; பாக்கியங்களைக் கொண்டவன்; சுக்கிரன் ஏழாமிடத்தில் இருக்க, இச்சாதகன் அழகன், அனைவருக்கும் நண்பன்; மிகுந்த காமம் உடையவன்; கல்விமான்; பிற பெண்களிடம் விருப்பம் உடையவன்; தர்ம சிந்தனை மிக்கவன்; பயக்களத்திரம் உடையவன்.

**ஏழாம் பாவத்தில் சனி நின்ற பலன்**

திகழேழிற் சனியிருக்கிற் றரித்திரசஞ் சாரன்
தீர்க்கரோ கத்தையுளன் சுமைசுமந்து திரிவன்
புகல்பாவ புத்திசொற்ப தனம்பொல்லா ரூபம்
புன்செல்வ நாசம்அப வாதம்அங்க வீனம்
நிகரில்வயித் தியநீசன் கன்மிசனப் பகையும்
நீடுசேவ கன்வேசை நிகரானக் களத்திரம்
சுகமில்களத் திரநாசம் களத்திரவ மானம்
துர்புத்தி மந்தமுளன் அற்பபுத்திரர் உளரே. (74)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்திற் சனி இருக்க, இச்சாதகன் வறுமையை உடையவன்; அதிக பயணங்களைக் கொண்டவன்; நோயாளி; சுமை சுமந்து அலைபவன்; பாவ சிந்தனை உடையவன்; அழகற்றவன்;

குறைந்த செல்வம் உடையவன்; அழிவினைச் செய்பவன்; வீண் பழிபாவங்களுக்கு ஆளாகுபவன்; உடல் குறைபாடு உடையவன்; மருத்துவன்; கீழானத் தொழிலையுடையவன்; அனைவரிடமும் பகை பாராட்டுபவன்; பிறரிடம் பணி செய்பவன்; தீய நடத்தையுடைய மனைவியை உடையவன்; மனைவி மரணம் அடைவாள்; மனைவியால் அவமானம் உடையவன்; தீய சிந்தனை மிக்கவன்; சோம்பல் உடையவன்; குறைந்த புத்திரர்களை உடையவன்.

**ஏழாம் பாவத்தில் இராகு நின்ற பலன்**

*மிகுமேழில் இராகுநிற்கிற் பரதார கமனன்*
*வேசைதனை விருத்தைதனைப் புணர்வன்திரி மோகித்*
*தடும்போக பாக்கியமாம் கர்வியுதா சீனன்*
*சனவசியன் விபாசரத் துட்டகளத் திரமாம்*
*தொகுமேழிற் கேதுநிற்கிற் றூரஸ்திரி கமனன்*
*சோம்பல்வஞ் சகன்துர்க்கன் சஞ்சார மூர்க்கன்*
*திகைப்படுங் களத்திரத்தன் உபயகளத் திரமாம்*
*சிலுகுசொல்வன் களத்திரவழித் துக்கமுளன்*
*தானே. (75)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஏழாம் இடத்தில் இராகு இருக்க, இச்சாதகன் பிற பெண்கள் மீது விருப்பம் கொண்டவன். விலைமகள், மூத்தவள் போன்றோருடன் சேரும் பெண் மோகம் கொண்டவன்; பாக்கியம் உடையவன், கர்வம் மிக்கவன்; பிறரை அலட்சியம் செய்பவன்; பிறர் மனதைக் கவர்பவன்; தீய நடத்தையையுடைய மனைவியை உடையவன்; ஏழாமிடத்தில் கேது இருக்க, தூரமான பெண்களை விரும்புபவன்; சோம்பல் மிக்கவன்; வஞ்சகன்; தீய செயல்களைச் செய்பவன்; அலைபவன்; முரடன்; இரண்டு மனைவியர் உள்ளவன்; புறங்கூறுபவன், மனைவியின் வகையில் துக்கம் உடையவன்.

## ஏழாம் பாவத்தில் குளிகன் நின்ற பலன்

காட்டும்ஆ றேழிற் குளிகனே இருக்கிற
களத்திர ஈனனே மாளிற்
கூட்டுறு சகல சனவிரோ தங்கள்
கூறுமே அழகிலாத் தாரம்
மீட்டுறு மந்தப் புத்தியன் கர்வி
விளங்கிய களத்திரத் துக்கன்
பூட்டுசெஞ் சிலைவே ளினைமுடி யென்ன
புளகித வனமுலை அனமே. (76)

(இ-ள்.) சிவந்த வில்லைக் கையில்கொண்டுள்ள மன்னனின் இரண்டு மணிமுடிகளையொத்த புளகாங்கிதம் உண்டாக்கும் அழகான தனங்களையும், அன்னத்தின் நடையையும் கொண்ட பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடம், ஏழாமிடம் இவற்றில் ஒன்றில் குளிகன் இருக்க, இச்சாதகனின் மனைவி மரணமடைவாள். பலரின் விரோதத்திற்கு ஆளாவான்; இவனுடைய மனைவி அழகற்றவளாக இருப்பாள்; மந்த புத்தியை உடையவனாக இவன் இருப்பான்; கர்வம் மிக்கவன்; மனைவியால் துக்கம் உடையவன்.

## சகியாதி பலன்

ஏழினிற் குளிகன் பவனனே இருக்கில்
எய்திடும் மனைவியாற் கேடு
சூழிசை ஏழாம் இடம்விருட் சிகமாய்ச்
சுன்னிற்கிற் களத்திர நாசம்
வாழிய ஏழில் வளர்மதி இருக்கில்
பொய்த்திடும் வெகுகளத் திரந்தான்
ஆழவே ஏழில் அழகுமா லுற்றால்
அருண்[illegible]ற் களத்திர நாசம். (77)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் குளிகன் பவனனே இருக்க, இச்சாதகனுக்கு மனைவியால் துயரம் உண்டாகும். சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடம் விருச்சிகமாக அதில் சனி நிற்க, இச்சாதகனின் மனைவிக்கு மரணம் ஏற்படும். சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் வளர்பிறைச் சந்திரன் இருக்க, இச்சாதகனுக்குப் பல மனைவியர் இருப்பார்கள். ஏழாமிடத்தில் புதன் இருக்க, இச்சாதகனுக்கு முதல் மனைவி மரணம் அடைவாள்.

**இதுவுமது**

ஏழாம் இடத்தில் ஐந்தெட்டுக்
கிறைவன் நிற்கில் மனைவிமைந்தர்
மீளாத் துன்பம் தனைப்பெறுவர்
மின்னேழ் மகரம் கடகமதாய்த்
தாளா மதிசேய் தானிருக்கின்
தயவாய் நல்ல களத்திரமாம்
மாளாச் சனியம் புலிநிற்கின்
மனைவி சேய்க்கும் தோடமுண்டே. (78)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் ஐந்தாமிடம், எட்டாமிடம் இவற்றிற்கு அதிபர்களில் ஒருவன் இருக்க, இச்சாதகன் மனைவியாலும் பிள்ளைகளாலும் மீளாத துன்பத்தை அடைவான். சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடம் மகரம் அல்லது கற்கடகமாக அதில் சந்திரன், செவ்வாய் ஆகிய இரு கோள்களும் நிற்க, இச்சாதகனுக்கு நல்ல களத்திரம் அமையும். இவ்விடங்களில் சந்திரனும் சனியும் இருக்க, இச்சாதகனின் மனைவிக்கும் பிள்ளைகளுக்கும் தோடம் உண்டாகும்.

**இதுவுமது**

மீனமே ழிடமாய் காரி
மேவலக் கனத்திற் பானு
தானயந் திருக்கில் எய்தும்
தாரமே நாச மாகும்

வானமாம் ஏழில் வெள்ளி
வக்கிரன் கூடி நிற்கில்
ஆனதோர் களத்திர நாசம்
என்றனர் கணிதம் ஆய்ந்தோர். (79)

(இ-ள்.) மீன இராசி ஏழாமிடமாக அதில் சனி இருக்க, சென்ம இலக்கனத்தில் சூரியன் இருக்க, இச்சாதகனின் மனைவி மரணமடைவாள். சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் சுக்கிரனும் செவ்வாயும் ஒன்றுகூடி இருக்கில், இச்சாதகனின் மனைவி மரணமடைவாள் என்று சோதிட நூல் கற்ற வல்லுநர்கள் கூறியுள்ளார்கள்.

**விபசார களத்திரம்**

இலக்கனம் ஏழீ ராறில்
ஈட்டிய பாவர் நிற்கிற்
துலங்கிய புத்திர ஈனன்
சுக்கிரன் சனிசேய் கூடிற்
கலக்குறு மாட்சி யாகிக்
கருதுமேழ் இடமாய் நிற்கின்
விலக்கவர் தாசி மிக்க
விபசாரக் களத்ரம் எய்தும் (80)

(இ-ள்.) சென்ம இலக்கனம், ஏழாமிடம், பன்னிரண்டாமிடம் ஆகியவற்றில் பாவக்கோள்கள் இருக்க, இச்சாதகன் பிள்ளைகள் இல்லாத குறைபாடுடையவனாக இருப்பான். சுக்கிரன், சனி, செவ்வாய் ஆகிய மூன்று கோள்களும் பலம் பெற்று ஏழாமிடத்தில் இருக்க, இச்சாதகனுக்குத், தீய நடத்தை யுடைய மனைவி வாய்ப்பாள்.

**மனைவி மரணம்**

பாரத்தம் ஏழு தன்னிற்
பானுவும் இராகு நிற்கிற்
தாரத்தாற் தனமே நாசம்
தருங்கன்னி ஏழ தாகி

வீரத்தாங் குருவே நிற்கின்
        மிகுநாலிற் பாவர் சேரில்
வாரத்தாங் களத்திர நாசம்
        வருஞ்சரோ ருகச்செந் தேனே! (81)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஏழாம் இடத்தில் சுக்கிரனும் இராகுவும் சேர்ந்திருக்க, இச்சாதகனுக்கு மனைவியால் பொருள் நஷ்டம் உண்டாகும். கன்னி இராசி இலக்கனத்திற்கு ஏழாமிடமாகி, அங்கு குரு இருக்க, நாலம் இடத்தில் பாவக்கோள் இருக்கில், இச்சாதகனுடைய மனைவிக்கு மரணம் நேரிடும்.

**விருப்பமான மனைவி**

அட்டமத் தோனே ழாகி
        அன்னிய மனைபொ சிப்பாம்
தொட்டதோர் தாரம் நாசம்
        சொல்லுவர் இலக்க னேசன்
திட்டமாம் ஏழில் நிற்கிற்
        திரவியம் கீர்த்தி செல்வம்
இட்டமும் உடைய தாரம்
        எய்திடும் இனிய தேனே! (82)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்திற்கு அதிபதி, ஏழாமிடத்தில் இருக்க, இச்சாதகன் பிறர் வீட்டில் உண்பான். இவனுடைய மனைவிக்கு அழிவு உண்டாகும். சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் இலக்கனாதிபதி இருக்க, இச்சாதகன், விலையுயர்ந்த பொருட்களைக் கொண்டவன்; புகழ் மிக்கவன்; செல்வம் நிறைந்தவன்; மனத்திற்கு விருப்பமான மனைவியையுடையவனாக விளங்குவான்.

ஏழாம் பாவம் முற்றிற்று.



# எட்டாம் பாவம்

## ஆயுள் பலம்

### முதலாண்டில் அரிட்டம்

ஏறுகோ லெட்டாய் பாவர்
இருக்கவே இரவி பார்க்கிற்
கூறுமோ ராண்டிற் சாவாம்
கொழுங்கன்னி பாவை யொன்றில்
வீறுவெண் மதியே நிற்கில்
வெய்யவன் பார்க்கி லாண்டிற்
பேறுள மதலை சாவாம்
பிறைநுதற் றடங்கண் மாதே! (83)

(இ-ள்.) பிறைபோன்ற நெற்றியையும் பெரிய கண்களையும் உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்தில் எட்டாமிடத்திற்கு அதிபதி பாவருடன்கூடி இருக்க, இவர்களைச் சூரியன் பார்த்தால், பிறந்த ஓராண்டில் குழந்தைக்கு மரணம் ஏற்படும். கன்னி இலக்கனத்தில் சந்திரன் இருக்க, இதனைச் சூரியன் பார்க்கிற் பிறந்த ஓராண்டில் குழந்தைக்கு மரணம் நேரிடும்.

### இரண்டாம் ஆண்டில் அரிட்டம்

வக்கிர மாகக் காரி
மறிதேளா றெட்டாய் நிற்க
உக்கிரச் செவ்வாய் பார்க்க
உடன்கூட இரண்டாம் ஆண்டில்
புக்கிடு மதலை சாவாம்
புகலுந்தேய் மதிகேந் திரிக்க
வக்கிரச் சனிசேய் பார்க்கில்
அரிட்டம்ரெண் டாண்டில் என்பார். (84)

(இ-ள்.) மேடம், விருச்சிகம் சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடமாக அதில் வக்கிர சனி இருக்க, பிறந்த இரண்டாண்டில் குழந்தைக்கு மரணம் ஏற்படும். சென்ம இலக்கனத்திற்குக் கேந்திரங்களில் தேய்பிறைச்சந்திரன் நிற்க, வக்கிர சனி, வக்கிர செவ்வாய் போன்றவை பார்க்க, பிறந்த இரண்டாண்டில் குழந்தைக்குக் கண்டம் நேரிடும்.

### மூன்றாவது ஆண்டில் அரிட்டம்

எள்ளிய செவ்வாய்க் கெட்டாம்
இராசியில் வியாழன் நிற்க
வெள்ளிபா ராதி ருக்க
மிகுபாவர் மதியைப் பார்க்கில்
வெள்ளிய மதலை நோயால்
மாண்டிடும் மூன்றாம் ஆண்டிற்
தெள்ளிய கணித நூலோர்
தெரிந்துரை செய்த வாறே. (85)

(இ-ள்.) செவ்வாய்க்கு எட்டாம் இராசியில் குரு இருக்க, அதனைச் சுக்கிரன் பார்க்காமல் இருக்க, பாவக்கோள் சந்திரனைப் பார்க்கப் பிறந்த குழந்தை, மூன்றாம் ஆண்டில் நோயினால் மரணமடையும் என்று சோதிடத்தில் வல்லவர்கள் தேர்ந்து அறிந்து எடுத்துரைத்துள்ளார்கள்.

### மூன்று, நான்காம் ஆண்டுகளில் அரிட்டம்

பெற்றிடும் இலக்க னத்தோன்
பலவீன மாகப் பாவர்
உற்றிட மாந்தி கேந்திர
முறிலாண்டு மூன்றிற் சாவாம்
கற்றபன் னிரண்டெட் டாறாய்க்
கடகமாய்ப் புதனே நிற்க
நற்றிய மதியும் பார்க்கில்
நாலாண்டில் அரிட்டம் தானே. (86)

*(இ-ள்.)* இலக்கனாதிபதி பலவீனமாகப் பாவக்கோள், மாந்தி இருவரும் கேந்திரங்களில் இருக்க, இக்குழந்தை பிறந்த மூன்றாமாண்டில் மரணமடையும். சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடம், எட்டாமிடம், பன்னிரண்டாமிடம் இவற்றில் ஒன்றாய்க் கடகம் இருக்க, அதில் புதன் நிற்க, சந்திரன் அதனைப் பார்க்கப் பிறந்த குழந்தைக்கு நான்காம் ஆண்டில் கண்டம் ஏற்படும்.

## நான்கு, ஐந்து ஆண்டுகளில் அரிட்டம்

படிதுலாம் தன்னில் நாலாம்
பாகையில் மதிதான் நிற்கக்
கொடியபாவக்கோள் பார்க்கக்
கூடினா லாண்டிற் சாவாம்
துடியைந்திற் பாவர் நிற்கச்
சுபர்மூட மாகப் பாவர்
அடியுறப் பலக்கில் ஐந்தாம்
ஆண்டினில் அரிட்ட மாமே. *(87)*

*(இ-ள்.)* துலாம் இராசியின் நான்காவது பாகையில் சந்திரன் இருக்க, இதனைப் பாவக்கோள் பார்க்கப் பிறந்த குழந்தை ஐந்தாமாண்டில் மரணமடையும். சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில் பாவக்கோள் நிற்க, சுபக்கோள் மூடமாக, பாவக்கோள் பலத்திருக்கப் பிறந்த குழந்தைக்குப் பிறந்த ஐந்தாமாண்டில் கண்டம் ஏற்படும்.

## ஐந்தாவது ஆண்டில் அரிட்டம்

குருசனி மதிசேய் கூடிற்
குலவவைந்தாம் ஆண்டிற் கண்டம்
முருகுசேய் கேந்திரம் ஏற
மூர்த்தியோன் பலக்கே டாக
மருகுமோர் ஐந்தில் எட்டில்
மதிநிற்க வருடம் ஐந்திற்
பெருகுமோர் குழவிக் கினம்
பேசுவர் பேதை மாதே! *(88)*

(இ-ள்.) பேதமையையுடைய பெண்ணே! குரு, சனி சந்திரன், செவ்வாய் ஆகிய நான்கு கோள்களும் ஒன்றுகூடி ஒரே வீட்டில் இருக்கப் பிறந்த குழந்தைக்கு ஐந்தாம் ஆண்டில் கண்டம் ஏற்படும். செவ்வாய் கேந்திரத்தில் இருக்க, இலக்கனாதிபதி பலவீனமாக, ஐந்தாமிடத்தில் இருக்க, எட்டாமிடத்தில் சந்திரன் இருக்கப் பிறந்த குழந்தைக்கு ஐந்தாமாண்டில் குறையுண்டாகும் என்று பேசுவார்கள்.

## ஐந்தாம், ஆறாம் ஆண்டில் அரிட்டம்

சிங்கத்திற் பாகை யைந்திற்
றேய்மதி நிற்கப் பாவர்
பங்கத்திற் கூடப் பார்க்கிற்
பகரைந்தாம் ஆண்டிற் சாவாம்
மங்கத்துக் கடகம் சிங்கம்
ஆறுபன் னிரண்டாய் வெள்ளிப்
பங்குற்று நிற்கப் பாவர்
பார்க்கிலா றாண்டிற் சாவாம். (89)

(இ-ள்.) சிம்ம இராசியின் ஐந்தாம் பாகையில் தேய்பிறைச் சந்திரன் நிற்க, இச்சந்திரனோடு பாவக்கோள் கூடினாலும் அல்லது பார்த்தாலும், இக்குழந்தைக்குப் பிறந்த ஐந்தாம் ஆண்டில் மரணம் நேரிடும். சென்ம இலக்கனத்திற்கு ஆறு, பன்னிரண்டாம் இடங்களாக கடகம் அல்லது சிம்ம இராசி அமைய, அவற்றில் சுக்கிரன் நிற்க, பாவக்கோள் அதனைப் பார்க்கப் பிறந்த குழந்தை, பிறந்த ஆறாம் ஆண்டில் மரணம் அடையும்.

## ஏழாவது ஆண்டில அரிட்டம்

தாங்கிய நிகளம் பட்சி
சர்ப்பத்திரே காணந் தோன்ற
வீங்கிவ ருடனே பாவர்
இருந்திடச் சாமி தானே

ஓங்கிடப் பாரா ராகில்
ஒரேழாம் ஆண்டிற் சாவாம்
பூங்கிளி அனைய தீஞ்சொல்
பூவைக்கும் பூவை யன்னாய்! (90)

*(இ-ள்.)* அழகான கிளியை ஒத்த இனிய சொற்களைப் பேசும் பூவினைச் சூடிக்கொள்ளும் பூவினைப் போன்ற மென்மையான பெண்ணே ! பட்சி, சர்ப்ப திரேகாணம் தோன்ற,.....கோளுடன் பாவக்கோள் ஒன்றுகூடி இருந்திட, பிறந்த குழந்தை ஏழாமாண்டில் மரணம் அடையும்.

குறிப்பு: இப்பாடலில் 'நிகளம்' என்பதன் பொருள் விளங்கவில்லை.

## இதுவுமது

பார்க்கும்லக் கனத்தின் மூன்றிற்
பாவர்கள் நிற்க ஏழிற்
கூர்க்குஞ்சத் துருவீ டாக
குளிர்மதி நிற்கப் பொன்னோன்
ஏற்குநல் பார்வை யற்றால்
ஏழாண்டில் மரணம் என்பர்
சேர்க்குநூற் புலமை யோர்கள்
தெரிந்துரைத் தனரிவ் வாறே! (91)

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில் பாவக்கோள்கள் நிற்க, ஏழாமிடம் பகை வீடாக, அதில் சுக்கிரன் நிற்க, குருவின் பார்வை இல்லாமல் இருந்தால், இக்குழந்தை பிறந்த ஏழாம் ஆண்டில் மரணமடையும் என்று சோதிட நூல்களைக் கற்றுத் தேர்ந்த சோதிடர்கள் தெரிந்துரைத் துள்ளார்கள்.

## எட்டாவது ஆண்டில் அரிட்டம்

தேய்மதி உதயம் நிற்கச்
சிறந்தநா லெட்டில வெய்யோன்
வாய்மலர்த் திருக்கில் எட்டாம்
வருடத்தில் அரிட்டங் காட்டும்

மாய்மதி இரவி ஏழில்
ஆகத்தீக் கோள்கள் நோக்க
வேய்மகிழ் மூர்த்தி பாம்போ
டிருக்கிலெட் டாண்டிற் சாவாம். *(92)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திள் தேய்பிறை சந்திரன் நிற்க, நான்காமிடம் அல்லது எட்டாமிடத்தில் சூரியன் இருக்கப் பிறந்த குழந்தைக்கு பிறந்த எட்டாமாண்டில் கண்டம் நேரிடும். சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் சூரியனும் சந்திரனும் ஒன்றுகூடி இருக்க, இவர்களைப் பாவக்கோள்கள் நோக்க, இலக்கனாதிபதி கேது அல்லது இராகுவுடன் கூடி இருக்க, இக்குழந்தை பிறந்து எட்டாம் ஆண்டில் மரணமடையும்.

## இதுவுமது

மறியினில் எட்டாம் பாகை
மதிநிற்கப் பாவர் கூடப்
பிரியமாய்ப் பார்க்கு மேனும்
பலமாந்திப் பவன கேது
சிரியரா குவுமே கேந்திரம்
சேரிலெட் டாண்டிற் சாவாம்
மரியுநற் கோளே கூடி
அரிட்டங்கள் வந்து தீரும். *(93)*

*(இ-ள்.)* மேட இராசியின் எட்டாம் பாகையில் சந்திரன் நிற்க, இவனுடன் பாவக்கோள் ஒன்றுகூடி இருந்தாலும் அல்லது பார்த்தாலும், மாந்தி நின்ற இராசிக்குக் கேந்திரத்தில் இராகு, கேது இருக்க, இக்குழந்தைப் பிறந்து எட்டாம் ஆண்டில் மரணமடையும். நற்கோள் ஒன்றுகூடி இருக்க, மரணக்குறிகள் தோன்றி பின்னர் நீங்கிவிடும்.

## ஏழு, எட்டு, ஒன்பதாவது ஆண்டுகளில் மரணம்

துய்யலக் கனத்திற் செவ்வாய்
சூரியன் மதியும் கூடி
செய்யநற் கோளே பாரா
விடிலெட்டா மாண்டிற் சாவாம்
மெய்யுங்கோல் இடபம் ஏழாம்
இடமாய்த்தேய் மதியும் நிற்க
உய்யும்பொன் பார்க்கி லேழெட்
டொன்பதாம் ஆண்டிற் சாவாம். *(94)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்தில் செவ்வாய், சூரியன், சந்திரன் ஆகிய மூன்று கோள்களும் ஒன்றுகூடி, இருக்க, இவர்களைச் சுபக்கோள் பார்க்காவிடில், இக்குழந்தை பிறந்த எட்டாம் ஆண்டில் மரணம் அடையும். துலாம் இராசி, இடப இராசி ஆகியவை சென்ம இலக்கனத்திற்கு ஏழாம் இடமாக இருக்க, அவற்றிலொன்றில் தேய்பிறைச் சந்திரன் நின்று இதனைக் குரு பார்க்கில், இக்குழந்தை பிறந்த ஏழாம் ஆண்டிலாவது எட்டாம் ஆண்டிலாவது ஒன்பதாம் ஆண்டிலாவது மரணம் அடையும்.

## ஒன்பதாம் ஆண்டில் அரிட்டம்

சந்திரன் மிதுனம் கன்னி
தனில்நிற்கில் செவ்வாய் பார்க்க
வெந்திர நற்கோள் பாரா
விடிலொன்ப தாமாண்டிற் கண்டம்
முந்திடில் மதிக்கீ ராறின்
மூர்த்தியோன் பாவி யாகின்
வந்தஅம் புலியங் சத்தின்
வரிலொன்ப தாமாண்டிற் சாவாம். *(95)*

*(இ-ள்.)* மிதுன இராசி, கன்னி இராசி இவற்றில் ஒன்றில் சந்திரன் இருக்க, இந்தச் சந்திரனைச் செவ்வாய் பார்க்க, இதனைச் சுபக்கோள் எதுவும் பார்க்கவில்லையானால்,

இக்குழந்தை பிறந்து ஒன்பதாம் ஆண்டில் கண்டம் ஏற்படும். சந்திரனுக்குப் பன்னிரண்டாமிடத்தில் இலக்கனாதிபதி பாவியாகி, சந்திரனுடைய அங்கிசத்தில் இருக்க, இக்குழந்தை பிறந்து ஒன்பதாம் ஆண்டில் மரணம் நேரிடும்.

## இதுவுமது

*இடபத்திற் பாகை யொன்பான்*
*எழின்மதி நிற்கப் பாவர்*
*திடமுற்றுப் பார்க்கக் கூடிற்*
*றெரிந்தொன்பான் ஆண்டிற் சாவாம்*
*தடமுற்ற ஐந்திற் செவ்வாய்*
*சந்திரன் இரவி நிற்க*
*உடநற்கோள் பாரா ராகில்*
*ஒன்பதாம் ஆண்டில் சாவாம். (96)*

(இ-ள்.) இடப இராசியில் ஒன்பதாம் பாகையில் சந்திரன் நிற்க, இச்சந்திரனைப் பாவக்கோள் பார்த்தாலும், இச்சந்திரனோடு ஒன்றுகூடி இருந்தாலும், இக்குழந்தை பிறந்து ஒன்பதாம் ஆண்டில் மரணமடையும். சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில் செவ்வாய், சந்திரன், சூரியன் ஆகிய மூன்று கோள்களும் நிற்க, இவர்களைச் சுபக்கோள்கள் பார்க்காவிட்டால், இக்குழந்தை பிறந்து ஒன்பதாம் ஆண்டில் மரணமடையும்.

## பத்து, பதினோராம் ஆண்டுகளில் அரிட்டம்

*மீனத்திற் பாகை பத்தில்*
*வெண்மதி நிற்கப் பாவர்*
*தானுற்றுக் கூடப் பார்க்கில்*
*றகும்பத்தாம் வருடங் கண்டம்*
*வானுற்றக் கதிரோன் திங்கள்*
*மாலவன் உதயங் கூடிப்*
*பானுற்ற பாவர் திங்கள்*
*பதினோராம் ஆண்டிற் சாவாம். (97)*

(இ-ள்.) மீன இராசியில் பத்தாம் பாகையில் நிறைந்த சந்திரன் இருக்க, இதனுடன் பாவக்கோள் கூடி நிற்க, அல்லது இந்தச் சந்திரனைப் பாவக்கோள் பார்க்க, இக்குழந்தை பிறந்து பத்தாம் ஆண்டில் கண்டம் நேரிடும். சென்ம இலக்கனத்தில் சூரியன், சந்திரன், புதன் ஆகிய மூன்று கோள்களும் ஒன்று கூடி இருக்க, இவர்களைப் பாவக்கோள் பார்க்க, இக்குழந்தை பிறந்து பதினோராம் ஆண்டில் மரணமடையும்.

## பன்னிரண்டாம் ஆண்டில் அரிட்டம்

அருண்மதி சிங்கம் மேவ
ஆதித்தன் சனியும் மீனம்
மருவுச்சுன் பாரா தாகில்
வருடம்பன் னிரண்டிற் சாவாம்
சருவுதே ளங்கி சத்திற்
சனிதுவாங் கிசமாய் நிற்க
வருகுரு தானும் பார்க்கில்
வருடத்தில் அரிட்ட மாமே! (98)

(இ-ள்.) சிம்ம இராசியில் சந்திரன் இருக்க, சூரியனும் சனியும் மீன இராசியில் ஒன்றுகூடி இருக்க, இவர்களைச் சனி பார்க்கவில்லையென்றால், இக்குழந்தை பிறந்து பன்னிரண்டாம் ஆண்டில் மரணம் அடையும். விருச்சிக அங்கிசத்தில் சனி, துவாங்கிசமாய் நிற்க, இதனைக் குரு பார்க்க, இக்குழந்தைக்குப் பிறந்து பன்னிரண்டாம் ஆண்டில் கண்டம் நேரிடும்.

குறிப்பு: துவாங்கிசம் - துவாதசாங்கிசம், தசவர்க்கத்தில் ஒன்று. இது ஒரு இராசியைப் பன்னிரண்டாகப் பகிர்தல்.

## பதின்மூன்று, பதினான்கு ஆண்டுகளில் அரிட்டம்

சனிதுவாங் கிசமாய் நிற்கச்
சற்குரு பார்க்கப் பன்முன்
றினிற்பிதுர்த் துவேஷி யாகி
இறந்திடும் மதலை யென்பர்

கனியும்பொன் அங்கி சத்திற்
காரிதான் நிற்க மாலோன்
வனியுறப் பார்க்கிற் பள்ளால்
வருடத்தில் அரிட்ட மாமே. (99)

(இ-ள்.) சனி, துவாங்கிசமாய் நிற்க, இதனைக் குரு பார்க்க, இச்சாதகன், பதிமூன்று வயதில் தந்தையை இகழ்பவனாக விளங்கி, மரணமடைவான். குருவின் அங்கிசத்தில் சனி நிற்க, இவனைப் புதன் பார்க்க, இச்சாதக னுக்குத் தன் பதினான்காம் வயதில் மரணம் நேரிடும்.

**பதினைந்து, பதினாறாவது ஆண்டுகளில் அரிட்டம்**

முடவன்சிங் காங்கி சத்தின்
முற்றிட இராகு பார்க்கில்
இடர்பதி னைந்தாம் ஆண்டில்
எதிர்க்குஞ்சத் துருவாற் கண்டம்
படர்சனி கன்னி யங்சம்
பற்றிட கேது நோக்கின்
இடமதாய்ப் பதினா றாண்டின்
மேன்மக வரிட்ட மாமே! (100)

(இ-ள்.) சனி, சிங்காங்கிசத்தில் இருக்க, இதனை இராகு பார்க்கில், இச்சாதகனின் பதினைந்தாம் வயதில், எதிர்க்கின்ற பகைவனால் கண்டத்தை அடைவான். சனி, கன்னியங் கிசத்தில் இருக்க, இதனைக் கேது பார்க்க, இச்சாதகனுக்குப் பதினாறாவது வயதில் கண்டம் நேரிடும்.

**பதினேழு, பதினெட்டாவது ஆண்டுகளி ல் அரிட்டம்**

மிதுனவங் கிசத்திற் காரி
மேவிடச் சாமி பார்க்கில்
சதுரகூ ரனுமாய்ப் போகில்
தானாய்ப்பன் னேழிற் சாவாம்

அதுதுலா லக்க னத்தோன்
அட்டமக் கிரகம் மாற
பதுமபொன் பாரா னாகிற்
பதினெட்டாம் ஆண்டிற் சாவாம். (101)

(இ-ள்.) மிதுன அங்கிசத்தில் சனி இருக்க, இதனை இலக்கனாதிபதி பார்க்க, இச்சாதகன் திறமையும் தைரியமும் உள்ளவனாகத் தன் பதினேழாம் வயதில் மரணமடைவான். துலா இலக்கனம், சென்ம இலக்கனமாக எட்டாமிடத் தோனுடன் கிரகம் மாற (பரிவர்த்தனை), இவனை, குரு பார்க்காவிடில், இச்சாதகன் தன்னுடைய பதினெட்டாம் வயதில் மரணமடைவான்.

## பத்தொன்பதாவது வயதில் மரணம்

மந்திரியின் அங்கி சத்தில்
மந்தனும் இராகுங் கூடி
சேர்ந்துமூர்த் தியனைப் பார்க்கிற்
தோன்றும்சேய்க் குடனே கண்டம்
தந்தலக் கனத்தோன் உச்சம்
தானெரி பலவா னாகில்
பந்தெனும் முலையி னாளே!
பத்தொன்பான் ஆண்டிற் சாவாம். (102)

(இ-ள்.) பந்தினையொத்த திரண்ட கொங்கைகளை யுடைய பெண்ணே ! குருவின் அங்கிசத்தில் சனியும் இராகுவும் ஒன்றுகூடி இலக்கனாதிபதியைப் பார்க்கப் பிறக்கும் குழந்தை, பிறந்த உடனேயே இறந்துவிடும். சென்ம இலக்கனாதிபதி உச்சம் பெற்றிருக்க, சூரியன் பலம்பெற்று விளங்க, இச்சாதகனுக்குப் பத்தொன்பதாம் ஆண்டில் மரணம் நேரிடும்.

## இருபதாவது ஆண்டில் அரிட்டம்

கேந்திரமாம் பாவர் நிற்கக்
கிளர்சுபர் பாரா ராகச்
சாய்ந்தசந் திரனா றெட்டிற்
சாரியஆண் டிருப திற்சாம்

ஏய்ந்தபொன் இரவி தீக்கோள்
இலக்கனத் திருப்ப வேதான்
ஆய்ந்தகேந் திரன்கேந் திரிக்க
ஆண்டிரு பதனிற் சாவாம். *(103)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்குக் கேந்திரங்களில் பாவக்கோள் நிற்க, இதனைச் சுபக்கோள் பார்க்காமல் இருக்க, சந்திரன் எட்டாமிடத்தில் இருக்க, இச்சாதகன் தன் இருபதாம் வயதில் மரணமடைவான். சென்ம இலக்கனத்தில் குருவும் சூரியனும் பாவக்கோளும் ஒன்றுகூடி இருக்க, கேந்திராதிபதி, கேந்திரத்தில் இருக்க, இச்சாதகன் தன் இருபதாம் வயதில் மரணமடைவான்.

## 12, 17, 22, 25, 30 ஆண்டுகளில் அரிட்டம்

பெருகும்அட் டமத்தோன் கேந்திரம்
பலக்கவே லக்க னத்தோன்
வுருபல வீன மாக
அறைந்திடில் வடிவேற் கண்ணாய்
ஒருபனி ரெண்டு பன்னேழ்
இருபத்தி ரெண்டாம் ஆண்டில்
இருபத் தைந்தல் லான்முப்ப
திரண்டினில் மரண மாமே. *(104)*

*(இ-ள்.)* வடிக்கப்பட்ட வேலினைப் போன்ற கூரிய பார்வையையுடைய கண்களைக்கொண்ட பெண்ணே ! இலக்கனத்திற்கு எட்டாமிடத்திற்கு அதிபதி கேந்திரங்களில் ஒன்றில் பலம்பெற்று இருக்க, இலக்கனாதிபதி பலவீனமாக இருக்க, இச்சாதகனுக்குப் பனிரெண்டு, பதினேழு, இருபத்து இரண்டு, இருபத்தைந்து, முப்பத்து இரண்டு ஆகிய வயதுகளில் ஒன்றில் மரணம் நேரிடும்.

## இருபத்து ஏழு, பத்து, பத்தொன்பதாம் ஆண்டுகளில் அரிட்டம்

தொதியில்சத் துருக்கோட் கோண
கேந்திரம் சனியே நிற்க
வெதிரவி நற்கோள் நிற்கில்
இருபத்தே ழாண்டிற் சாவாம்
மதியுஞ்சேய் அருக்கன் கேந்திர
மாகிற்பத் தாண்டிற் கண்டம்
மதியங்கேந் திரிக்கிற் கண்டம்
வரும்பத்தோ டொன்ப தாண்டில். *(105)*

(இ-ள்.) பகைக்கோள், திரிகோண கேந்திரத்தில் இருக்க, அதனுடன் சனி, சூரியன், நற்கோள் ஆகிய மூன்று கோள் களும் ஒன்றுகூடி இருக்க, இச்சாதகன் தன் இருபத்து ஏழாம் வயதில் மரணமடைவான். சந்திரன், செவ்வாய், சூரியன் ஆகிய மூன்று கோள்களும் ஒன்றுகூடி கேந்திரத்தில் இருக்க, இச்சாதகன் தன் பத்தாம் வயதில் மரணமடைவான். சந்திரன் கேந்திரங்களில் ஒன்றில் இருப்பின், பத்தொன்பதாம் வயதில் இச்சாதகனுக்குக் கண்டம் ஏற்படும்.

## இருபத்தெட்டு, இருபத்தொன்பது ஆண்டுகளில் அரிட்டம்

அட்டமத் தோனை வேந்தன்
அன்புடன் பார்க்கச் சாமி
எட்டினில் இருப்பா னாகில்
இருபத்தொட் டாண்டிற் கண்டம்
சட்டவெண் மதிய ருக்கன்
சனிஎட்டில் இருக்க நல்லோர்
இட்டமாய்ப் பார்ப்பா ராகில்
இருபத்தொன் பானிற் கண்டம். *(106)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்திற்கு அதிபதியைச் சூரியன் பார்க்க, இலக்கனாதிபதி எட்டா மிடத்தில் இருந்தால், இச்சாதகனுக்கு இருபத்து எட்டாம் வயதில் கண்டம் நேரிடும். நிறைந்த சந்திரன், சூரியன், சனி ஆகிய மூன்று கோள்களும் சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் இருக்க, இவர்களைச் சுபக்கோள்கள் பார்க்க, இச்சாதகன் தன் இருபத்து ஒன்பதாம் வயதில் மரணமடைவான்.

## இருபத்தேழு, முப்பதாம் ஆண்டுகளில் அரிட்டம்

சலமிகும் அட்ட மத்தோன்
சாமிக்கு நடுவே திங்கள்
பலமிருந் துற்று நிற்கப்
பொன்றான்பாக் கியத்தில் நிற்கில்
விலகிய இருபத் தேழில்
மேன்முப்ப தாண்டில் சாவாம்
கலகவேல் விழியி னாளே!
கணிதநூல் உரைத்த வாறே. (107)

(இ-ள்.) மனதில் போராட்டத்தைச் செய்யக்கூடிய வேலையொத்த கூர்மையான பார்வையினையுடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்திற்கு அதிபதி, இலக்கனாதிபதி இவர்களுக்கு இடையில் சந்திரன் பலம்பெற்று நிற்க, குரு, ஒன்பதாமிடத்தில் இருக்க, இச்சாதகன் தன் இருபத்து ஏழாம் வயதில் அல்லது முப்பதாம் வயதில் மரணமடைவான் என்று சோதிட நூலில் வல்லவர்கள் கூறியுள்ளார்கள்.

## மாதுரு பிதுருக்களுடன் அநுமரணம்

நாட்டும் கீர்த்தி யன்பலக்க
நாலொன்ப துடையோர் மாந்தி
ஈட்டராற் சனிசேய் கூடி
எட்டிற் பன்னி ரண்டிலாறிற்

கூட்டுற நிற்பா ராகிற்
குலமகள் தோன்றப் பின்னால்
ஈட்டுமா தாபி தாவும்
உடன்மர ணந்தா னென்பர். (108)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்திற்கு அதிபதி பலம் பெற்று விளங்க, நான்காமிடம், ஒன்பதாமிடம் இவற்றுக்கு அதிபதிகளும், மாந்தியும், சனியும் செவ்வாயும் ஒன்றுகூடி, ஆறாமிடம், எட்டாமிடம், பன்னிரண்டாமிடம் ஆகிய இடங்களில் ஒன்றில் இருக்கப் பிறந்த குழந்தைகளின் தாயும் தந்தையும் மரணமடைவார்கள்.

**மரத்தில் ஏறி வீழ்ந்து மரணம்**

திருவளர் செவ்வாய் நாலிற்
தேய்மதி பத்தில் நிற்க
வருசனி பார்க்கப் பட்டால்
மரத்தேறி வீழ்ந்து சாவான்
தருநாலில் இரவி நிற்கச்
சாய்மதி சேய்பத் தாகப்
பொருசனி நோக்கில் காய்ந்த
பொலமரத் தேறி வீழ்வான். (109)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்தில் செவ்வாய் இருக்க, பத்தாமிடத்தில் தேய்ந்த சந்திரன் இருக்க, இவர்களைச் சனி பார்க்க, இச்சாதகன் மரத்தில் ஏறி விழுந்து மரணமடைவான். சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்தில் சூரியன் இருக்க, பத்தாமிடத்தில் சந்திரன், செவ்வாய் ஆகிய கோள்கள் இருக்க, இவர்களைச் சனி பார்க்க, இச்சாதகன் காய்ந்த மரத்தில் ஏறி, கீழே விழுந்து மரணமடைவான்.

**இதுவுமது**

ஒன்பதில் ஐந்தில் பாவர்
உறைந்திடச்சுபர்நோக் காரேல்
அன்புடன் கடிதாய் ஓடி
மரத்தேறி வீழ்ந்து மாய்வன்

இன்பமாம் கதிரோன் நாலில்
எட்டினிற் குளிகன் நிற்கிற்
தன்பரு மரத்தில் ஏறித்
தவறியே வீழ்ந்து சாவான். (110)

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாமிடம் அல்லது ஐந்தாமிடத்தில் பாவக்கோள் இருக்க, சுபக்கோள் இதனைப் பார்க்காவிடில், இச்சாதகன் மரத்தில் ஏறி விழுந்து மரணமடைவான். சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்தில் சூரியன் இருக்க, எட்டாமிடத்தில் குளிகன் இருக்க, இச்சாதகன் மரத்தில் ஏறி, தவறி விழுந்து இறந்துபோவான்.

**மரம் மேலே விழுந்து மரணம்**

கூறிய மதியொன் பானிற்
கொழுங்கதிர் ஐந்தில் நிற்ப
வீறிய சனிசெவ் வாயும்
மிக்கநேத் திரத்தில் நிற்கின்
மாறிய விருட்சம் வீழ்ந்து
மரணமே யாவர் திண்ணம்
சீறிய அரவைத் தேரைச்
சிறப்பிய அல்கு லாளே! (111)

*(இ-ள்.)* நல்ல பாம்பின் படத்தைப் போன்றும் தேரினைப் போன்றும் சிறப்புடைய அல்குலையுடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாமிடத்தில் சந்திரன் இருக்க, ஐந்தாமிடத்தில் சூரியன் இருக்க, கேந்திரங்களில் சனியும் செவ்வாயும் நிற்க, இச்சாதகன் மரம் மேலே விழுவதனால் இறந்து போவான் என்பது உறுதியாகும்.

**கல், மலையில் ஏறிவிழுந்து, கல்லெறிவினால் மரணம்**

குறியொடு நாலிற் சேயும்
கூர்பத்திற் பானு நிற்க
ஏறிகல்லி னாலும் வெற்பில்
ஏறியே விழுந்து சாவான்

நெறிஎட்டோன் திரிகோ ணத்தில்
நீலன்சேய் இரவி திங்கள்
குறிலொன்னா எறியும் கல்லால்
உருண்டுவீழ் துடனே மாள்வன். (112)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்தில் செவ்வாயும், பத்தாமிடத்தில் சூரியனும் நிற்க, இச்சாதகன் கல்லெறிபடுவதனால் அல்லது மலையில் ஏறி விழுவதனால் மரணமடைவான். சென்ம இலக்கனத்திற்குத் திரிகோணங்களில் எட்டாமிடத்திற்கு அதிபதி சனி, செவ்வாய், சூரியன், சந்திரன் ஆகிய கோள்கள் நிற்க, இச்சாதகன் பகைவர் எறிகின்ற கல்லினால் அடிபட்டு மரணமடைவான்.

### கல்லெறியால், கிணற்றில் வீழ்வதால் மரணம்

ஒருநாலோன் சனி ராகு
உடன்கூட நாலிற் செவ்வாய்
கருவெய்யோன் நிற்க ஏழோன்
தழுவிற்கல் லெறியால் சாவன்
பொருநாலிற் சனியும் ஏழிற்
பூமனும் பத்திற் பானு
மருவுறு கிணற்றில் வீழ்ந்து
மரணமே யாவன் மின்னே! (113)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்திற்கு அதிபதியுடன் சனியும் இராகுவும் ஒன்றுகூடி இருக்க, நான்காமிடத்திற் சூரியன் நிற்க, இவனுடன் ஏழாமிடத்திற்கு அதிபதி ஒன்று கூடி நிற்க, இச்சாதகன் கல்லெறிபடுவதால் மரணம் அடைவான். சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்தில் சனியும், ஏழாமிடத்தில் செவ்வாயும், பத்தாமிடத்தில் சூரியனும் இருக்க, இச்சாதகன் கிணற்றில் விழுந்து மரணமடைவான்.

## கிணற்றில் விழுவதால் மரணம்

*ஏழில்வெண் மதியும் நாலில்*
*இருஞ்சனி பத்திற் செவ்வாய்*
*சூழின்மாக் கிணற்றில் வீழ்ந்து*
*துன்மர ணத்தாற் சாவன்*
*நீழலின் நாலின் மூட*
*நீசக்கோள் இருக்கப் பாவர்*
*கேழுற நோக்குண் டாகிற்*
*கிணற்றினில் வீழ்ந்து சாவான்.* *(114)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் நிறைந்த சந்திரனும் நான்காமிடத்தில் சனியும், பத்தாமிடத்தில் செவ்வாயும் நிற்க, இச்சாதகன் கிணற்றில் விழுந்து துர்மரணமடைவான். சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்தில் மூட நீசக்கோள்கள் இருக்க, இவர்களைப் பாவக் கோள் பார்க்க, இச்சாதகன் கிணற்றில் விழுந்து மரணமடைவான்.

## கிணற்றில் விழுவதலால், பெண்ணால் மரணம்

*கண்ணமாம் நாலாம் வீட்டில்*
*சனிசெவ்வாய் மதியும் நிற்க*
*வண்ணமாம் குளிகன் எட்டின்*
*மருவிடிற் கிணற்றிற் சாவன்*
*எண்ணமில் ஒன்றோ டெட்டுக்*
*கிறையவ ருடனே வெள்ளி*
*திண்ணமாய்க் கூடி நின்றாற்*
*றிரியினால் மரண மாவன்.* *(115)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு நான்காம் வீட்டில் சனி, செவ்வாய், சந்திரன் ஆகிய கோள்கள் ஒன்றுகூடி இருக்க, குளிகன் எட்டாமிடத்தில் இருக்க, இச்சாதகன் கிணற்றில் விழுந்து மரணமடைவான். இலக்கனாதிபதி, எட்டாமிடத்திற்கு அதிபதி ஆகியோருடன் சுக்கிரன் கூடி இருக்க, இச்சாதகன் பெண்ணால் மரணமடைவான்.

**பெண்ணால் துர் மரணம்**

சாமிகும் பாங்கி சத்திற்
சார்ந்திடிற் றிரியால் கண்டம்
சேமிலா றோனைப் பானும்
சேரிற்றுர் மரண மாகும்
காமிய வெள்ளி செவ்வாய்
காரிமால் குருவும் கூடிற்
தோமிலா உலகோர் காணத்
துர்மர ணத்தால் மாய்வன். *(116)*

(இ-ள்.) இலக்கனாதிபதி கும்பாங்கிசத்தில் இருக்க, இச்சாதகனுக்குப் பெண்ணால் கண்டம் நேரிடும். சென்ம இலக்கனாதிபதிக்கு ஆறாமிடத்திற்கு அதிபதியுடன் சூரியன் ஒன்று சேர, இச்சாதகனுடன் துர்மரணமடைவான். சூரியன், செவ்வாய், சனி, புதன், குரு ஆகிய ஐந்து கோள்களும் ஒன்று கூடி இருக்க, இச்சாதகன் அனைவரும் காண துர்மரண மடைவான்.

**திடீர் மரணம்**

பாரினில் ஒரா றெட்டிற்
பனிரெண்டில் மதியும் நிற்க
கூரிய சனியும் பாம்பும்
குளிகனும் ஒன்றாய்க் கூட
நேரிய சாமி பார்க்கில்
நிமிடத்தில் மரண மாவன்
பேரினிற் கணித நூலோர்
பிரித்துரை செய்த வாறே. *(117)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஆறில், எட்டில், பன்னிரண்டில சந்திரன் நிற்க, இதனுடன் சனி, இராகு அல்லது கேது, குளிகன் ஆகியவை ஒன்று கூடி இருக்க, இவர்களை இலக்கனாதிபதி பார்க்க, இச்சாதகன் எதிர்பாராத நேரத்தில் திடீரென்று மரணமடைவான் என்று சோதிடநூல் வல்லவர்கள் எடுத்துரைத்துள்ளார்கள்.

### துர் மரணம், ஆயுதத்தால் மரணம்

இலகும்சென் றெட்டுக் குள்ளோர்
வியமேறக் கேந்திர மேறக்
குலவுதுர்ப் பலமாய்ச் சாமி
கூடிற்றுன் மரண மாவன்
உலவிலக் கனத்தில் காரி
உறவேழிற் பாம்பு நிற்க
அலகில் கன்னியிற் சுன்னிற்
கிலாயுத மரண மாவன். *(118)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனாதிபதி, எட்டாமிடத்திற்கு அதிபதி ஆகிய இருவரும் பன்னிரண்டாமிடத்தில் அல்லது கேந்திரங்களில் பலம் குறைந்து, இலக்கனாதிபதியுடன் ஒன்று கூடி இருக்க, இச்சாதகன், துர்மரணமடைவான். சென்ம இலக்கனத்தில் சனி இருக்க, ஏழாமிடத்தில் இராகு அல்லது கேது இருக்க, கன்னி இராசியில் சனி இருக்க, இச்சாதகன் ஆயுதத்தால் மரணமடைவான்.

### மன்னர் சினத்தால், ஆயுதத்தால், நீரில் வீழ்தலால் மரணம்

இரவிசேய் கிரகம் மாற
எட்டுளோன் கேந்திர கோணம்
திறமுறப் புவியில் மன்னர்
சினத்தாலா யுதத்தால் மாள்வன்
பரவுமீ னுதய மாகப்
பானுவும் மதியும் நிற்கில்
தருமமில் பாவர் பார்க்கிற்
றண்ணீரில் வீழ்ந்து சாவன். *(119)*

*(இ-ள்.)* சூரியனும் செவ்வாயும் ஒன்றின் வீட்டில் ஒன்று மாறி நிற்க, எட்டாமிடத்திற்கு அதிபதி கேந்திர கோணங்களில் ஒன்றில் நிற்க, இச்சாதகன் மன்னனின் கோபத்திற்கு ஆளாகி மரணம் அடைவான். அல்லது ஆயுதத்தால் மரணமடைவான்.

சென்ம இலக்கனம் மீனமாக, அதில் சூரியனும், சந்திரனும் நிற்க, இவர்களை பாவக்கோள் பார்க்க, இச்சாதகன் நீரில் மூழ்கி இறப்பான்.

**நீரில் கண்டம்**

நீளுப யத்தில் பானு
நீசர்கள் நிற்கப் பாவர்
தாளுறப் பார்க்கக் கூடத்
தண்ணீரில் வீழ்ந்து சாவன்
மீளும்கர்க் கடகம் நாலாய்
வெஞ்சனி நிற்கு மேனும்
வாழுஞ்சத்த ரேசன் தன்னை
மதிகூடிற் சலத்தாற் கண்டம். *(120)*

(இ-ள்.) உபய இராசிகளில் ஒன்றில் சூரியனும் நீசமடைந்த கோள்களும் நிற்க, இவர்களைப் பாவக்கோள்கள் பார்க்க அல்லது இவர்களோடு ஒன்றுகூடி இருக்க, இச்சாதகன் நீரில் விழுந்து மரணமடைவான். சென்ம இலக்கனத்திற்கு நான்காம் இராசி கடகமாக, அதில் சனி நின்றாலும், ஏழாமிடத்திற்கு அதிபதியுடன் சந்திரன் கூடி இருந்தாலும், இச்சாதகன் நீரில் விழுந்து மரணமடைவான். சென்ம இலக்கனத்திற்கு நான்காம் இராசி கடகமாக, அதில் சனி, நின்றாலும், ஏழாமிடத்திற்கு அதிபதியுடன் சந்திரன் கூடி இருந்தாலும், இச்சாதகன் நீரில் விழுந்து மரணமடைவான்.

**முதலையால், நீரால் கண்டம்**

இலக்கனம் தன்னிற் திங்கள்
இரவியும் நிற்க வேதான்
கலக்குநா லுபயந் தன்னிற்
காரிதான் உறைவ தாதிற்
சலக்குறு முதலை யாலே
தான்மாய்வன் குளிகன் அங்சம்
பலக்குடிவீட் டினுக்கே மாய்த்தேய்
பிறைநிற்கில் சலத்தாற் கண்டம். *(121)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்தில் சந்திரனும் சூரியனும் நிற்க, நான்காமிடம் இரண்டாமிடம் இவற்றில் ஒன்றில் சனி இருக்க, இச்சாதகன் முதலையால் மரணமடைவான். குளிகன் அங்கிசம் பலம்பெற்று இருக்கும் வீட்டிற்கு ஏழாம் வீட்டில் தேய்பிறை சந்திரன் இருக்க, இச்சாதகனுக்கு நீரினால் கண்டம் ஏற்படும்.

## இதுவுமது

*ஆதித்தன் உதயம் நிற்ப*
*அம்புலி கன்னி யாக*
*பேரித்துப் பாவர் கூடிற்*
*பெருகிய சலத்தான் கண்டம்*
*சோதித்த உதயம் திங்கள்*
*சுடர்நிற்க உபய மாலைச்*
*சாதித்த பாவர் கூடிற்*
*சலத்தினில் மரண மாவன்.* *(122)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்தில் சூரியன் நிற்க, சந்திரன் கன்னி இராசியில் இருக்க, இதனுடன் பாவக்கோள் சேர, இச்சாதகனுக்கு நீரில் கண்டம் ஏற்படும். சென்ம இலக்கனத்தில் சூரியனும் சந்திரனும் இருந்தாலும் இரண்டாம் இடத்தில் புதன் இருக்க, பாவக்கோள் கூடியிருந் தாலும், இச்சாதகன் நீரில் விழுந்து மரணமடைவான்.

## பிசாசால், போர் செய்தலால் மரணம்

*சயமதி தன்னைச் செவ்வாய்*
*சனிராகு கேது கூடிற்*
*ப[illegible]மிகு வருத்த மாகிப்*
*பிசாசுபீ டையினாற் கண்டம்*
*வயமிரண் டினில்ப[illegible]லந்தான்*
*மாலையா[illegible]டையோன் பார்க்கிற்*
*செயமிகு போரி லுத்தஞ்*
*செய்துதான் மரண மாவான்.* *(123)*

(இ-ள்.) சந்திரனுடன் செவ்வாய், சனி, இராகு அல்லது கேது ஒன்று கூடி இருப்பின், இச்சாதகனுக்குப் பயத்தினால் மிகுந்த துன்பம் தோன்றி, பிசாசு பீடையினால் கண்டம் தோன்றும். சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் இடத்தில பலம்பெற்று நிற்கும் புதனை ஆறாமிடத்திற்கு அதிபதி பார்க்க, இச்சாதகன் போரின் பொழுது சண்டையிட்டு மரணமடைவான்.

### போர்க்களத்தில் மரணம்

பேர்க்குமொன் றெட்டு ளோர்கள்
பலவீன முறமூன் றோனைச்
சேர்க்குஞ்சேய் கூடப் பார்க்கிற்
செருசெய்து மரண மாவன்
கூர்க்குமூன் றுடையோன் செவ்வாய்
குளிகனும் கூடி ஆறெட்
டேர்க்குற நிற்பா ராகில்
எதிர்ச்சண்டை முகத்தில் வீழ்வன். *(124)*

(இ-ள்.) இலக்கனாதிபதி, எட்டாமிடத்திற்கு அதிபதி ஆகிய இருவரும் பலவீனமுற்றிருக்க, மூன்றாமிடத்திற்கு அதிபதியோடு செவ்வாய் சேர்ந்து இருக்க, அல்லது பார்க்க, இச்சாதகன் போர்க்களத்தில் போரிட்டு மரணமடைவான். சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்திற்கு அதிபதி, செவ்வாயுடனும் குளிகனுடனும் கூடி, ஆறாமிடத்தில் அல்லது எட்டாமிடத்தில் இருக்க, இச்சாதகன் போர்க் களத்தில் போரிடும்பொழுது மரணமடைவான்.

### இதுவுமது

வசையிலதேள் மேடாங் சத்தின்
வன்சனி இருக்கக் காரி
இசைதிரே காணஞ் தன்னை
இருஞ்செவ்வாய் கூடப் பார்க்க

வசையிலா ரவிக்கோள் செவ்வாய்
ஆயிடக் கிரகம் மாற
விசையமாம் போர்க்க ளத்தில்
வீவது திண்ண மாமே. *(125)*

*(இ-ள்.)* விருட்சிகம் அல்லது மேட அங்கிசத்தில் சனி இருக்க, சனியின் திரேகாணத்தில் செவ்வாய் ஒன்று கூட பார்க்க, சூரியனும் செவ்வாயும் கிரகம் மாற (பரிவர்த்தனை) இச்சாதகன், போர்க்களத்தில் போரிடுவதால் மரண மடைவான்.

**இதுவுமது**

குறிக்குமொன் றெட்டு ளோரைக்
குசன்கூடி எட்டில் நிற்கில்
அறிக்கையாம் ரணக ளத்தில்
ஆயுத மரண மாவன்
பறிக்குஞ்சத் ரேசன் தன்னைப்
பாவர்சேய் கூடப் பார்க்கிற்
செறிக் கும்போர்க் களத்தின்
மாய்வன் சேயரிக் கருங்கண் மாதே! *(126)*

*(இ-ள்.)* சிவந்த கோடுகளையும் கரிய நிறத்தையு முடைய கண்களைக் கொண்ட பெண்ணே! இலக்கனாதிபதி, எட்டாமிடத்திற்கு அதிபதி ஆகிய இருவருடன் செவ்வாய் ஒன்று கூடி எட்டாமிடத்தில் இருக்க, இச்சாதகன் போர்க் களத்தில் ஆயுதத்தால் மரணமடைவான். சென்ம இலக்கனத் திற்கு ஆறாமிடத்திற்கு அதிபதியுடன் பாவக்கோள், செவ்வாய் ஒன்று கூடி நிற்க, அல்லது பார்க்க, இச்சாதகன் போர்க்களத்தில் போரிட்டு மரணமடைவான்.

## கயிற்றினால் மரணம்

ஈட்டிய மகர கும்பம்
எட்டாகப் பாவ ரோடே
காட்டிய மதியும் நிற்கில்
கயிற்றினால் மரண மாவன்
கூட்டிய பிறையைக் காரி
கூடிக்கேந் திரிக்கப் பாவர்
வாட்டியே நெருக்கின் மாதே!
வன்கயி றதனால் மாள்வன். (127)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடமாக மகரம் அல்ல கும்ப இராசி அமைய, அதில் பாவக்கோளோடு சந்திரன் இருக்க, இச்சாதகன் கயிற்றினால் தூக்கிட்டுக் கொண்டு, மரணமடைவான். சந்திரனுடன் சனி சேர்ந்து கேந்திரத்தில் இருக்க, பாவக்கோள்கள் கூட, இச்சாதகன் கயிற்றினால் தூக்கிட்டுக்கொண்டு மரணமடைவான்.

## இதுவுமது

அஞ்சுமூன் றொன்றுள் ளோர்கள்
அரவுடன் கூடு மாகிற்
துஞ்சுவர் கயிற்றி னாலே
சொல்லிய மகர கும்பம்
விஞ்சுநா லிடமாய்த் திங்கள்
இருபவ ருடனே கூடிற்
பஞ்சின்மெல் லடியாய் கேளாய்!
பங்கயி றதனால் மாய்வன். (128)

(இ-ள்.) பஞ்சினைக் காட்டிலும் மென்மையான பாதங்களுடைய பெண்ணே! சென்ம இலக்கனம், மூன்றா மிடம், ஐந்தாமிடம் இவற்றுக்கு அதிபதிகளுடன் இராகு அல்லது கேது ஒன்று கூடி இருந்தால், இச்சாதகன் தூக்கிட்டுக் கொண்டு, அதனால் மரணமடைவான். சென்ம

இலக்கனத்திற்கு நான்காம் இடமாக மகரம் அல்லது கும்பம் இருக்க, அவ்விடத்தில் சந்திரன், இரண்டு பாவக்கோள் களுடன் கூடியிருந்தால், இச்சாதகன் கயிற்றில் தூக்கிட்டுக் கொண்டு அதனால் மரணமடைவான்.

## இதுவுமது

எட்டுமான் சாலாய் ராகு
இராசனும் இருக்க அல்லாற்
தட்டுறு மிராகு ஐந்திற்
சனியெட்டில் நாலிற் செவ்வாய்
அட்டுற நிற்கு மேனும்
ஐந்தொன்பான் தன்னிற் பாவர்
கட்டுறச் சாமி பார்க்கிற்
கயிற்றினால் மரண மென்னே. *(129)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடம் மகர இராசி அல்லது கும்ப இராசியாக இருக்க, அதில் இராகுவும் சந்திரனும் இருந்தாலும், இராகு, ஐந்தாமிடத்திலும் சனி, எட்டாமிடத்திலும், செவ்வாய், நான்காமிடத்திலும் இருந்தாலும், சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடம் ஏழாமிடம் இவற்றில் பாவக்கோள்கள் நிற்க, இவர்களை இலக்கனாதிபதி பார்க்கில், இச்சாதகன் தூக்கிட்டுக் கொண்டு அதனால் மரணமடைவான்.

## இதுவுமது

உதயமேற் சனியோ ரைந்திற்
ஒண்கதிர் ஒன்பான் செவ்வாய்
புதைவுறும் மதியம் பத்திற்
பொருந்திடிற் கயிற்றால் மாள்வன்
கதைசேயட் டமத் தோன் அங்சக்
காரிமா மதியுங் கூடச்
சிதையும்அம் புலியைச் சாமி
திருட்டிக்கி னாணி கொள்வன். *(130)*

(இ-ள்.) இலக்கனத்தில் சனியும், ஐந்தாமிடத்தில் சூரியனும் ஒன்பதாமிடத்தில செவ்வாயும், பத்தாமிடத்தில் சந்திரனும் நிற்க, இச்சாதகன் தூக்கிட்டுக்கொண்டு, அதனால் மரணமடைவான். செவ்வாய், எட்டாமிடத்திற்கு அதிபதி ஆகியோரின் அங்கிசங்களில் சனியும் சந்திரனும் ஒன்றுகூடி இருக்க, சந்திரனை இலக்கனாதிபதி பார்க்க, இச்சாதகன் தூக்கிட்டுக்கொண்டு அதனால் மரணமடைவான்.

## இதுவுமது

வட்டவெண் மதிக்கைந் தொன்பான்
வன்பவர் இருக்கப் பார்க்க
அட்டமத் திரேகா ணேசன்
அதிபாவி யாகிப் பார்க்கில்
விட்டதோர் வினைப்ப யத்தால்
விரைவுட னாணி கொள்வான்
இட்டமாங் கொவ்வைச் செவ்வாய்
ஏந்திளங் கொங்கை மாதே! (131)

(இ-ள்.) கொவ்வைக்கனி போன்ற சிவந்த இதழ் களையும், இளமை பொருந்திய தனங்களையும் உடைய பெண்ணே! நிறைந்த சந்திரன் நின்ற சென்ம இராசிக்கு ஐந்தாமிடத்தில் அல்லது ஒன்பதாமிடத்தில் பாவக்கோள் இருக்க அல்லது அந்த இடங்களைப் பார்க்க, எட்டா மிடத்திற்குத் திரேகாணத்ததிபதி பாவக்கோளாகிப் பார்க்க, இச்சாதகன் தான் செய்த தீய செயலை எண்ணி அச்சத்தின் காரணமாகத் தூக்கிட்டுக்கொண்டு மரணமடைவான்.

## கள்வர்களால் மரணம்

உச்சநீர்க் கீழிற் பாவர்
உறைந்திடக் கோண கேந்திரம்
அச்சுறச் சாமி சேயோன்
அணிபெறச் சனியன் பார்க்கிற்

குச்சமாய் ஹானிக் கொள்வான்
குளிகன்அங் கிசரா சிக்கு
நிச்சயம் ஏழிற் காரி
நிற்கிற்சோ ரர்களால் மாய்வன். (132)

*(இ-ள்.)* நீர்க்கீழ் இராசியில் பாவர் இருக்க, கேந்திர கோணத்தில் இலக்கனாதிபதி, செவ்வாய் ஆகியோர் நிற்க, இவர்களைச் சனி பார்த்தால், இச்சாதகன், தூக்கிட்டுக் கொண்டு மரணமடைவான். குளிகனின் அங்கிச இராசிக்கு ஏழாமிடத்தில் சனி இருக்க, இச்சாதகன் திருடர்களால் தாக்குண்டு மரணமடைவான்.

## இதுவுமது

தகுமிலக் கனத்திற் றிங்கள்
சாற்றெட்டில் வருமார்த் தாண்டன்
மிகுபல வீன மாக
வியத்திற்பொன் னவன்வி ளங்க
நகுமொரு நாலிற் பாவர்
நாட்டமாய்க் கூட்ட மாகிற்
றொகுதியாம் இராக்கா லத்திற்
சோரனால் மரண மாவன். (133)

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்தில் சந்திரன் இருக்க, அதற்கு எட்டாம் இடத்தில் சூரியன் பலமிழந்து இருக்க, பன்னிரண்டாம் இடத்தில் குரு இருக்க, சென்ம இலக்கனத்திற்கு நான்காம் இடத்தில் பாவக்கோள்கள் ஒன்று கூடி இருக்க, இச்சாதகன் இரவு நேரத்தில் கள்வர்களால் உயிரிழப்பான்.

## இரத்தமூலம், பிரமேகத்தால் மரணம்

விருட்சிக மேடம் நாலாம்
இடமாக மதியி னோடே
எரித்தெழு பாவர் நிற்கில்
இரத்தமூ லத்தால் மாய்வன்

தெரித்தெழு வெள்ளி எட்டிற்
றெளிவொடு கூடப் பார்க்க
வரித்திரு பிரமே கத்தால்
அங்கமே உருகி மாய்வன். (134)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடமாக விருட்சிக இராசி அல்லது மேட இராசி அமைந்து, அதில் இருக்கும் சந்திரனோடு பாவக்கோள்கள் ஒன்றுகூடி இருப்பின், இச்சாதகன், இரத்த மூலத்தால் துன்பமுற்று மரணமடைவான். சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் சுக்கிரன் இருக்க, அல்லது எட்டாமிடத்தைப் பார்க்க, இச்சாதகன் பிரமேக நோயினால் உடல் மெலிவுற்று உருகி, மரணமடைவான்.

**சுவாசகாசம், ஈளை, இருமலால் மரணம்**

அடைவுறு சாமி பாவர்
அங்கிச மாக ஆறெட்
டுடையவர் பார்ப்பா ராகில்
உருகுறும் சுவாச காசத்
திடைவுறும் ஈளை சூலை
இருமலால் மெலிந்து மாய்வன்
படைநெடுங் கதிர்வேற் கண்ணாய்!
பகர்ந்தனர் கணித நூலோர். (135)

(இ-ள்.) படைக்கலமான நீண்ட ஒளிபொருந்தி வேலைப்போன்று கூரிய பார்வையினையுடைய பெண்ணே! இலக்கனாதிபதி, பாவர் அங்கிசத்தில் இருக்க, ஆறாமிடத்திற்கு அதிபதி, எட்டாமிடத்திற்கு அதிபதிகள் பார்த்தால், இச்சாதகன் சுவாசகாசம், ஈளை, சூலை, இருமல் ஆகிய நோய்களால் நலிவுற்று மரணமடைவான் என்று சோதிட நூல் வல்லவர்கள் கூறியுள்ளார்கள்.

## கபால சூலையால் மரணம்

ஓங்கிய மிதுனாங் சத்தில்
உதயத்தோன் உறைந்து நிற்கத்
தேங்கிய ஆறெட் டுள்ளோர்
திருட்டியுண் டாகு மாயின்
வீங்கிய கபால சூலை
மேலவர் எவர்பார்த் தாலும்
ஏங்கிய மரண மாவன்
என்றனர் கணித நூலார். *(136)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனாதிபதி மிதுனாங்கிசத்தில் இருக்க, இவனை ஆறாமிடத்திற்கு அதிபதியும் எட்டா மிடத்திற்கு அதிபதியும் பார்க்க, இச்சாதகன் கபால சூலை நோயை அடைவான். மருத்துவர்கள் எவர் பார்த்தாலும் நோய் குணமாகாமல் மரணமடைவான் என்று சோதிடநூல் வல்லவர்கள் கூறியுள்ளார்கள்.

## இதுவுமது

இவர்தரு கோலில் செவ்வாய்
இடபத்தில் இரவி நிற்க
தவறிலா மகர கும்பம்
தன்னிலம் புலிதான் மேவிற்
குவலயம் மயக்குங் கண்ணாய்!
கொடுநிர கக்கு ழிக்கு
அவக்கேட தாக வீழ்ந்தே
அவிடத்தில் மரண மாவன். *(137)*

*(இ-ள்.)* துலா இராசியில் செவ்வாய் நிற்க, இடப இராசியில் சூரியன் இருக்க, மகர இராசி அல்லது கும்ப இராசியில் சந்திரன் இருக்க, இச்சாதகன் கொடுமையான நரகக் குழி போன்றதில் வீழ்ந்து மரணமடைவான்.

**ஆயாச மரணம்**

குளிகனங் சத்தோ னுக்கே
கூறேழிற் சுபர்ப லக்க
இழியுங்கேந் திரத்தி னற்கோள்
உறுதியாய் நிற்க அன்னோர்
வழியுறப் பார்ப்பா ராயின்
வருந்திடும் ஆயுள் சென்றே
அழியுநாள் வருங்கா லத்தில்
ஆயாச மரண மாவன். (138)

(இ-ள்.) குளிகன் நின்ற அங்கிசத்தோனுக்கு ஏழா மிடத்தில் சுபக்கோள் பலம்பெற்று இருக்க, கேந்திரத்தில் சுபக்கோள் பலம் பெற்று நிற்க, சுபக்கோள் இவர்களைப் பார்க்க, இச்சாதகன் துன்பமுற்று மரணமடைவான்.

**விரணத்தால் மரணம்**

படஅர வெட்டில் நிற்பப்
பகரெட்டோன் பாவி யாகித்
திடமொடு பார்ப்பா னாகிற்
றேகத்திற் விரணம் மீறி
உடலெல்லாம் புழுத்துக் கொண்டே
உலைந்தெச்சிற் கலையில் வீழ்ந்து
தடவிநின் றுழன்று மாய்வன்
தாமரை முகத்தி னாளே! (139)

(இ-ள்.) தாமரை போன்ற அழகான முகத்தையுடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் இராகு அல்லது கேது நிற்க, எட்டாமிடத்திற்கு அதிபதி பாவியாகி இவனைப் பார்க்க, இச்சாதகன் உடலில் புண், காயம் முதலானவை மிகுந்து, உடலெல்லாம் புழு புழுத்து, மிகவும் துன்பத்தில் உழன்று மரணமடைவான்.

### தூக்கத்தில் உருண்டு வீழ்ந்து மரணம்

நோக்குற்ற மதியும் ஒன்றில்
நுவல்கதி ரெட்டி லாகில்
வீக்குற்ற பலங்கே டாக
வியத்தின்மந் திரியு மேவத்
தாக்குற்ற நாலிற் செவ்வாய்
சனியுடன் கூடி நிற்கில்
தூக்கத்தி லுருண்டு வீழ்ந்தே
துடித்துடன் மரண மாவன். (140)

(இ-ள்.) இலக்கனத்தில் சந்திரன் இருக்க, எட்டா மிடத்தில் சூரியன் பலம் தாழ்ந்து இருக்க, பன்னிரண்டா மிடத்தில் குரு இருக்க, நாலாமிடத்தில் செவ்வாய், சனியுடன் கூடி இருக்க, இச்சாதகன் தூங்கிக்கொண்டிருக்கும் பொழுது உருண்டு விழுந்து, அதன் காரணமாக மரணமடைவான்.

### விறகு கட்டையால், ஆசன வியாதியால் மரணம்

பையவே எட்டில் காரி
பத்தில்தேய் மதியும் நாலில்
வெய்யவன் றானு நிற்கில்
விறகுகட் டாலே சாவன்
செய்யகேந் திரத்தா னத்தில்
தேய்மதி நிற்க நீலன்
உறப்பார்க்கில்தான் மாதே!
ஆசன வியாதி கொல்லும். (141)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் சனியும், பத்தாமிடத்தில தேய்ந்த சந்திரனும், நான்கா மிடத்தில் சூரியனும் நிற்க, இச்சாதகன், விறகு கட்டையால் தாக்கப்பட்டு மரணமடைவான். கேந்திரத்தில் தேய்ந்த சந்திரன் இருக்க, இவனைச் சனி பார்க்க, இச்சாதகன் ஆசன வியாதியால் மரணமடைவான்.

**பசி, தாகத்தால் மரணம்**

*ஆற்றிய சாமி எட்டில்*
*அங்கிச மாக அல்லால்*
*சாற்றிய மூட மாகிச்*
*சத்துருத் தானம் நிற்கில் ,*
*ஈற்றிய பந்துற் றார்கள்*
*இல்லாத இடத்தி லேதான்*
*ஒற்றிய பசிதா கத்தாற்*
*கோபத்தால் மரண மாவன்.* *(142)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் இலக்கனாதிபதி இருக்க அல்லது எட்டாமிடத்ததிபதியின் அங்கிசமாக மூடம் பெற்று ஆறாமிடத்தில் நிற்க, இச்சாதகன், உறவினர்கள் இல்லாத ஊரில் பசி, தாகம் இவற்றால் வாடி மரணமடைவான்.

**இதுவுமது**

*கன்னியங் கிசத்திற் சாமி*
*கலந்திடில் ஆறெட் டுள்ளோர்*
*துன்னிய பாவி யாகித்*
*துண்ணெனப் பார்ப்பா ராகி*
*உன்னிய குய்ய ரோகம்*
*உகரவே தனையால் மாய்வன்*
*பன்னிய கணிதம் கூறும்*
*பாலும்தேன் அனைய மானே!* *(143)*

*(இ-ள்.)* கன்னியங்கிசத்தில் இலக்கனாதிபதி இருக்க, ஆறாமிடம், எட்டாமிடம் இவற்றுக்கு அதிபதிகள் பாவர்களாகி இதனைப் பார்க்க, ஆசன நோயினாலும், வயிற்று வலியினாலும் துன்பமுற்று இச்சாதகன் மரணமடைவான்.

## நாய்க்கடியினால் மரணம்

உரைத்திடும் உதயமைந் தொன்ப திற்கதி
ரிரைந்தெழு குசன்மதி இருக்க எட்டினிற்
கரைந்திடு சனியுறிற் கனன்று சீறியே
குரைத்தெழு ஞமலியாற் குலைவன் ஆகமே. *(144)*

(இ-ள்.) இலக்கனத்தில், ஐந்தாமிடத்தில், ஒன்பதா மிடத்தில் சூரியன், செவ்வாய், சந்திரன் ஆகிய மூன்று கோள்களும் ஒன்றுகூடி இருக்க, சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் சனி இருக்க, இச்சாதகன் நாய்க்கடியினால் உடல் துன்பமுற்று மரணமடைவான்.

## தன் வயிற்றைத் தானே கீறி மரணம்

இயங்கிய மேடந் தேளே
இலக்கனாங் கிசம தாகத்
தியங்குலக் கனந்தா னாகத்
தேய்மதி பானு நிற்க
வயங்குசிங் கத்திற் பாம்பு
மாலுமே கூடி நின்றாற்
றயங்கிய வயறு தன்னைத்
தான்பீறிக் கொண்டு மாய்வன். *(145)*

(இ-ள்.) இலக்கனாங்கிசமாக மேட இராசி அல்லது விருச்சிக இராசி இருக்க, இலக்கனத்தில் தேய்ந்த சந்திரனும் சூரியனும் ஒன்றுகூடி இருக்க, சிம்ம இராசியில இராகு அல்லது கேது, புதனுடன் கூடி இருக்க, இச்சாதகன், தன்னுடைய வயிற்றைத் தானே கீறிக்கொண்டு, அதன் மூலம் மரணமடைவான்.

## இதுவுமது

வளித்தலக் கனத்திற் காரி
மலிவுறச் சுபரே பார்க்கச்
சினத்தரா குடனா தித்தன்
றேய்மதி கூடி நிற்கில்
குளித்துறு வயிற்றைப் பீறிக்
கொண்டுதான் மரண மாவன்
பனித்துளி துளிக்குஞ் செம்பொன்
பங்கய முகத்தி னாளே! *(146)*

*(இ-ள்.)* பனித்துளிகள் துளிர்க்கின்ற சிவந்த பொன்னைப் போன்று ஒளிப்பொருந்திய செந்தாமரையை ஒத்த மலர்ந்த முகத்தையுடைய பெண்ணே ! சென்ம இலக்கனத்தில் சனி இருக்க, அவனைச் சுபக்கோள் பார்க்க, இராகுவுடன் சூரியன், தேய்ந்த சந்திரன் ஆகிய கோள்கள் ஒன்றுகூடி நின்றால், இச்சாதகன் ஆயுதத்தால் தன் வயிற்றைத் தானே கீறிக்கொண்டு மரணமடைவான்.

## தன்னைத்தானே அறுத்துக்கொண்டு மரணம்

மங்கலன் நாலில் நிற்க
வன்கதிர் ஐந்தில் மேவப்
பங்கஞ்சேய் சனிபத் தாகப்
பத்தோனைச் சாமி கூடிற்
சங்கையாற் சூல வண்டி
தன்னிலே இறுக்கிக் கட்டி
அங்கமேற் சதையைக் கொய்தே
அருந்தெனக் கொடுப்பன் கண்டாய். *(147)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்தில் செவ்வாய் நிற்க, ஐந்தாமிடத்தில் சூரியன் நிற்க, அல்லது செவ்வாயும், சனியும் சென்ம இலக்கனத்திற்குப் பத்தா மிடத்தில் ஒன்று கூடி இருக்க, அல்லது பத்தாமிடத்திற்கு

அதிபதியுடன் இலக்கனாதிபதி ஒன்று கூடி இருக்க, இச்சாதகன் தன் சதையைத் தானே அறுத்துக் கொடுத்து மரணமாவான்.

குறிப்பு: சூல வண்டி என்பது இன்று வழக்கில் இல்லை. ஆதலால் இந்த மரணத்தைப் பற்றி தெளிவாக அறிய முடியவில்லை.

## வாகனத்திலிருந்து விழுந்து மரணம்

வண்பத்தில் இரவி நாலில்
வக்கிரன் இருக்கு மேனும்
திண்பெறக் கதிரோன் ஐந்தில்
தேய்மதி யுடனே கூடப்
பண்புறப் பாவர் பார்க்கிற்
பரித்துவா கனமே லேறி
நண்புறத் தரையில் வீழ்ந்தே
நடுங்கியே மரண மாவன். *(148)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பத்தாமிடத்தில் சூரியன் இருக்க, நான்காமிடத்தில் செவ்வாய் இருந்தாலும் ஐந்தாமிடத்தில் சூரியனும் தேய்பிறை சந்திரனும் ஒன்றுகூடி இருக்க, இவர்களைப் பாவக்கோள் பார்க்க, இச்சாதகன், வாகன விபத்தினால் தரையில் விழுந்து மரணமாவான்.

## வாகன விபத்து, நாற்கால் விலங்கினால் மரணம்

தனமதிற் சனியும் நாலிற்
சந்திரன் பத்திற் சேயும்
கனமுடன் நிற்கில் வாக
னத்தேறி வீழ்ந்து சாவன்
வனவசத் துருத்தா னத்தோன்
வன்சனி பாம்பைக் கூடி
வினவியே பார்க்கின் நாற்கால்
மிருகத்தால் மரண மாவன். *(149)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்தில் சனியும், நாலாமிடத்தில் சந்திரனும், பத்தாமிடத்தில் செவ்வாயும் இருக்க, இச்சாதகன் வாகன விபத்தில் மரணமடைவான். சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்திற்கு அதிபதி, சனி, இராகு அல்லது கேதுவுடன் கூடி இருந்தாலும், அவர்களைப் பார்த்தாலும், இச்சாதகன் நான்கு கால்களை யுடைய விலங்கு ஒன்றினால் மரணமடைவான்.

## யானையிலிருந்து விழுவதால், நாய்க்கடியால் மரணம்

குருவுஞ்சத் துருவீட் டோனுங்
கூடவே எட்டிற் பானு
சருவுறப் பார்க்கில் யானை
தனிலேறி வீழ்ந்து மாய்வன்
வருமாறுக் குடையோன் காரி
மதிரவி தன்னைக் கூடின்
வெருவியநாய் கடியால் மாய்வன்
வெண்மதி முகத்தி னாளே! (150)

(இ-ள்.) நிறைந்த சந்திரனைப் போன்ற பொலிவுடைய முகத்தை உடைய பெண்ணே! குருவும் ஆறாமிடத்திற்கு அதிபதியும் கூடி இருக்க, எட்டாமிடத்தில் சூரியன் இருக்க அல்லது இவர்களைப் பார்க்க, இச்சாதகன் யானையிலிருந்து விழுந்து இறந்து போவான். சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்திற்கு அதிபதி, சனி, சந்திரன், சூரியன் ஆகியோருடன் ஒன்றுகூடி இருக்க, இச்சாதகன் வெறிநாய் கடியால் மரணமடைவான்.

## மான்கொம்பு குத்துவதால், நாய்க்கடியால் மரணம்

சத்துருத் தானத் தோனும்
சனிரவி செவ்வாய்க் கூடி
பொத்துடன் நிற்பா ராகில்
ஒண்கலை பாய்ந்து மாய்வன்

வைத்தமூன் றுடையோ னோடே
மால்சனி வெள்ளி சேரில்
நினத்துரு விழியி னிற்பேய்
நாய்க்கடி யாலே மாய்வன். (151)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்திற்கு அதிபதியுடன் சனி, சூரியன், செவ்வாய் ஆகிய கோள்களுடன் ஒன்று கூடி இருக்க, இச்சாதகன் மான் பாய்ந்து, கொம்பினால் குத்துவதால் மரணமடைவான். சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்திற்கு அதிபதியுடன் புதன், சனி, சுக்கிரன் ஆகிய கோள்கள் ஒன்று கூட, இச்சாதகன் நாய்க்கடியால் மரணமாவான்.

குறிப்பு: 'நினத்துரு விழியி னிற்பேய்' என்பதன் பொருள் விளங்கவில்லை.

## இதுவுமது

வாக்குத்தா னத்தி லேனும்
வாக்கேசன் தன்னோ டேனும்
மாக்கும்வெஞ் சனியன் கூட
அட்டமா திபனே பார்க்கிற்
றேக்குநாற் பாதை மீதே
சினத்தநாய்க் கடியாற் கண்டம்
வீக்குங்குஞ் சரத்தை வெற்பை
வேறுசெய் தனத்தி னாளே! (152)

(இ-ள்.) பெரிய யானையின் மத்தகத்தையும் மலையையும் ஒத்த தனங்களைக் கொண்ட பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் தானத்தில் அல்லது இரண்டாம் தானத்திற்கு அதிபதியுடன் சனி சேர, இவர்களை எட்டாமிடத்திற்கு அதிபதி பார்க்க, இச்சாதகன் நடந்துவரும் வழியில் நாய் கடித்து அதனால் கண்டம் உண்டாகும்.

### விரண நோயால் மரணம்

செருக்கிலக் கனத்தி னானும்
திரேகாணம் பிறக்கப் பாவர்
தருக்குற நோக்கில் உச்சந்
தலைவிர ணத்தாற் கண்டம்
கருக்கிரண் டாந்திரே காணம்
கழுத்தின்கீழ் அரைமேல் நோயாம்
அடுக்குமூன் றாம்திரே காணம்
அரைக்குக்கீழ் விரண கண்டம். *(153)*

*(இ-ள்.)* இலக்கனாதிபதி முதல் திரேகாணம் பிறக்க, அதனைப் பாவக்கோள் பார்க்க, இச்சாதகன், உச்சந்தலையில் தோன்றும் விரணத்தால் மரணமடைவான். இரண்டாந் திரேகாணம் பிறக்க, இச்சாதகனுக்குக் கழுத்திற்குக் கீழ் இடுப்பிற்கு மேலும் நோய் உண்டாகும். மூன்றாம் திரேகாணம் பிறக்க, இச்சாதகனுக்கு இடுப்பிற்குக் கீழ் நோய் உண்டாகும்.

### இரத்த காசத்தால், தாயின் கோபத்தால் மரணம்

கன்னியில் தீக்கோள் நற்கோள்
கலந்துறச் சனியும் கூடிற்
அன்னிலை இரத்த காசத்
தலறியே வீழ்ந்து மாய்வன்
மன்னிய சாமி பாவர்
மத்தியங் கேந்தி ரிக்கத்
தன்னிற்றீக் கோளெட் டாகில்
தாய்கோபத் தாலே மாய்வன். *(154)*

*(இ-ள்.)* கன்னி இராசியில் பாவக்கோள்களும் சுபக் கோளும் கலந்து இருக்க, இதனுடன் சனியொன்று கூடி நிற்க, இச்சாதகன் இரத்தகாசத்தால் துன்பமுற்று மரணமடைவான். சென்ம இலக்கனாதிபதி, பாவக்கோள்களுக்கு இடையே கேந்திரத்தில் இருக்க, எட்டாமிடத்தில் பாவக்கோள் இருக்க, இச்சாதகன் தாயின் கோபத்தால் மரணமடைவான்.

## அரசகோபத்தால் மரணம்

செய்யவன் நாலில் ஏழிற்
செங்கதிர் பத்திற் காரி
பையுற வன்றி பார்த்தால்
அரசன்கோ பத்தாற் கண்டம்
மெய்யுறு குளிக னங்ச
விராசிக்கோர் ஏழு தன்னில்
நினையுறும் மதியு முற்றால்
ராசகோ பத்தாற் சாவன். (155)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நாலாமிடத்தில் செவ்வாய் இருக்க, ஏழாமிடத்தில் சூரியன் இருக்க, பத்தா மிடத்தில் சனி இருக்க அன்றி பார்த்தால், இச்சாதகனுக்கு அரசனின் கோபத்தால் கண்டம் நேரிடும். குளிகன் நின்ற அங்கிச இராசிக்கு ஏழாமிடத்தில் சந்திரன் இருந்தால், இச்சாதகனுக்கு அரசனின் கோபத்தால் கண்டம் நேரிடும்.

## நீர்ப்பாட்டினால் மரணம்

கோலில்சேய் ஆடா தித்தன்
குடமக ரத்தில் இந்தும்
பாலித்து நிற்கில் தானீர்ப்
பாட்டினால் மரணம் எய்தும்
மாலித்த மதியும் பத்தில்
அருக்கனேழ் நாலிற் செவ்வாய்
சேலிக்க இருக்கின் மாதே!
சொல்லுநீர்ப் பாட்டாற் கண்டம். (156)

(இ-ள்.) துலாம் இராசியில் செவ்வாய் நிற்க, மேட இராசியில் சூரியன் இருக்க, மகரம் அல்லது கும்ப இராசியில் சந்திரன் நிற்க, இச்சாதகனுக்கு நீர்ப்பாட்டு நோயினால் மரணம் நேரிடும் சென்ம இலக்கனத்திற்குப் பத்தாம் இடத்தில் சந்திரனும் ஏழாமிடத்தில் சூரியனும் நான்காமிடத்தில் செவ்வாயும் நிற்க, இச்சாதகனுக்கு நீர்ப்பாட்டினால் மரணம் ஏற்படும்.

## அசீரணத்தால் மரணம்

உள்ளுநா லெட்டோர் கூடி
ஒராறில் இருக்கு மேனும்
விள்ளுமட் டமத்தோன் வேந்தன்
மிக்கலக் கிலத்தோன் றானும்
தள்ளுறா தொன்றலாய்க் கூடிச்
சத்துருத் தானம் நிற்கில்
எள்ளுறும சீர ணத்தால்
ஏங்கியே மரண மாவன். (157)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்திற்கு அதிபதி, எட்டாம் இடத்திற்கு அதிபதி ஒன்றுகூடி ஆறாமிடத்தில் இருந்தாலும் இச்சாதகன், அசீரணக் குறைபாடு காரணமாக மரணமாவான்.

## இதுவுமது

ஏழுநா லிரண்டுக் குள்ளோர்
எட்டுளோன் தன்னைக் கூடி
வீழுற ஆறில் நிற்கின்
மிகுமசீ ரணத்தாற் கண்டம்
ஆழுறுஞ் சாமி நாலோன்
அந்தணன் ஒன்றாய்க் கூடிற்
கோளுறு மசீர ணத்தாற்
கோதையே மரண மாவன். (158)

(இ-ள்.) மலர்மாலையைச் சூடியுள்ள பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடம், இரண்டாமிடம், எட்டாமிடம் இவற்றுக்கு அதிபதிகள் ஒன்றுகூடி ஆறாமிடத்தில் இருக்க, இச்சாதகன் அசீரணம் காரணமாக மரணமடைவான். சென்ம இலக்கனாதிபதி, நான்கா மிடத்திற்கு அதிபதி, குரு ஆகிய மூவரும் ஒன்றாகக் கூடி இருந்தாலும், இச்சாதகன் அசீரணத்தால் மரணமடைவான்.

## இதுவுமது

ஏறிய நாலு மூன்றோ
டிரண்டுளோர் ஒன்றாய்க் கூடி
ஆறினில் இருக்கு மேனும்
அருக்கன்சேய் நாலில் நிற்க
கூறிய சனியும் இந்தும்
கூடியே எட்டின் மேவின்
மீறிஅ சீர ணந்தான்
மெய்யறி வழிந்து வீழ்வன். *(159)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடம், மூன்றாமிடம், இரண்டாமிடம் ஆகிய மூன்று இடங்களுக்கு அதிபதிகளும் ஒன்று கூடி ஆறாமிடத்தில் இருந்தாலும், சூரியனும் செவ்வாயும் ஒன்றுகூடி, சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்தில் இருக்க, சனியும் சந்திரனும் ஒன்றுகூடி எட்டாமிடத்தில் இருக்கின், இச்சாதகன் அசீரணத்தால் துன்பமுற்று மரணமடைவான்.

## முயலகன் நோய் அடிக்கடி தோன்றுதல்

இயம்பிய நாலு பத்தோ
டெட்டிற்தேய் மதியும் மேவச்
சுபம்பெறு செவ்வாய் ராகு
சனிகூடின் முயல கன்னால்
இயம்பெறு மரண முண்டாம்
மிகுநற்கோள் கூடப் பார்க்கில்
இயம்பெறும் இன்னோய் தானே
அடிக்கடி வந்து தோன்றும். *(160)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடம், பத்தாமிடம், எட்டாமிடம் இவற்றிலொன்றில், தேய்பிறைச் சந்திரன் இருக்க, இதனோடு செவ்வாய், இராகு, சனி ஆகிய மூன்று கோள்களும் ஒன்றுகூடி, இச்சாதகன் முயலகன் நோயினால் உயிரிழப்பான். சுபக்கோள்கள் மேற்கண்ட

கோள்களோடு சேர அல்லது மேற்கண்ட கோள்களை நற்கோள்கள் பார்க்க, இச்சாதகனுக்கு முயலகன் நோய் அடிக்கடி தோன்றும்.

## வீட்டிற்கு வெளியில், காட்டில் மரணம்

எட்டிடஞ் சரமே யாகி
எட்டுளோன் சனியைக் கூடி
விட்டிடும் உபய மேவில்
வீடிலா வெளியில் வீழ்வான்
தட்டிடும் உபயம் எட்டாய்ச்
சனியெட்டோன் தன்னைச்சார்ந்தே
மட்டிடு சரத்தில் எய்தில்
வனத்திலே மரணம் என்னும். *(161)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடம் சர இராசியாகி, எட்டாமிடத்திற்கு அதிபதி, சனியுடன் ஒன்றுகூடி, உபய இராசிகளில் ஒன்றில் நிற்பின், இச்சாதகன் வீட்டிற்கு வெளியில் மரணமடைவான். சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடம் உபய இராசியாக இருக்க, சனி, எட்டாமிடத்திற்கு அதிபதியுடன் ஒன்று கூடி, சர இராசி ஒன்றில் இருக்க, இச்சாதகன், காட்டில் உயிரிழப்பான்.

## சிவாலயம், பூந்தோட்டம், தோப்பில் மரணம்

தவாவிலக் கனவி யத்திற்
தபனன்சேய் இருக்கு மேனும்
அவாவுறும் ஏழிற் றிங்கள்
அருக்கன்பால் கூடு மேனும்
சிவாலயம் புட்பந் தோட்டம்
செழுந்தோப்பி லேனும் வீழ்வான்
உவாமதி நுதலி னாளே!
உண்மையீ துரைத்த வாறே. *(162)*

(இ-ள்.) பூரணச் சந்திரனை ஒத்த ஒளிபொருந்திய நெற்றியையுடைய பெண்ணே! சென்ம இலக்கனத்தில் அல்லது பன்னிரண்டாமிடத்தில் சூரியன், செவ்வாய் ஒன்றுகூடி இருந்தாலும், சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் சந்திரன், சூரியனோடு சேர்ந்து நின்றாலும் இச்சாதகன், சிவன்கோயில், நந்தவனம், தோப்பு இவற்றில் ஒன்றில் உயிரிழப்பான் என்று உரைத்துள்ளார்கள்.

## கள்ளர்களால், பகைவர்களால் மரணம்

தந்தநீர் கீழிற் பாவர்
தானுற வேயா றெட்டில்
உந்துதேய் மதியா தித்தன்
உற்றிட பத்தோன் பார்க்கிற்
சொந்தயாத் திரையாய்ப் போகிற்
சோரர்சத் துருவி னாலே
சிந்துற மரண மாவன்
தெள்ளமு தனைய தேனே! *(163)*

(இ-ள்.) தெளிந்த அமுதத்தை ஒத்த இனிமையான பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு நான்காம் இடத்தில் பாவக்கோள் நிற்க, இதற்கு ஆறாமிடம், எட்டாமிடம் இவற்றில் ஒன்றில் தேய்பிறைச் சந்திரனும் சூரியனும் நிற்க, இவர்களைப் பத்தாம் இடத்திற்கு அதிபதி பார்க்க, இச்சாதகன் புனிதப்பயணம் செல்லும்பொழுது திருடர்களால் அல்லது பகைவர்களால் உயிரிழப்பான்.

குறிப்பு: நீர்க்கீழ் - உதயத்திற்கு நாலாமிட இராசி.

## வழிநடைக் களைப்பினால் மரணம்

ஊனுத யத்தின் மூன்றில்
உவர்மதி இருக்க ஏழிற்
சேனுறுஞ் செவ்வாய் நிற்கத்
தினகரன் பார்வை யுற்றாற்

கானுறும் வழிந டப்பிற்
களையினான் மூர்ச்சை யாகி
வீணுறு மரண மாவன்
வேற்றடங் கண்ணி னாளே! (164)

(இ-ள்.) வேல் போன்ற கூர்மையினைக் கொண்ட பெரிய கண்களையுடைய பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்கு மூன்றாம் இடத்தில் நிறைந்த சந்திரன் இருக்க, ஏழாமிடத்தில் செவ்வாய் நிற்க, இந்தச் செவ்வாயைச் சூரியன் பார்க்க, இச்சாதகன், காட்டுவழியில் நடக்கும்பொழுது, மிகுந்த களைப்புற்று மூர்ச்சையடைந்து, அதன் காரணமாக மரணமடைவான்.

### நாற்காலிகளால் மரணம்

தேடரும்லக் கனத்திற் காரி
தோன்றநேத் திரத்தோன் பார்க்கிற்
தடமுரு எருமை வர்க்கம்
தன்னினால் மரண மெய்தும்
கடகத்தில் சனியன் மானிற்
கலைமதி கன்னி செவ்வாய்
நடவுற்றி வண்ண நிற்க
நாற்காலி தன்னால் மாய்வன். (165)

(இ-ள். சென்ம இலக்கனத்தில் சனி நிற்க, இவனை இரண்டாம் இடத்திற்கு அதிபதி நோக்க, இச்சாதகன், எருமை தாக்குதலினால் உயிரிழப்பான். கடகத்தில் சனியும், மகரத்தில் சந்திரனும், கன்னியில் செவ்வாயும் நிற்க, இச்சாதகன் நாற்கால் விலங்கு ஒன்றால் உயிரிழப்பான்.

### தீயால் மரணம்

முனைபெறு சனியும் இந்தும்
மொழியுங்நேத் திரத்தில் ஏற
நினைவுறு பாவர் முன்பின்
நெருக்கிடில் நெருப்பால் வீழ்வான்

தனையசேய் மதியும் உச்சம்
ஆட்சியில் இருக்கத் தீக்கோள்
வினையுற நெருக்கின் மாதே!
வெவ்வழற் கிரையாய் மாள்வன். *(166)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் இடத்தில் சனியும் சந்திரனும் இருக்க, இதற்கு முன்பின் இராசிகளில் பாவக்கோள் இருக்க, இச்சாதகன் நெருப்பில் வீழ்வதால் உயிரிழப்பான். செவ்வாயும் சந்திரனும் உச்சம் அல்லது ஆட்சி வீடுகளில் இருக்க, இதற்கு முன்பின் இராசிகளில் பாவக் கோள் இருக்க, இச்சாதகன் நெருப்பில் வீழ்வதால் உயிரிழப்பான்.

**இதுவுமது**

நிரைசுறாக் குடத்தைப் பாவர்
நெருக்கிட மதிநின் றாலும்
முறைதரு நாலிற் செவ்வாய்
ஓரேழிற் பதங்கன் மேவக்
குறைவிலாச் சனியன் பத்திற்
குலவியே இருப்பா னாகில்
அறைதரு நெருப்பி னாலே
ஆபத்தாய் மரண மாவன். *(167)*

*(இ-ள்.)* மகர இராசி, கும்ப இராசி இவற்றில் பாவக் கோள் இருக்க, அதனோடு சந்திரன் ஒன்றுகூடி இருந்தாலும், சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்தில் செவ்வாயும் ஏழாமிடத்தில் சூரியனும் இருக்க, சனி பத்தாமிடத்தில் இருந்தாலும் இச்சாதகன், தீயில் விழுவதால் மரண மடைவான்.

**இதுவுமது**

எடுத்தலக் கனத்தின் மந்தன்
ஏழினிற் கதிரோன் நாலிற்
அடுத்தசேய் நிற்கு மேனும்
ஆறுளோன் அங்கி சத்தோன்

விடுத்தசேய் பலவீ னத்தின்
மேவிடப் பாவர் பார்க்கிற்
கடுத்திடும் நெருப்பாற் கண்டம்
காணவே மரண மாவன். (168)

(இ-ள்.) சென்ம இலக்கனத்தில் சனியும், ஏழாமிடத்தில் சூரியனும், நான்காமிடத்தில் செவ்வாயும் நின்றாலும், ஆறாம் இடத்திற்கு அதிபதி நின்ற அங்கிசத்தோன், பலவீனமடைந்த செவ்வாயுடன் சேர்ந்திருக்க, இவர்களைப் பாவக்கோள் பார்க்க, இச்சாதகன், தீயில் வீழ்ந்து உயிரிழப்பான்.

**நஞ்சுண்டதால் மரணம்**

விழுமிய இரண்டில் மாந்தி
கேதுவும் கூடப் பாவர்
விழுமிய பார்வை யற்றால்
விடந்தனை உண்டு சாவன்
எழுமிய எட்டிற் பாம்பு
இருந்திடத் தீக்கோள் நோக்கிற்
செழுமியல் விடத்தை உண்டே
தியங்கியே மரண மாவன். (169)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்தில் மாந்தியும் கேதுவும் நிற்க, இவர்களைப் பாவக்கோள்கள் பாராதிருக்க, இச்சாதகன் நஞ்சினை உண்டு மரணமடைவான். சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் இராகு அல்லது கேது இருந்திட, இதனைப் பாவக்கோள் நோக்க, இச்சாதகன் நஞ்சினை உண்டு உயிரிழப்பான்.

**இதுவுமது**

விருட்சிக மேடத் தானே
விளங்கும்லக் கனம தாகப்
பிரிந்தெழு பாவ ரெல்லாம்
பலத்திடில் விடத்தை உண்பன்

நெரிக்கும்மூன் றுடையோன் கேதைச்
சேரிலும் ஒன்று மூன்றுக்
குரித்தவர் சனியைக் கூடி
உறைந்திடில் விடத்தை யுண்பன். *(170)*

(இ-ள்.) சென்ம இலக்கனம் விருட்சிகம் அல்லது மேடமாக இருக்க, அவற்றில் பாவக்கோள்கள் பலம்பெற்று இருக்க, இச்சாதகன் நஞ்சினை உண்பான். சென்ம இலக்கனத்திற்கு மூன்றாம் இடத்திற்கு அதிபதி கேதுவுடன் ஒன்று கூடி இருந்தாலும், சென்ம இலக்கனாதிபதி, மூன்றாமிடத்திற்கு அதிபதி இவர்களோடு சனி ஒன்று கூடி இருந்தாலும், இந்தச் சாதகன் நஞ்சினை உண்பான்.

**இதுவுமது**

பகரிரண் டடித்தோன் அங்க
பதிசனி யுடனே கூடி
திகழ்விய ஆறெட் டெய்தச்
சிகிமாந்தி பார்க்கு மேனும்
நிகர்மூன்றிற் குளிகன் மூன்றோன்
நீளுமா றெட்டுற் றாலும்
மகர்நா லிடமாய்ப் பாவர்
மருவினும் விடத்தை உண்பான். *(171)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்திற்கு அதிபதியின் அங்கிசாதிபதி சனியுடன் கூடி, ஆறாமிடம், எட்டாமிடம் இவற்றில் ஒன்றில் இருந்தாலும், இவர்களைக் கேது, மாந்தி ஆகிய கோள்கள் பார்க்குமேனும், சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில் குளிகன் நிற்க, மூன்றா மிடத்திற்கு அதிபதி ஆறாமிடம், எட்டாமிடம் இவற்றில் ஒன்றில் இருக்க, பாவக்கோள் நான்காமிடத்தில் இருந்தாலும் இச்சாதகன் நஞ்சுண்பான்.

## இதுவுமது

புத்துரை சிகியை மூன்றோன்
        பொருந்தியே கூடி நீசஞ்
சத்துரு வர்க்க மேறித்
        தயங்கினும் சாமி தானே
மெத்தும்சிங் காங்கி சத்தில்
        மேவினும் விடத்தை உண்பன்
கொத்தலர் குழலி னாளே!
        கூறினர் கணித நூலோர். *(172)*

*(இ-ள்.)* கொத்தாக மலர்ந்த மலர்களைக் கூந்தலில் சூடியுள்ள பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு மூன்றாம் இடத்திற்கு அதிபதியுடன் கேது ஒன்று கூடி, நீசம், பகை பெற்று இருக்க, சென்ம இலக்கனாதிபதி சிங்காங்கிசத்தில் இருந்தாலும், இச்சாதகன் நஞ்சினை உண்பான்.

## இதுவுமது

சோதிபூ ராடங் கேட்டை
        சொல்லிய விசாகம் ஓணம்
தீதிலாச் சதயந் நீடுத்
        திரட்டாதி யிற்கே தெய்த
சோதிய சனியுத் திராடத்
        திரவியுடன் ஒன்று மூன்றேழ்
காதிய எட்டு மாகிற்
        கடுவிடம் உண்டு மாய்வன். *(173)*

*(இ-ள்.)* சுவாதி, பூராடம், கேட்டை, விசாகம், திருவோணம், சதயம், உத்திரட்டாதி ஆகிய நட்சத்திரக் கால்களில் ஒன்றில் கேது இருக்க, உத்திராட நட்சத்திரக் காலில் உள்ள சனியுடன் சூரியன் ஒன்று கூடி சென்ம இலக்கனம், மூன்றாமிடம், ஐந்தாமிடம், ஏழாமிடம், எட்டாமிடம் ஆகியவற்றுள் ஒன்றில் நிற்க, இச்சாதகன் நஞ்சினை உண்டு உயிரிழப்பான்.

### தீயினால், பிசாசு பீடையால் மரணம்

சிகியெட்டில் இருக்கு மேனும்
தேய்மதி சனியி னோடே
விகிதமாய் எட்டில் நின்றால்
வெம்மையாற் பீடை யுண்டாம்
அகிலமேல் ஆறும் ஆறுக்
கதிபனும் கேது வர்க்கம்
புகிலுறு பிசாசு பீடைப்
பொருந்தியே மரண மாவன். (174)

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் கேது இருந்தாலும், தேய்பிறைச் சந்திரன், சனியுடன் ஒன்றுகூடி எட்டாம் இடத்தில் நிற்க, தீயால் துன்பம் உண்டாகும். சென்ம இலக்கனத்திற்கு ஆறாம் இடமும், ஆறாம் இடத்திற்கு அதிபதியும் கேதுவர்க்கம் பெற்று இருந்தால், இச்சாதகன் பிசாசுகளால் துன்பமடைந்து மரணத்தைத் தழுவுவான்.

### பேயினால் மரணம்

குசனிலக் கனத்து ளாகக்
கொடியசத் துருவே காரி
வசமுறக் கூடிப் பத்தின்
மதனத்தில் இருக்கு மேனும்
நிசவிலக் கனநற் பானு
நீலன்சேய் இருக்கு மேனும்
அசலத்தைப் பொருந்த னத்தாய்!
அலகைவா தனையால் மாய்வன். (175)

*(இ-ள்.)* மலைகளை நிகர்ந்த தனங்களைக் கொண் டிருக்கக்கூடிய பெண்ணே! சென்ம இலக்கனத்தில் செவ்வாய் இருக்க, சனி பாவக்கோளுடன் அல்லது சென்ம இராசியில் இருந்தாலும், சென்ம இலக்கனத்தில் சூரியன், சனி, செவ்வாய் ஆகிய மூன்று கோள்களும் ஒன்று கூடி இருந்தாலும், இச்சாதகன் பேய் வருத்துவதால் மரணம் அடைவான்.

## பாம்பினால் மரணம்

தரணிய னுடனே பாம்பும்
சனிகூடி மூட மாக
அரணிப்பாய் எட்டோன் பார்க்கில்
அரவினால் மரணம் எய்தும்
முரணிலா ஒன்றெட் டுள்ளோர்
மூர்க்கமாய்ப் பாம்பைக் கூடில்
இரணிய நிறத்தி னாளே!
இறப்பனே சர்ப்பத் தாலே. *(176)*

*(இ-ள்.)* பொன் போன்று ஒளிரும் நிறத்தையுடைய பெண்ணே! சூரியனுடன் இராகு அல்லது கேது மற்றும் சனியும் சேர்ந்து மூடமாக இருக்க, இக்கோள்களைச் சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்திற்கு அதிபதி பார்க்க, இச்சாதகன் பாம்பு கடிப்பதால் மரணமடைவான். சென்ம இலக்கனாதிபதி, எட்டாமிடத்தில் இருக்கும் கோள்கள் ஆகியவை இராகு அல்லது கேதுவுடன் சேர்ந்து இருக்க, இச்சாதகன் பாம்பு கடிப்பதால் உயிரிழப்பான்.

குறிப்பு: தரணி - சூரியன் .

## இதுவுமது

ஓரையில் இராகு வேணும்
மொழிகேது பவன னேனும்
மேரையாய் நிற்கப் பாவர்
வெகுண்டுதான் பார்க்கு மேனும்
போரையே விளைக்கும் ஆறோன்
புகழுத யத்தோன் தான்பார்
தாரைமாய் இராகு கூடிற்
சர்ப்பபீ டையினால் மாய்வன். *(177)*

*(இ-ள்.)* சென்ம இராசியில் இராகு இருந்தாலும் அல்லது கேது நின்ற இராசியாதிபதி இருந்தாலும்

இவர்களைப் பாவக்கோள்கள் பார்த்தாலும், ஆறாமிடத்திற்கு அதிபதியை இலக்னாதிபதி ஆகியோர் ஒன்றுகூடி பார்த்தவர்களோடு புதன், இராகு ஆகிய இரண்டு கோள்களும் கூடினால், இச்சாதகன் பாம்பு கடிப்பதால் உயிரிழப்பான்.

## இதுவுமது

இயலாகும் ஆறில் எட்டில்
இராகுற மூன்று ளோனைச்
சயராகு பவனன் கூடிற்
சர்ப்பபீ டையினாற் கண்டம்
செயமேடத் தேளெட் டாகச்
சேய்சனி பாம்புங் கூடிற்
பயமாகும் விடத்தீட் டத்தாற்
பாரினில் இறப்பன் பின்னே. *(178)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் அல்லது எட்டாமிடத்தில் இராகு இருக்க, மூன்றாமிடத்திற்கு அதிபதியை இராகு நின்ற இராசியாதிபதி கூடில், பாம்பினால் இச்சாதகனுக்குக் கண்டம் ஏற்படும். மேட இராசி, விருட்சிக இராசி இவற்றில் ஒன்று சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடமாக, இதில் செவ்வாய், சனி, இராகு அல்லது கேது கூடி இருக்க, இச்சாதகன், பாம்பு தீண்டுவதால் இறந்து போவான்.

## இதுவுமது

விதிக்கும்லக் கனத்தில் இராகு
மேவிடச் சனியும் கேதும்
கொதிக்கும்அட் டமத்தோன் தன்னைக்
கூடியே வியத்தைச் சாரச்
சதிக்கும்ஆ றிடத்தோன் பார்க்கிற்
சர்ப்பபீ டையினால் மாய்வன்!
உதிக்கும்வெண் மதியைப் போலும்
துலங்கிய முகத்தி னாளே! *(179)*

*(இ-ள்.)* உதிக்கின்ற நிறைமதியைப் போன்று பொலிவுடன் விளங்கும் முகத்தையுடைய பெண்ணே ! சென்ம இலக்கனத்தில் இராகு இருக்க, சனியும், கேதுவும் எட்டாமிடத்திற்கு அதிபதியுடன் கூடி பன்னிரண்டாம் இடத்தில் இருக்க, இவர்களை ஆறாம் இடத்திற்கு அதிபதி பார்த்தால் பாம்பு கடித்ததால் மரணம் அடைவான்.

குறிப்பு: சனி, கேது, அட்டமத்தோன் கூடியிருந்த இடம் சொல்லப்படவில்லை யெனினும், இலக்கனத்தில் இராகு என்பதால், ஏழாமிடத்தில் கேது என்பது உணரப்பட்டு ஏழாமிடம் என்று உரையில் சொல்லப்பட்டுள்ளது.

## இதுவுமது

*ஆசுறு மாந்தி யங்கிச*
*ராசிக்கோள் அருக்கன் எட்டிற்*
*றேசில்பாம் பிருக்கச் சாமி*
*சிங்காங்சம் சேர்ந்திட் டாலும்*
*நீசமாய்ப் பலவீ னத்தான்*
*நின்றிட நற்கோள் எல்லாம்*
*பேசிய பாவ ரெல்லாம்*
*பலத்திடிற் சர்ப்ப கண்டம். (180)*

*(இ-ள்.)* மாந்தி அங்கிச இராசிக்கு அதிபதி சூரியனாக, எட்டாமிடத்தில் இருக்க, இலக்கனாதிபதி சிங்காங்கிசம் சேர்ந்திட்டாலும் அல்லது இலக்கனாதிபதி நீசம் அல்லது பலவீனம் பெற்று நிற்க, நற்கோள்கள், தீய கோள்கள் பலம் பெற்றிட்டாலும் இச்சாதகனுக்குப் பாம்பினால் கண்டம் ஏற்படும்.

## இதுவுமது

*படர்நாலில் இரவி செம்பொன்*
*பத்தினிற் காரி எட்டில்*
*அடருவாய் மதியும் நிற்கில்*
*ஆயுத மர்ணம் எய்தும்*

தடமுறு ஒன்று பத்திற்
சனியுற ஏழிற் பானு
இடமுறு நாலிற் செவ்வாய்
இருக்கிலா யுதத்தால் வீழ்வன். (181)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்தில் சூரியன், குரு ஆகிய இரு கோள்களும் பத்தாமிடத்தில் சனி, எட்டாமிடத்தில் சந்திரன் நிற்க, இச்சாதகனுக்குக் கருவியால் மரணம் ஏற்படும். சென்ம இலக்கனம் அல்லது பத்தாமிடத்தில் சனி நிற்க, ஏழாமிடத்தில் சூரியனும் நான்காமிடத்தில் செவ்வாயும் நிற்க, இச்சாதகன், கருவியால் உயிரிழப்பான்.

**கருவியினால் ஏற்பட்ட காயத்தால் மரணம்**

வருமிலக் கனத்தி லேதான்
மதிநிற்க எட்டில் வெய்யோன்
பெருமையாம் வியத்தில் வேந்தன்
பலஈன மாகி மேவ
விருமையாம் நாலிற் பாவர்
ஏதுவர்க் கூடு வாரேற்
கருவியின் விரணத் தாலே
கலங்கியே மரண மாவன். (182)

(இ-ள்.) சென்ம இலக்கனத்தில் சந்திரன் இருக்க, சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் சூரியன் இருக்க அல்லது சூரியன் பன்னிரண்டாமிடத்தில் பலவீனமாக இருக்க, நான்காமிடத்தில் பாவக்கோள் இருக்க, இச்சாதகன் கருவியால் உண்டாகும் காயத்தினால் மரணமாவான்.

**தீயினால், விடத்தினால் மரணம்**

பிணங்குகேந் திரத்தோன் சாமி
பலவீன மாக ஆறுக்
கிணங்கினோன் சேயைக் கூடி
இயற்கரு வியினாற் கண்டம்

வணங்கும்அட் டமத்தில் வெய்யோன்
மலிவுற விஷ நாழிக்கு
அணங்குகேள்! மதலை தோன்றிய
அக்கினி விடத்தாற் கண்டம். *(183)*

*(இ-ள்.)* பெண்ணே கேட்பாயாக! சென்ம இலக்கனத்திற்கு கேந்திராதிபதிகள், இலக்கனாதிபதி பலவீனமாக இருக்க, ஆறாம் இடத்திற்கு அதிபதி, செவ்வாயுடன் கூடி இருக்க, இச்சாதகனுக்குக் கருவியால் கண்டம் ஏற்படும். சென்ம இலக்கனத்திற்குஎட்டாமிடத்தில் சூரியன் இருக்க, விடக்கடிகையில் சாதகன் பிறக்க, தீயினால் அல்லது நஞ்சினால் கண்டம் ஏற்படும்.

**கள்வர்களால், கருவிகளால் மரணம்**

ஏழெட்டுக் குடையோர் மாந்தி
இராகுவைச் சனியைக் கூடி
ஆழுற்ற ஆறில் நிற்கில்
வன்திசை அபகா ரத்திற்
கோளுற்ற சோர ராலே
கூறுமா யுதத்தாற் கண்டம்
வாளொத்த கண்ணி னாளே!
மலரயன் வகுத்த வாறே. *(184)*

*(இ-ள்.)* வாளையொத்த கூரிய விழிகளையுடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்திற்கு அதிபதி, எட்டாமிடத்திற்கு அதிபதி, மாந்தி, இராகு, சனி ஆகியோர் ஒன்று கூடி ஆறாமிடத்தில் இருக்க, ஆறாமிடத் தோனின் திசை அல்லது புத்தி நடக்கும்பொழுது, கள்வர்களால் அல்லது கருவியால் இச்சாதகனுக்கு மரணம் நேரிடும் என்று தாமரை மலரில் எழுந்தருளியுள்ள பிரம்மன் வகுத்துள்ளான்.

## பிசாசினால், நஞ்சினால் மரணம்

அலகுசேய் இராகு காரி
அமருந்தேய் மதியும் கூடிப்
பலமிதுர்த் தானம் மேவிற்
பிசாசுபீ டையினாற் சாவன்
நலனில்சுன் னரவும் எட்டில்
நண்ணுறில் பிசாசி லாதில்
குலவிய விஷத்தி லாதல்
கொடியதுன் மரண மாவன். *(185)*

(இ-ள்.) செவ்வாய், இராகு, சனி, தேய்ந்த சந்திரனும் ஒன்றுகூடி துர்த்தானங்களாகிய மூன்று, ஆறு , எட்டு, பன்னிரண்டு ஆகிய இடங்களில் ஒன்றில் இருக்க, இச்சாதகன் பிசாசு, பீடையினால் மரணமடைவான். சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் சனியும் இராகு அல்லது கேதுவுடன் ஒன்றுகூடி இருந்தால் இச்சாதகன் பிசாசினால் அல்லது நஞ்சினால் துர்மரணமடைவான்.

## கருவியால் மரணம்

நாலுபத் தெட்டிற் றீக்கோள்
நற்கோளும் கூடி நிற்கிற்
கோலுந்தீக் கோள்கள் எல்லாம்
கொடிதாகப் பார்த்திட் டாலும்
மாலுறும் இலக்க னத்தோன்
மகரங்ச மாகப் பாவர்
மேலுறப் பார்க்கின் மாதே!
வெய்யவா யுதத்தால் மாய்வன். *(186)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடம், எட்டாமிடம் ஆகியவற்றுள் ஒன்றில் பாவக்கோள்களும் நற்கோள்களும் ஒன்றுகூடி இருந்தாலும், இவர்களை தீயக் கோள்கள் பார்த்தாலும் இலக்கனாதிபதி மகர அங்சமாக இருக்க, பாவக்கோள் இதனைப் பார்க்க, இச்சாதகன் கருவியினால் மரணமடைவான்.

**கை ஆயுதத்தால் மரணம்**

பாயுறு மதிசெவ் வாயும்
பாவத் தியத்தில் உச்ச
மாயிடி மேலனுஞ் சாமி
ஆனதே ளங்ச மாகச்
சாயுறு பாவர் பார்க்கிற்
றடக்கையா யுதத்தாற் சாவன்
வேயுறு தோளி னாளே!
வேதநூல் விதித்த வாறே! (187)

*(இ-ள்.)* மூங்கிலை ஒத்த தோள்களையுடைய பெண்ணே! சந்திரனும், செவ்வாயும் பாவக்கோள்களுக்கு இடையில் உச்சம்பெறினும், இலக்கனாதிபதி விருட்சிக அங்கிசமாக, இதனைப் பாவக்கோள் பார்க்க, இச்சாதகன் கை கருவியால் மரணமடைவான்.

**நீராலும் காய்ச்சலாலும் மரணம்**

வளைக்குமெட் டுடையோன் பாவ
வர்க்கமாய்க் குரூராங் கிசத்தின்
தழைத்திட வெள்ளி திங்கள்
தன்னுடன் கூடி யாறின்
முளைத்திடு சலத்தி னாலும்
முறைகுளிர்க் காய்ச்ச லாலும்
இளைத்திரு மரண மாவன்
இலங்குபங் கயப்பூந் தேனே. (188)

*(இ-ள்.)* பொலிவுடன் விளங்குகின்ற தாமரைப்பூவின் இனிய தேனைப் போன்ற இனிமையுடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்திற்கு உடையவன் பாவவர்க்கம் பெற்று குரூராங்கிசத்தில் ஏறி, சுக்கிரன், சந்திரன் ஆகியோருடன் கூடி இருக்க, இச்சாதகன் ஆற்றில் மூழ்கி அல்லது குளிர்க்காய்ச்சலால் மரணமடைவான்.

## கைகால் அறுபடுபவன்

உன்னிய லக்க னத்திற்
ஒண்சனி இருக்க எட்டிற்
பன்னிய இராகு கூடப்
பார்த்திட வெள்ளி கன்னி
தன்னிலே அதிக நீசஞ்
சாரத்தேய் மதியு மாகிற்
கன்னியே மாறு காலும்
கையுமே அறுப்புண் பானே. (189)

(இ-ள்.) கன்னியே! சென்ம இலக்கனத்திற் சனி இருக்க, எட்டாமிடத்தில் இராகு நிற்க அல்லது பார்க்க, சுக்கிரன், கன்னி இராசியில் அதிக நீசம் பெற்று இருக்க, தேய்பிறைச் சந்திரனுமாகப் பிறந்த சாதகன், மாறுகாலும் மாறுகையும் வெட்டுண்டு மரணமடைவான்.

## உடல் பிளப்பதால் மரணம்

மேடந்தே ளுதய மாக
வெய்யவன் செவ்வாய் இராகு
கூடவே இருக்கச் சேய்பொன்
கூடச்சேர்ந் திடவங் சத்தில்
வீடளி உவாகா லத்தில்
எழில்மகம் தோன்று மாகிற்
தேடவன் திசைபொ சிப்பாற்
றேகமே பிளப்புண் பானே. (190)

(இ-ள்.) மேடம் அல்லது விருச்சிகம் சென்ம இலக்கனமாக, அவ்விடத்தில் சூரியன், செவ்வாய், இராகு ஆகிய மூன்று கோள்களும் சேர்ந்து இருந்தாலும், இவர்களுடன் செவ்வாய், குரு சேர்ந்து அம்சத்தில் அமாவாசை அல்லது பௌர்ணமி காலத்தில் மக நட்சத்திரத்தில் கேது திசை அல்லது புத்தி நடக்கும் காலத்தில் சாதகன், உடல் பிளப்புண்டு மரணமாவான்.

## தலையறுப்புண்டு மரணம்

கடுஞ்சனி உதய மாக
கதிரவன் மதியி ராகு
வருந்தனில் உதயத் தாதல்
வன்றிவே றிடத்தி லாதல்
ஒடுங்கியே நிற்பா னாலும்
உயர்தலை அறுப்புண் பானாம்
விடுஞ்சுடர் நெடுவேற் கண்ணாய்!
விளம்பினர் கணிதத் தோரே. *(191)*

*(இ-ள்.)* ஒளிக்கதிர்களை வீசும் நீண்ட வேல்போன்ற கண்களையுடைய பெண்ணே ! சென்ம இலக்கனத்தில் சனி இருக்க, சூரியன், சந்திரன், இராகு ஆகிய மூன்று கோள்களும் ஒன்றுகூடி இலக்கனத்தில் அல்லது வேறு இடத்தில் நின்றாலும், இச்சாதகனின் தலையை வெட்டுவதால் மரணமடைவான்.

## அடிக்கடி காது அறுபடுபவன்

பணபர மாறுக் குள்ளோர்
பரிந்தொன்றாய் கூடி மேடம்
குணமுற விருட்சி கத்திற்
குலவியே நிற்பா ராகில்
மணவெகுண் டிரண்டு காதும்
அடிக்கடி அறுப்புண் பானாம்
பணபட வல்குல் மாதே!
பகர்ந்தனர் கணித நூலோர். *(192)*

*(இ-ள்.)* பாம்பின் படத்தினையொத்த பரந்த அல்குலை உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு இரண்டு, ஐந்து, எட்டு, பன்னிரண்டு ஆகிய இடத்திற்கு அதிபதிகள், ஆறாமிடத்திற்கு அதிபதி ஆகிய கோள்கள் அனைவரும் ஒன்று கூடி, மேடம் அல்லது விருச்சிக இராசியில் இருப்பார் களேயானால், இச்சாதகனுக்கு இருகாதுகளிலும் அடிக்கடி காயம் உண்டாகும் என்று சோதிட வல்லோர்கள் கூறியுள்ளார்கள்.

### காலில் ஊனமுடன் பிறப்பவன்

கும்பமே உதய மாகக்
கூறிய மீனந் தன்னில்
வெம்பிய புதநீ சத்தை
மேவிடப் பாம்பு கூடி
அம்புலி தனிற்கா லூன
மாகவே பிறப்பன் கண்ட
செம்பது மப்பூ வெள்ளச்
சிறந்திடு முகத்தி னாளே! (193)

(இ-ள்.) சூரியனைக் கண்ட சிவந்த செந்தாமரை மலரைப் போன்று அழகுபொலியும் முகத்தையுடைய பெண்ணே! சென்ம இலக்கனம் கும்பமாக, மீன இராசியில் புதன் நீசத்தை அடைந்து நிற்க, அத்துடன் இராகு அல்லது கேது ஒன்றுகூடி நிற்க, இச்சாதகன், காலூனமானவனாகப் பிறப்பான்.

### பிறர் தூற்ற வாழ்பவன்

ஒன்பதுக் குடையோன் மூன்றில்
உறைந்திடக் நேந்தி ரத்தோன்
இன்பமாம் பத்தின் மேவி
இரக்கமில் குருட னாகி
வன்புள சூது கள்ளம்
வஞ்சனை யுடையோ னாகித்
துன்பமாய் உலகி லுள்ளோர்
தூஷிக்க இருப்பின் மின்னே! (194)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாம் இடத்திற்கு அதிபதி மூன்றாமிடத்தில் நிற்க, இரண்டாமிடத்திற்கு அதிபதி பத்தாமிடத்தில் நிற்க, இச்சாதகன் இரக்கமில்லாதவன்; குருடன்; சூது, வஞ்சனை, கள்ளம் உடையவன்; இவ்வுலகத் தோர் இழிவாகக் கருதக் கூடிய நிலையில் வாழ்வான் என்பதை மின்னலையொத்த இடையையுடைய பெண்ணே! அறிவாயாக.

## மலை, கோபுரம், கம்பம் ஆகியவற்றில் வித்தைகள் செய்பவன்

*உந்திய வைந்தீ ராறுக்*
*குடையவர் ஒன்றாய்க் கூடச்*
*சந்திரன் இருந்த நாட்குத்*
*தானிரு பத்தி ரண்டாய்*
*வந்தநா ளுடையோன் கூடின்*
*மலையிற்கோ புரத்திற் கம்பம்*
*விந்தையாய் நாட்ய மாடும்*
*வித்தைக ளுடைய னாமே!* *(195)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்திற்கு அதிபதி, பன்னிரண்டாமிடத்திற்கு அதிபதி ஆகியவரும் ஒன்றுகூடி, சந்திரன் இருந்த நட்சத்திரத்திற்கு இருபத்தி இரண்டாம் நட்சத்திரத்திற்கு உடையோனுடன் கூடி இருக்க, இச்சாதகன் மலை, கோபுரம், கம்பம் போன்றவற்றில் நாட்டியமாடி வித்தைகளைக் காட்டுபவனாக விளங்குவான்.

## மரண திசை

*நீசன் றிசைமூன் றாலும்*
*நீலன் றிசைநா லாயிடினும்*
*பூசல் இராகு சேய்மூடம்*
*பூண்டோர் திசையைந் தாயிடினும்*
*தேசி லாறாந் திசைகுருவின்*
*றிசையே யேனும் சத்துருவோ*
*னாசிற் றிசையே மூாயிடினும்*
*அரிட்டம் தப்பா தனிமயிலே!* *(196)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில் நீசமடைந்துள்ள கோளின் திசையாக இருந்தாலும், நான்காமிடத்தில் உள்ள சனியின் திசையாக இருந்தாலும், இராகு, செவ்வாய் மூடமடைந்த திசையாக இருந்தாலும், ஆறாமிடத்தில் உள்ள குருவின் திசையாக இருந்தாலும்,

பகைகோள்களின் திசையாக இருப்பினும் மரணக்குறிகள் தோன்றும் என்பதை மயில்போன்ற சாயலையுடைய பெண்ணே! கேட்பாயாக.

## மரணதிசை, பிணி, துன்பம் ஏற்படும் காலம்

நெடிய இராசி அந்தத்தில்
நின்றோன் திசையில் பிணிகாட்டும்
படியின் முப்ப தாம்பாகைப்
பற்றி இசைந்தோன் றிசைமரணம்
துடியில் ஆறெட் டுடையோர்கள்
சுபரேற் றுன்பம் பிணியாவர்
கொடிய பாவ ரானாக்காற்
கூறீர் மரணம் கொம்பனையே ! (197)

(இ-ள்.) இராசியின் முடிவில் நின்றவனுடைய திசையில் நோய்கள் வரும். முப்பதாம் பாகையில் நின்றோனின் திசையில் மரணம் உண்டாகும். சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடம், எட்டாமிடம் இவற்றுக்கு அதிபதிகள் சுபர்களாக இருக்க, துன்பமும் நோய்களும் தோன்றும். இவர்கள் பாவர்களாக இருக்க, இச்சாதகனுக்கு மரணம் நேரிடும் என்பதைப் பூங்கொம்பினையொத்த அழகுடைய பெண்ணே ! கேட்பாயாக.

## கள்ளர், நஞ்சு, தீ, கருவி இவற்றால் மரணமுண்டாகும் காலம்

அட்டம லக்க னத்துக்
காதிபர் சனிபாம் போடே
விட்டிடக் கூடி யாறின்
மேவிட இவர்கள் தங்கள்
திட்டமாஞ் திசைபொசிப்பிற்
சித்திரம் அதனிற் சோரர்
கட்டிடும் விடத்தாற் தீயாற்
கருவியாற் மரண மாமே. (198)

*(இ-ள்.)* ஜென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்திற்கு அதிபதி சனியுடனும் கேது அல்லது இராகுவுடனும் கூட ஆறாமிடத்தில் அமர்ந்திருக்க, இவர்களுடைய திசை, புத்தி, அந்தரங்களில் இச்சாதகன், திருடர்கள், நஞ்சு, நெருப்பு, கருவி இவற்றில் ஒன்றால் மரணமடைவான்.

### நஞ்சு, பேய், தீ, பாம்பு இவற்றால் மரணமுண்டாகும் காலம்

ஐஞ்சொன்றுக் குடையோர் தானே
அருஞ்சனி பாம்பைக் கூடி
மிஞ்சிய எட்டில் மேவின்
மிகுமிவர் திசைபொ சிப்பில்
நஞ்சினாற் பேயாற் றீயால்
நாண்டுகொள் வதனாற் பாம்பாற்
றுஞ்சுவர் களபக் கொங்கை
தூய்மொழி யனைய தேனே. *(199)*

*(இ-ள்.)* சந்தனம் பூசப்பட்ட தனங்களையும் தூய்மை யான தமிழ்மொழியைப் போன்ற இனிய தன்மையினை யுடைய பெண்ணே ! ஜென்ம இலக்கனத்திற்கு ஐந்தா மிடத்திற்கு அதிபதி, இலக்கனாதிபதி இருவரும் சனியுடனும் இராகு அல்லது கேதுவுடனும் ஒன்றுகூடி எட்டாமிடத்தில் நிற்க, இவர்களுடைய திசை, புத்தி காலங்களில், இச்சாதகனுக்கு நஞ்சினாலும், பேயாலும், தீயாலும், தற்கொலை செய்து கொள்ளுவதாலும், பாம்பு தீண்டுவ தாலும், மரணம் நேரிடும்.

### பிள்ளை, தாய், தந்தை மரண காலம்

ஒன்பதோ டொன்று நாலுக்
குடைவர் ஆறு ளோனை
இன்பமாய்க் கூடி எட்டில்
இருந்திடில் அவர்தி சைக்குட்

பின்புறு சித்தி ரத்திற்
பிள்ளையும் பிதாவும் தாயும்
அன்புடன் மரணம் எய்தும்
வாட்டடங் கண்ணி னாளே. (200)

(இ-ள்.) வாளினை ஒத்துக் கூர்மையான பெரிய கண்களையுடைய பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாமிடத்திற்கு அதிபதி, இலக்கனாதிபதி, நான்காமிடத்திற்கு அதிபதி, ஆகிய மூவரும் ஒன்றுகூடி எட்டாமிடத்தில் இருக்க, எட்டாமிடத்தோனின் திசையில், அந்தரத்தில் சாதகனும், சாதகனின் தாயும் தந்தையும் மரணத்தைத் தழுவுவர்.

## தாய்க்குக் கண்டம் வரும் காலம்

நன்மாது ரேசன் நின்ற
நவாங்கிசம் தனிலி ருந்த
தன்மாலு நவாங்கி சத்திற்
சனிவரும் காலம் தன்னில்
மென்மாதுர் கண்ட மென்றே
விளம்பினர் கணித வல்லோர்
பொன்மாலும் மயிலும் வண்டும்
பூவையும் பொருங்கண் ணாளே ! (201)

(இ-ள்.) பொன் போன்ற நிறத்தினையும் மயில் போன்ற சாயலையும் கரிய வண்டினையும் பூக்களையும் தோற்கச் செய்யும் அழகான கண்களையுடைய பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்திற்கு அதிபதி நின்ற நவாங்கிசத்தில் இருந்த புதனின் நவாங்கிசத்தில் சனிவரும் காலத்தில் சாதகனின் தாய்க்குக் கண்டம் வரும் என்று சோதிட நூலில் வல்லவர்கள் கூறியுள்ளார்கள்.

## இதுவுமது

மதிசுங்கன் மாது ரேசன்
　　மலிநவாங்கி சாதி பத்தோர்
துதிபெறு கிரணங் கொண்டே
　　சொல்லுக மாதுர் கண்டம்
எதிருற இவரி ருந்த
　　இராசிக்குட் பலத்த இராசி
திருமெத் தனையங் சந்தான்
　　நாண்டது மாதுர் கண்டம்.　　(202)

(இ-ள்.) சந்திரன், சுக்கிரந், நான்காமிடத்திற்கு அதிபதி ஆகிய மூன்று கோள்களின் நவாங்கிசாதிபதிகளின் கிரணங் களைக் கொண்டு, சாதகனின் தாய்க்குக் கண்டம் நிகழ்வதைக் கூறவேண்டும்.

குறிப்பு: மூன்று, நான்காம் பாடலடிகளின் பொருள் விளங்கவில்லை.

## இதுவுமது

ஏழில்வெண் மதியி ருக்க
　　எட்டினுக் கிறைவன் பார்க்க
நீழில்கொள் பாம்பு கூடில்
　　நிலைபெறின் மாதுர்க் கண்டம்
காழிய தேய்ம திக்கே
　　தானிரு புறமும் தீக்கோள்
ஆழிய சுபரும் நிற்கில்
　　ஆனதோர் மாதுர் கண்டம்.　　(203)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் நிறைந்த சந்திரன் பார்க்க, அல்லது இராகு கேது இவற்றுள் ஒன்றுகூடி நிற்க, இச்சாதகனின் தாயாருக்குக் கண்டம் ஏற்படும். தேய்பிறைச் சந்திரனுக்கு இரு பக்கங்களிலும் தீய கோள்களும் சுபக்கோள்களும் நிற்க, இச்சாதகனின் தாயாருக்குக் கண்டம்.

## இதுவுமது

வெள்ளிவெண் மதியும் ஆறில்
விளங்கிய அட்ட மத்தோன்
தள்ளிய பாவி யோடே
தான்கூட வெகுண்டு பார்க்கத்
தெள்ளிய கால சந்தி
சென்மிக்க மாதுர் கண்டம்
ஒல்லிய குசன்சுன் கூட
வொண்பகல் உதிக்கில் ஈதே. (204)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் நிறைந்த சந்திரனும் சுக்கிரனும் ஒன்று கூடி இருக்க, எட்டாமிடத்திற்கு அதிபதி, பாவக்கோளோடு சேர்ந்து நிற்க, அல்லது பாவக்கோளைப் பார்க்க, விடியற்காலையில் சாதகனின் தாய்க்குக் கண்டம் நேரிடும். செவ்வாயும் சனியும் ஒன்றுகூடி இருக்க, சாதகன் பகலில் பிறக்க, தாய்க்கு விடியற்காலையில் மரணம் நேரிடும்.

குறிப்பு: காலசந்தி - வைகறை.

## இதுவுமது

பொருந்துசித் திரைபூ ராடம்
பூசத்தில் இரண்டாங் காலிற்
திருந்திய மதியும் தானே
சென்மத்துக் கேழாய் நிற்க
வருந்திய மாதுர் கண்டம்
மதியைச்சேய் சனியும் பார்க்க
அருஞ்சுபர் நோக்கா ராகில்
அன்னைக்கே கண்ட மாமே. (205)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் சித்திரை, பூராடம், பூசம் இவற்றின் இரண்டாம் கால்களில் சந்திரன் நிற்க, சாதகனின் தாய்க்குக் கண்டம் உண்டாகும்.

சந்திரனைச் செவ்வாயும், சனியும் பார்க்க, சுபக்கோள் பார்க்க வில்லையென்றால், இச்சாதகனின் தாய்க்குக் கண்டம் நேரிடும்.

## இதுவுமது

பலிப்புறும் ஒன்றே ழெட்டிற்
பாவரே இருப்பா ராகிற்
சலிப்பொடு மகவி ருக்கச்
சாற்றிய மாதுர் கண்டம்
கலிக்கும்வெண் மதிக்கைற் தொன்பான்
கரியவன் இருக்க வேதான்
மலிப்புறு நிசியில் ஒன்றின்
மாதுரு கண்ட மாமே! (206)

(இ-ள்.) இலக்கனம், ஏழாமிடம், எட்டாமிடம் இவற்றில் பாவக்கோள்கள் இருக்க......................இருக்க, இச்சாதகனின் தாய்க்குக் கண்டம் உண்டாகும். நிறைந்த சந்திரன் நின்ற சென்ம இராசிக்கு ஐந்தாமிடம் அல்லது ஒன்பதாமிடத்தில் சனி இருக்க, இச்சாதகனின் தாய்க்கு இரவில் கண்டம் ஏற்படும்.

குறிப்பு: 'சலிப்பொடு மகவி ருக்க' என்பதன் பொருள் விளங்கவில்லை.

## தாய், தந்தைக்குக் கண்டம்

முரணில்பூ ராடம் பூரம்
முற்றிய இரண்டாங் காலும்
பரணியா யிலியம் அத்தம்
பண்புறு மூன்றாங் காலில்
வரமிகு மகவே தோன்றின்
மாதுரு கண்ட மாகும்
தரமில்கெண் டாந்தரம் தோன்றிற்
தந்தைக்குத் தாய்க்கும் கண்டம். (207)

(இ-ள்.) பூராடம், பூரம் இவற்றின் இரண்டாம் காலில், பரணி, ஆயிலியம், அஸ்தம் இவற்றின் மூன்றாம் காலில் குழந்தை பிறக்க, தாய்க்குக் கண்டமாகும்: குழந்தை, கண்டாந்தத்தில் பிறக்க, தாய்க்கும் தந்தைக்கும் கண்டமாகும்.

குறிப்பு: கண்டாந்தம் - அசுபதி, மகம், மூலம் ஆகியவைகளின் முதற்காலும் ஆயில்யம், கேட்டை, இரேவதி ஆகியவைகளின் கடைக்காலுமாகும்.

## தாய்க்குக் கண்டம்

உத்திர மகத்தி னோடே
உறைக்கும்ரே வதிநாற் காலிற்
புத்திரர் பிறக்கில் ஈன்ற
பூங்கொடி மரண மாகும்
குத்திர மகமு தற்காற்
குழவியே பிறக்கி லீன்ற
பத்தினிக் கரிட்ட மாகும்
பையர வல்கு லாளே! (208)

(இ-ள்.) நச்சுப்பையையுடைய நல்ல பாம்பின் படத்தையொத்த அல்குலையுடைய பெண்ணே! உத்திரம் அல்லது மக நட்சத்திரத்தில் இரேவதி நட்சத்திரக் கால்களில் குழந்தைகள் பிறக்க, குழந்தையின் தாய் மரணமடைவாள். மக நட்சத்திரத்தின் முதல் பாதத்தில் குழந்தை பிறக்க, இவனை ஈன்ற தாய் மரணமடைவாள்.

## தாய்க்கும் குழந்தைக்கும் கண்டம்

அடருங்கெண் டாந்த தோஷம்
அசுவினி பதினா றாண்டாம்
சுடரத்த கேட்டை ஒன்றாம்
சொல்லிய மகமெட் டாண்டாம்
திடமிலி ஆயிலியம் ரெண்டாஞ்
சித்திரை மூலம் நான்காம்
வடிவுள சேய்க்க ரிட்டம்
மாதுரு கண்ட மாமே. (209)

*(இ-ள்.)* கெண்டாந்த தோஷம் அசுவனிக்குப் பதினாறு ஆண்டாகும். அத்தம், கேட்டை ஆகியவற்றுக்கு ஓராண்டாகும்; மகத்திற்கு எட்டு ஆண்டுகளாகும்; ஆயிலியத்திற்கு இரண்டாண்டுகளாகும்; சித்திரை, மூலம் ஆகியவற்றிற்கு நான்கு ஆண்டுகளாகும்; கெண்டாந்த தோஷம் உடைய சாதகங்களில் அந்தந்த நட்சத்திரங்களுக்கு உரிய ஆண்டுகளில் தாய்க்கும் குழந்தைக்கும் கண்டம் ஏற்படும்.

## மாதுர் கண்டம்

போற்றுமுத் திரம்பூ ராடம்
பூசம்ஆ யிலியம் சித்திரை
ஏற்றிடு முதற்கா லான
இராசிலக் கனமே யாகச்
சேர்த்திடு மிந்த நட்சத்
திரத்தினிற் குழவி தோன்றில்
ஆற்றிடு மாதுர் கண்ட
மாமென அறைவர் தானே! (210)

*(இ-ள்.)* உத்திரம், பூராடம், பூசம், ஆயிலியம், சித்திரை ஆகிய நட்சத்திரங்களின் முதற்கால்களில் இராசி அல்லது இலக்கனம் அமைய, இந்த நட்சத்திரங்களில் தோன்றிய குழந்தையின் தாய் மரணமடைவாள் என்று கூறுவார்கள்.

## தாயும் குழந்தையும் மரணம்

வெய்யவன் மதியும் பாம்பும்
மிகுத்தலக் கனத்தி லாக
செய்யவன் எட்டில் நிற்கில்
சிசுவுடன் மாதுர் சாவாம்
துய்யசா மிக்கோ ராறிற்
துய்யவெண் மதிக்கோ் ரேழிவ்
வையமென் சனிசேய் நிற்கின்
மகவுடன் தாயும் சாவாம். (211)

(இ-ள்.) சென்ம இலக்கனத்தில் சூரியன், சந்திரன், இராகு அல்லது கேது ஆகிய கோள்கள் ஒன்று கூடி இருக்க, எட்டாமிடத்தில் செவ்வாய் இருக்க, தாயும் குழந்தையும் ஒன்றாக மரணம் எய்துவர். சென்ம இலக்கனாதிபதிக்கு ஆறாமிடத்தில் நிறைந்த சந்திரனும், சந்திரனுக்கு ஏழா மிடத்தில் சனியும் செவ்வாயும் நிற்கப் பிறந்த குழந்தையும் தாயும் ஒன்றாக மரணம் அடைவர்.

## இதுவுமது

குனிபிறை தக்கோ ராறேழ்
கூறெட்டு பன்னி ரெண்டில்
நனிவுறு பாவர் நிற்க
நற்கோளே நோக்கா தேனும்
பனிமதிக் கேழெட் டொன்பான்
பாவரே இருக்க நற்கோள்
இனிதுடன் பாரா ராகில்
ஈன்றதாய் மகவும் சாவாம். *(212)*

(இ-ள்.) சந்திரன் நின்ற இராசிக்கு ஆறாமிடம், ஏழாமிடம், எட்டாமிடம், பன்னிரண்டாமிடம் ஆகிய இவ்விடங்களில் பாவக்கோள்கள் இருக்க, இவர்களைச் சுபக்கோள்கள் பார்க்கவில்லை என்றாலும், சந்திரனுக்கு ஏழாமிடம், எட்டாமிடம், ஒன்பதாமிடம் ஆகிய இடங்களில் பாவக்கோள்கள் இருக்க, இவர்களைச் சுபக்கோள்கள் பார்க்கவில்லை என்றாலும் குழந்தையும், குழந்தையை ஈன்ற தாயும் மரணமடைவார்கள்.

## சிறுவனும் தாயும் மரணம்

மங்கலன் நாலில் நிற்க
மதிரவி பனிரண்ட டாகிற்
பற்கமி லீன்ற தாயும்
பாலனும் மரண மாகும்

இங்ஙனங் கிரண வேளை
இலக்கனந் தன்னிற் றோன்றத்
திங்களும் பானு நிற்கில்
சிறுவனுந் தாயும் சாவர். (213)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நாலாமிடத்தில் செவ்வாய் நிற்க, பன்னிரண்டாமிடத்தில் சூரியனும் சந்திரனும் இருக்கப் பிறந்த சிறுவனும் தாயும் ஒன்றாக மரணம் அடைவார்கள். கிரகண வேளையில், சென்ம இலக்கனத்தில் சூரியனும் சந்திரனும் இருக்கப் பிறந்த சிறுவனும் தாயும் ஒன்றாக மரணம் அடைவார்கள்.

**இதுவுமது**

அரியசேய் அருக்கன் தானோர்
அங்கிசத் திருக்கு மேனும்
உரியலக் கனத்திற் றிங்கள்
ஊறவேழிற் சேய்நின் றாலும்
பரிவிலக் கனத்திரி கோணம்
பற்றியே சனிசேய் நிற்கத்
தெரிமதி ஏழிற் நிற்கிற்
சிறுவனைத் தாய்தெ கிப்பள். (214)

(இ-ள்.) செவ்வாயும் சூரியனும் ஒரே அங்கிசத்தில இருந்தாலும், சென்ம இலக்கனத்தில் சந்திரன் இருக்க, ஏழாமிடத்தில் செவ்வாய் நின்றாலும், சென்ம இலக்கனம், ஐந்தாமிடம், ஒன்பதாமிடம் இவற்றில் ஒன்றில் சனியும் சேயும் ஒன்றுகூடி நிற்க, அதற்கு ஏழாமிடத்தில் நிற்கப் பிறந்த சிறுவனின் மரணத்திற்கு அவன்தாய் காரணமாக இருப்பாள்.

**அமாவாசையில் பிறந்த பலன்**

பெருகமா வாசை தன்னிற்
பிறந்திடும் பிள்ளை தன்னை
இருமைசேர் உலகி லுள்ளோர்
யாவரும் சிறப்ப தல்லால்

மருவுமிம் மதியைத் தேட
மந்திரி மகிழ்ந்து பார்க்கில்
ஒருவருக்குந் தோஷ மில்லை
ஒளிரும்வேற் கண்ணி னாளே! (215)

(இ-ள்.) ஒளிபொருந்திய வேலை யொத்த கூரிய நோக்கினை உடைய கண்களையுடைய பெண்ணே! அமாவாசையில் பிறந்த பிள்ளையை இவ்வுலகில் உள்ள யாவரும் சிறப்பாகப் போற்றுவர். இந்தச் சந்திரனைக் குரு பார்க்க, ஒருவருக்கும் தோஷம் இல்லை.

## தாய் மரணம்

மதிசுங்கன் இரவி தானும்
வன்பாவ மத்திய மாகப்
பதிபெறு பொன்மாற் றானே
பண்புடன் பார்ப்பா ராகிற்
சதியுற வந்த கர்ப்பம்
தன்னிட மாத்ரு சாவள்
அதிரசம் ஒழுகும் தீஞ்சொல்
ஆடவர் கமுத மாதே! (216)

(இ-ள்.) மிகுதியான இனிமை பயக்கக் கூடிய மொழி யினைக் கொண்ட, ஆடவர்களுக்கெல்லாம் இனிய அமுதமாக விளங்கக் கூடிய பெண்ணே! சந்திரன், சுக்கிரன், சூரியன் ஆகிய மூவரும் பாவக்கோள்களுக்கு இடையே நிற்க, அவர்களை குருவும் புதனும் பார்க்க, இச்சாதகனின் தாய் கர்ப்பத்துடன் இருக்கும்பொழுது மரணமடைவாள்.

## இதுவுமது

பங்கனே நாலிற் நிற்கப்
பாவிகள் பார்க்க எட்டோன்
இங்ஙன நீச மூடம்
எய்திடின் மாதுர் நாசம்

*துங்கநா லொன்ப துள்ளோர்*
*சொற்கேந்ர திரிகோ ணத்து*
*மங்கலன் இருக்கின் மாதா*
*அனுமர ணத்த ளாமே !* (217)

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்தில் சனி இருக்க, இவனைப் பாவக்கோள் பார்க்க, எட்டாமிடத்திற்கு அதிபதி நீசமூடம் பெற்று இருக்க, இச்சாதகனுடைய தாய்க்கு மரணம் நேரிடும். சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்தில், ஒன்பதாமிடத்தில் உள்ள கோள்களுடன் செவ்வாய் சேர்ந்து இருக்க, இச்சாதகனின் தாய் அனு மரணம் உடையவள்.

குறிப்பு: பங்கு - சனி.

**இதுவுமது**

*ஆவதாம் ஒன்று நாலு*
*அவ்விடத் திறைவர்தாமும்*
*பாவகத் திரிகோ ணத்திற்*
*பதிந்திட நாலுக் குள்ளோன்*
*தாவுறு பலவீ னத்தால்*
*தனியுற மாதுர் தானே*
*பூவறு மரண மாவள்*
*பூரிக்கும் தனத்தி னாளே !* (218)

*(இ-ள்.)* பூரித்து விம்மி நிற்கும் தனங்களையுடைய பெண்ணே! இலக்கனாதிபதி, நான்காமிடத்திற்கு அதிபதி இருவரும் ஒன்று கூடி இலக்கனம், ஐந்தாமிடம், ஒன்பதாமிடம் இவற்றில் ஒன்றில் நிற்க அல்லது நான்காமிடத்திற்கு அதிபதி பலவீனம் பெற்று தனியாக இருக்க, இச்சாதகனின் தாய் மரணமடைவாள்.

### இதுவுமது

கலைமதி நாலில் நிற்கக்
கதிரவன் ஒன்பான் மேவத்
தலையுறப் பாவர் பார்க்கிற்
றாயுமோ மரண மாவள்
அளவிலா ஏழுக் குள்ளோன்
ஐந்தினில் இருப்பா னாகில்
உலைவிலா மாதுர் நாசம்
உற்றிடும் எனச்சொல் வாரே. (219)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்தில் சந்திரன் இருக்க, சூரியன் ஒன்பதாம் இடத்தில் இருக்க, இவனைப் பாவக்கோள் பார்க்க, இச்சாதகனுடைய தாய் மரணமாவாள். சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்திற்கு அதிபதி, ஐந்தாமிடத்தில் இருக்க, இச்சாதகனின் தாய் மரணமடைவாள் என்று சொல்வார்கள்.

### இதுவுமது

பெற்றபுத் திரத்தா னத்தோன்
பலமுற ஒன்று நாலுக்
குற்றவர் மதியைக் கூடி
ஒடுங்கிதுர்ப் பலமே யாகிற்
சொற்றரு மாதுர்க் கர்ப்பத்
துடனுடன் சோர்வ ளென்றே
கற்றறி வுடமை சான்ற
கணிதர்தாம் உரைத்த வாரே. (220)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்திற்கு அதிபதி பலமுற்று இருக்க, இலக்கனாதிபதி, நான்காமிடத்திற்கு அதிபதி, சந்திரன் ஆகிய மூன்று கோள்களும் துர்ப்பலம் பெற்று இருக்க, இச்சாதகனின் தாய், கர்ப்பமாக இருக்கும்பொழுது இறந்துபடுவாள் என்று சோதிட நூல்களைக் கற்றுணர்ந்த சோதிடர்கள் கூறியுள்ளார்கள்.

## இதுவுமது

ஒண்மதி அங்கி சத்தோன்
உரைராசி திரிகோ ணத்தில்
வெண்மதி வருங்கா லத்தின்
மிக்கதாய் மரண மாகும்
வண்மகிழ் பாக்கி யத்தின்
மதிரவி சேயி ருக்கிற்
தண்மையாம் மாதுர் நாசம்
தானென்பர் தடங்கண் மாதே! (221)

(இ-ள்.) அழகிய பெரிய கண்களையுடைய பெண்ணே! சந்திரனின் அங்கிசாதிபதி நின்ற இராசி அல்லது திரிகோணங்களில் நிறைந்த சந்திரன் வருங்காலத்தில், இச்சாதகனின் தாய் மரணமடைவாள். ஒன்பதாமிடத்தில் சூரியன், சந்திரன், செவ்வாய் இருக்க, இச்சாதகனின் தாய் மரணமடைவாள்.

## இதுவுமது

புதனெட்டில் இருக்கு மேனும்
பொலிவுறு பாக்கி யத்தில்
இதமுற்ற சுபரே நிற்க
எட்டினிற் பாவர் மேவிற்
சதமுற்ற தந்தை முன்னந்
தாய்மர ணந்தா னாவள்
மதமுற்ற வார ணத்தை
மற்பொருந் தனத்தி னாளே! (222)

(இ-ள்.) மதங்கொண்ட யானையுடன் போர் செய்யத் தக்கதான கொங்கைகளையுடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் புதன் இருந்தாலும், ஒன்பதாமிடத்தில் சுபர் இருக்க, எட்டாமிடத்தில் பாவக்கோள் இருந்தாலும், தந்தை இறப்பதற்கு முன்னர், தாய் மரணமடைவாள்.

## இதுவுமது

நெருங்குகேந் திரத்தில் நற்கோள்
நிலைபெறக் கூடு மேனும்
ஒருங்குள ஒன்றோ டேழுக்
குடையவர் கூடு மேனும்
மருங்கிலாக் கிரகம் மாற
வன்சுபர் பார்க்கு மேனும்
மருங்கயற் கண்ணாள் மாதுர்
அனுமர ணத்தா ளாமே. (223)

(இ-ள்.) சேல்மீன் போன்ற கண்களையுடைய பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்குக் கேந்திரத்தில் நற் கோள்கள் ஒன்றுகூடி இருந்தாலும், இலக்கனாதிபதி, ஏழா மிடத்திற்கதிபதி ஆகிய இரண்டு கோள்களும் ஒன்று கூடி இருந்தாலும் அல்லது இந்த இரண்டு கோள்களும் கிரகம் மாற, இவர்களைச் சுபர்கள் பார்க்க, இச்சாதகனின் தாய் அனுமரணம் அடைவாள்.

## இதுவுமது

மாலவன் தனக்கோர் ஐந்தில்
வன்பாவர் இருக்கு மேனும்
சாலவாம் ஐந்திற் பத்தில்
சனிசெவ்வாய் இருக்கு மேனும்
மேலுமொன் றாறே ழெட்டில்
ஈராறிற் பாவர் நிற்கின்
கோலுமா துலன்த னக்கே
கூறிடும் அரிட்டம் தானே. (224)

(இ-ள்.) புதனுக்கு ஐந்தாமிடத்தில் பாவக்கோள் இருந்தாலும், சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில் அல்லது பத்தாமிடத்தில் சனி, செவ்வாய் ஆகிய இரு கோள்கள் ஒன்று கூடி இருந்தாலும், இலக்கனம், ஆறாமிடம், ஏழாமிடம், எட்டாமிடம், பன்னிரண்டாமிடம் இவற்றில் பாவக்கோள்கள் நிற்க, இச்சாதகனின் மாமனுக்குக் கண்டம் ஏற்படும்.

## தந்தை மரணம்

*மருவுலக் கனத்திற் செவ்வாய்*
*மதியுற மானிற் சாலிற்*
*குருவுடன் பாவர் கூடிக்*
*கோணகேந் திரமுற் றாலும்*
*பொருபாவர் கேந்தி ரிக்கப்*
*புகழெட் டொன் பானோர் கூட*
*ஒருபாவர் பார்க்கிற் பிள்ளை*
*உதிக்குமுன் றந்தை சாவான்.* *(225)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற் செவ்வாயும் சந்திரனும் இருக்க, மகர இராசி, கும்ப இராசிகளில் குருவுடன் பாவக் கோள்கள் ஒன்று கூடி இருந்தாலும் அல்லது இலக்கனம், நான்காமிடம், ஐந்தாமிடம், ஏழாமிடம், ஒன்பதாமிடம், பத்தாமிடம் ஆகிய திரிகோண கேந்திரங்களில் நின்றாலும், பாவக்கோள்கள் கேந்திரங்களில் இருக்க, எட்டாமிடத்திற்கு அதிபதி, ஒன்பதாமிடத்திற்கு அதிபதி ஒன்று கூடி இருக்க, அவர்களை ஒரு பாவக்கோள் பார்க்க, இச்சாதகன் பிறப்பதற்கு முன்னால் இவனுடைய தந்தை மரணமாவான்.

## இதுவுமது

*வண்புதன் சனியும் ஐந்தின்*
*மருவுநா லொன்பான் றன்னிற்*
*றிண்புரை பாவர் கூடச்*
*சேய்பாக் கியத்தா னத்தோன்*
*பண்பிலாப் பாவ மத்யம்*
*பற்றிய குழவி தானே*
*தண்புவிக் குதய மாமுன்*
*றந்தையே மரண மாவன்.* *(226)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில் புதனும் சனியும் ஒன்றுகூடி இருக்க, நாலாமிடம், ஒன்பதா மிடம் ஆகியவற்றில் பாவக்கோள்கள் இருக்க, செவ்வாய்,

ஒன்பதாம் இடத்திற்கு அதிபதி இருவரும் பாவக்கோள் களுக்கு இடையே இருக்க, இச்சாதகன் பிறப்பதற்கு முன்னால், இவனுடைய தந்தை மரணமடைவாள்.

## அரசகோபத்தினால் தந்தை மரணம்

சுடரவன் நாலில் நிற்பத்
துய்யநா லுடையோன் றானே
படருமா றெட்ட ராறிற்
பண்புடன் இருக்கு மேனும்
அடர்கதிர் நீச னாகி
ஆறுடை யானைக் கூடித்
திடனெட்டில இருக்கின் மன்னர்
சினத்தினாற் பிதாவும் சாவான். (227)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்தில் சூரியன் இருக்க, நாலாமிடத்திற்கு அதிபதி எட்டாமிடம், ஆறாமிடம், பன்னிரண்டாமிடம் இவற்றில் ஒன்றில் இருந் தாலும், சூரியன் நீசனாகி, சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்திற்கு அதிபதியுடன் ஒன்றுகூடி எட்டாமிடத்தில் இருக்க, இச்சாதகனின் தந்தை அரசனின் கோபத்திற்கு ஆளாகி, அதனால் மரணமடைவான்.

## இதுவுமது

சூரன்பாம் பேழில் நிற்பத்
தொடர்ந்தெட்டோன் பார்க்கு மேனும்
வாரமாம் ஆறிற் பானு
மந்தனும் இருக்க எட்டோன்
கோரமாய் பாவ ரோடே
கூடியே பார்க்க வேதான்
ஈரமாங் கால சந்திப்
பிறந்திடிற் பிதாஅ ரிட்டம். (228)

(இ-ள்.) சூரியன், இராகு அல்லது கேது ஏழாமிடத்தில் இருக்க, இவர்களை எட்டாம் இடத்திற்கு அதிபதி பார்த்தாலும், சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் சூரியனும் சனியும் இருக்க, எட்டாமிடத்திற்கு அதிபதி பாவக்கோளுடன் கூடியிருக்க அல்லது பார்க்க, இச்சாதகனின் தந்தை காலசந்தி நேரத்தில் மரணமடைவான்.

## பிதிருக்கும் கர்மம் செய்பவன்

*பதிபெறு பிதாரா சிக்கு*
*பனிரெண்டாம் இடம தாக*
*அதிபதி இராசிக் கேழூன்*
*றாமிட மாக வந்தோன்*
*சதிருடன் தூர தேசந்*
*தன்னிலே இருந்து கொண்டே*
*பிதிருடைக் கன்மஞ் செய்வான்*
*பிறைநுதற் பேதை மாதே!* *(229)*

(இ-ள்.) மூன்றாம் பிறையையொத்த அழாகன நெற்றியையும் பேதமையையும் உடைய பெண்ணே! பிதாவினுடைய இராசிக்குப் பன்னிரண்டாம் இடத்தில் குரு இருக்க, அந்த இடத்திற்கு அதிபதி இராசிக்கு மூன்றாமிடத்தில் இருக்க, இச்சாதகன் தன்னுடைய தந்தைக்கு தூரதேசத்தில் இருந்துகொண்டு கர்மம் செய்வான்.

## இதுவுமது

*சாமிக்கே ஐந்திற் பத்திற்*
*சந்திரன் இருக்கு மேனும்*
*பூமிக்காம் இரவிக் கேழிற்*
*பூமகன் இருக்கு மேனும்*
*வாமிக்காம் பதினொன் றொன்பான்*
*மந்தன்சேய் பாம்பு கூடி*
*ஆமிக்கை யாம்பி தாவுக்*
*கரிட்டமென் றறையும் நூலே.* *(230)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனாதிபதிக்கு ஐந்தாமிடத்தில் அல்லது பத்தாமிடத்தில் சந்திரன் இருந்தாலும், சூரியனுக்கு ஏழாமிடத்தில் செவ்வாய் இருந்தாலும், சென்ம இலக்கனத்திற்கு ஒன்பது அல்லது பதினோராமிடத்தில் சனி, செவ்வாய் இராகு அல்லது கேது ஆகிய மூன்றுகோள்களும் ஒன்றுகூடி இருந்தாலும், இச்சாதகனின் தந்தைக்குக் கண்டம் நேரிடும்.

## இதுவுமது

இடமுறும் இலக்க னத்திற்
இரவிதான் இருக்கு மேனும்
அடவின்ஞெண் டுதிக்க மூன்றில்
ஆறினிற் பாவர் நிற்கத்
துடரும்ஈ ராறிற் நற்கோள்
தோன்றியே நிற்கு மேனும்
திடமுள பிதாவ ரிட்டம்
செப்பினர் தெளிவுள் ளோரே. *(231)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்தில் சூரியன் இருந்தாலும், கடகம், சென்ம இலக்கனமாக இருக்க, அதற்கு மூன்றாமிடம் மற்றும் ஆறாமிடத்தில் பாவக்கோள்கள் நிற்க, பன்னிரண்டாம் இடத்தில் நற்கோள்கள் நிற்க, இச்சாதகனின் தந்தைக்கு மரணம் நேரிடும்.

## இதுவுமது

செய்யபா னுவுக்கோ ரெட்டிற்
சேய்சனி இருக்க நற்கோள்
மெய்யுறப் பாரா ரேனும்
வெய்யவன் றன்னை சேய்மந்த
னையுறப் பார்க்க வல்லால்
அரிபாவ மத்தி யத்திற்
றொய்யுற விருப்பா னாகிற்
சொற்பிதா அரிட்டம் தானே. *(232)*

(இ-ள்.) சூரியன் இருக்கும் இராசிக்கு எட்டாமிடத்தில் செவ்வாய், சனி ஆகிய இரண்டு கோள்களும் இருக்க, இவர்களைச் சுபக்கோள்கள் பார்க்காமல் இருந்தாலும், சூரியனைச் செவ்வாயும் சனியும் பார்க்க அல்லது சந்திரன் பாவக்கோள்களுக்கு இடையில் இருக்க, இச்சாதகனின் தந்தைக்குக் கண்டம் நேரிடும்.

### கருவியால், நஞ்சால், நெருப்பால் தந்தை மரணம்

தபனன்தீ யோரைக் கூடிச்
சரராசி தனிலி ருக்கில்
நபமில்சத் திரவி டத்தால்
நெருப்பினால் பிதா அரிட்டம்
முபமிகு இரவியைச் செவ்வாய்
ஒண்சனி பார்க்கிற் பிள்ளை
இபமெனத் தோன்று முன்னே
எழிற்பிதா அரிட்ட மாமே. *(233)*

(இ-ள்.) சூரியன் பாவக்கோள்களோடு கூடி சரராசியில் இருக்க, இச்சாதகனின் தந்தை கருவி, நஞ்சு, நெருப்பு ஆகிய மூன்றில் ஒன்றால் தந்தைக்கு மரணம் நேரிடும். சூரியனைச் செவ்வாயும் சனியும் பார்க்க, குழந்தை பிறக்கு முன்னே தந்தைக்குக் கண்டம் உண்டாகும்.

### தந்தைக்குக் காலில் ரோகம்

பாவரா சியினில் இந்தும்
பானுவு முறிற்கோ ணத்திற்
காவுறு பாவர் நிற்கின்
காலினில் பிதுர்க்கு ரோகம்
தாவுறு ராகு தானே
தான்பலத் தைந்தொன் பானின்
மேவுறப் பார்ப்பா னாகில்
மிகுபிதா அரிட்ட மாமே. *(234)*

(இ-ள்.) பாவ இராசிகளில் சந்திரனும் சூரியனும் இருக்க, இவற்றுக்குத் திரிகோணங்களில் ஒன்றில் பாவக் கோள் இருக்க, இச்சாதகனின் தந்தைக்குக் காலில் நோய் உண்டாகும். சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில் அல்லது ஒன்பதாம் இடத்தில் இராகு இருந்தாலும் அல்லது இவ்விடங்களைப் பார்த்தாலும் இச்சாதகனின் தந்தைக்குக் கண்டம் நேரிடும்.

## இதுவுமது

நத்திய பிதாவின் சென்ம
இராசிக்கே ஆறெட் டாகச்
சத்துரு இராசி தன்னிற்
றநயனே பிறக்கு மேனும்
உத்தம பிதாவின் சென்மம்
உற்றநாள் பிறக்கு மேனும்
மைத்தடங் கண்ணி னாளே!
வளர்பிதா அரிட்டம் பெண்ணே! *(235)*

(இ-ள்.) மை பூசப்பட்ட பெரிய கண்களையுடைய பெண்ணே! தந்தையின் சென்ம இராசிக்கு ஆறாம் இராசி, எட்டாம் இராசி ஆகிய பகை இராசிகளில் மகன் பிறந்தாலும், தந்தையின் சென்ம நட்சத்திரத்தில் பிறந்தாலும் தந்தைக்குக் கண்டம்.

## தந்தைக்குக் கண்டம்

பூசஞ்சித் திரைபூ ராடம்
புகல்மூல மகமு தற்கால்
பாசமா யிலிய நாற்கால்
பரணிஐ விரல்மூன் றாக்கால்
பேசுமுத் திரமு தற்கால்
பெரும்இரே வதியும் நாற்கால்
வாசமாம் மதியும் நிற்க
மகவுற்றாற் பிதாஅ ரிட்டம். *(236)*

(இ-ள்.) பூசம், சித்திரை, பூராடம், மூலம், மகம் முதற்கால், ஆயிலியம் நான்காம் கால், பரணி, அத்தம் மூன்றாம் கால், உத்திரம் முதற்கால், இரேவதி நான்காம் கால் ஆகிய நட்சத்திரக் கால்களில் சந்திரன் இருக்க, குழந்தை பிறந்தால் தந்தைக்கு மரணக்குறி தோன்றும்.

## கெண்டாந்தக் காலம்

கெண்டாந்த தோஷம்அசு வினிக்கீரெட் டாகும்
கேட்டையத்தந் தனக்கொன்றா மகத்துக்கோ ரெட்டாம்
தண்டார்சித் திரைமூலம் நாலாண்ட தாகுஞ்
சாற்றரிய ஆயிலியம் வருடமிரண் டென்பார்
கண்டாருத் திரமாத மிரண்டாகும் பூசங்
கருதுதிங்கள் மூன்றாகும் பூராடம் தனக்கே
கொண்டாடு மாதமொன்பான் தன்னிலே பிதுர்க்குக்
கொடிதாகும் அரிட்டமெனக் கூறினர்கற்
றுணர்ந்தோர். *(237)*

(இ-ள்.) அசுவதிக்குப் பதினாறு; கேட்டை, அத்தம் ஒன்று; மகத்துக்கு எட்டு; சித்திரை, மூலம் நான்காண்டுகள்; ஆயிலியம் இரண்டு ஆண்டுகள்; உத்திரம் இரண்டு மாதங்கள் பூசம் மூன்று மாதங்கள்; பூராடம் ஒன்பது மாதங்கள் தந்தைக்குத் தீமை பயக்கும் காலங்களாகும். அந்தக் காலங்களில் தந்தைக்கு மரணக்குறி தோன்றும்.

## இதுவுமது

ஆனரே வதியின் நாற்கால்
அசுவனி தனிற்மு தற்கால்
மோனமாங் கேட்டை நாற்கால்
மூலத்தின் முதற்காற் றன்னில்
ஈனமாம் இராசிச் சந்தில்
ஏந்தலே தோன்று மேனும்
தானவே திரிகோ ணத்திற்
றந்தைக்கே யரிட்ட மாமே. *(238)*

(இ-ள்.) இரேவதி நட்சத்திரத்தின் நான்காம்கால்; அசுவதி நட்சத்திரத்தில் முதற்கால்; கேட்டை நட்சத்திரத்தின் நான்காம்கால்; மூல நட்சத்திரத்தின் முதற்கால் இராசி சந்தில் அல்லது திரிகோணமாக இருக்க, குழந்தை பிறக்க, தந்தைக்கு மரணக்குறி தோன்றும்.

### பாட்டன், தந்தை கண்டம்

அலரியைச் சனிசேய் பார்க்க
அல்லது கூடி நிற்க
விலகிய சுபர்பா ராரேல்
ஏந்தலின் பாட்டன் கண்டம்
பலவிடக் கடிகை யோடே
பானுவுஞ் சிங்கம் நிற்கிற்
குலவிய பிதுர்கண் டந்தான்
கூறினர் கணித நூலோர். (239)

(இ-ள்.) சூரியனைச் சனியும் செவ்வாயும் பார்க்க, அல்லது சூரியனோடு இவ்விரு கோள்களும் சேர்ந்திருக்க, சுபக்கோள் பார்க்கவில்லையென்றால், பிறந்த குழந்தையின் தாத்தாவிற்குக் கண்டம் ஏற்படும். விடக்கடிகையுடன் சூரியன் சிம்மத்தில் நிற்க குழந்தை பிறக்க, குழந்தையின் தந்தைக்கு மரணக்குறி தோன்றுமென்று சோதிடநூலில் வல்லவர்கள் கூறியுள்ளார்கள்.

### இதுவுமது

ஈராறிற் சனியும் பானும்
இருக்கத்தேய் மதியே மாகி
ஆராயுந் தந்தைக் கேதான்
அன்றைக்கே மரணம் எய்தும்
சீராருஞ் சுபரே பார்க்கிற்
செப்புமூன் றாண்டிற் கண்டம்
காராகுங் குழலாய் கேளாய் !
கணிதநூல் இயற்கை ஈதே ! (240)

*(இ-ள்.)* கருமைமிக்க கூந்தலையுடைய பெண்ணே! கேட்பாயாக. சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டாம் இடத்தில் சனியும் சூரியனும் இருக்க, ஏழாமிடத்தில் தேய்பிறைச் சந்திரன் இருக்க குழந்தை பிறந்தால், குழந்தை பிறந்த அன்றைக்கே தந்தைக்கு மரணம் நேரும். இத் தேய்பிறைச் சந்திரனைச் சுபர் பார்க்க, குழந்தை பிறந்தால், குழந்தை பிறந்த மூன்றாம் ஆண்டில் குழந்தையின் தந்தைக்குக் கண்டம் உண்டாகும் என்பது கணித நூலில் கூறப்பட்டுள்ள உண்மையாகும்.

## இதுவுமது

வாரமாஞ் சரத்திற் பானு
மருவச்சேய் பார்க்கிற் றந்தை
தூரதே சத்திற் செல்வன்
சொல்லிய சரத்தின் மந்தன்
நேரவே இரவி செவ்வாய்
நேர்பார்க்கில் நிசியில் தோன்றில்
நீரமாம் தந்தை தேசாந்
திரத்தினிற் றிரிவன் றானே! *(241)*

*(இ-ள்.)* சர இராசிகளில் சூரியன் இருக்க, அவனைச் செவ்வாய் பார்க்கப் பிறந்த குழந்தையின் தந்தை தூர தேசங்களுக்குச் செல்வான். சர இராசியில் சனி இருக்க, அவனை சூரியனும் செவ்வாயும் பார்க்க, இரவில் பிறந்த குழந்தையின் தந்தை தூர தேசங்களுக்குச் சென்று அங்கு அலைந்து திரிவான்.

குறிப்பு: சரஇராசிகள் - மேடம், கடகம், துலாம், மகரம்

## இதுவுமது

சரத்தினின் மதியை மாலோன்
தான்பார்க்கிற் நிசியிற் றோன்றிற்
திரத்துறு தந்தை தேசாந்
திரஞ்செல்வன் இரவி மாந்தி

யிரத்தினிற் கூடி மூன்றில்
இருக்கவைந் தொன்பான் உள்ளோர்
வரத்தொடு மறையத் தந்தை
மரணமே யாவன் மின்னே. (242)

(இ-ள்.) மின்னலை ஒத்த இடையையுடைய பெண்ணே! சர இராசிகளில் உள்ள சந்திரனைப் புதன் பார்க்க, இரவில் பிறந்த குழந்தையின் தந்தை நாடு நாடாகச் செல்வான். சூரியன், மாந்தி ஆகிய இருகோள்களும் ஒன்று கூடி சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில் இருக்க, ஐந்தாமிடம், ஒன்பதாமிடம் ஆகிய இடங்களுக்கு அதிபதிகள் மறைய பிறந்த குழந்தையின் தந்தை மரணமடைவான்.

**சிறிய தந்தை மரணம்**

மிக்கபாக் கியத்திற் கேது
மேவிட ஒன்ப துள்ளோன்
வக்கிர னுடனே கூட
வண்சுபர் பாரா ராகிற்
தக்கதோர் சிறிய தந்தை
சடுதியில் மரண மாவன்
மைக்கருங் கடலைச் சேலை
வடிவேலைப் பொருங்கண் ணாளே. (243)

(இ-ள்.) மையின் நிறத்தையொத்த கரிய கடலை, கயல்மீனை, வடிக்கப்பட்ட கூரிய வேலைத் தோற்கச் செய்யும் கரிய, அழகான, கூரிய பார்வையினையுடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாம் இடத்தில் கேது இருக்க, ஒன்பதாம் இடத்திற்கு அதிபதி செவ்வாயுடன் சேர, இவர்களைச் சுபக்கோள்கள் பார்க்காமல் இருக்க பிறந்த குழந்தையின் சிறிய தந்தை மரணமடைவான்.

## தந்தைக்கு இராசயோகம்

சூரியர்க் கைந்தோ டொன்பான்
சுபர்நிற்க ஐந்துக் குள்ளோர்
சீரிய கேந்திர கேணம்
சென்றுநிற் பிதாவுக் கேதான்
பாரினிற் றனமுஞ் செல்வம்
பண்புந்தீர்க் காயுள் உண்டாம்
தேரிசை பொன்மால் வெள்ளி
இனமேறில் இராச யோகம். (244)

(இ-ள்.) சூரியனுக்கு ஐந்தாமிடம் ஒன்பதாமிடம் ஆகியவற்றில் சுபக்கோள்கள் நிற்க, ஐந்தாமிடத்திற்கு அதிபதி கேந்திர கோணத்தில் இருக்க குழந்தை பிறக்க, அக் குழந்தையின் தந்தைக்கு மிகுநத பொருட்செல்வம் கிடைக்கும்; நீண்ட ஆயுள் உண்டாகும். குரு, புதன் ஆகிய இருவரும் சுக்கிரனின் வர்க்கம் பெற்று இருக்க, குழந்தை பிறந்தால், அக்குழந்தையின் தந்தைக்கு இராசயோகம் உண்டாகும்.

## பாட்டன் மரணம்

கனலியைச் சனிசேய் பார்க்கக்
கலந்திட சுபர்நோக் காரேல்
வனசிசு பிறக்கு முன்னே
மகிழ்தந்தைக் கரிட்ட மாகும்
வினவிய பிதாவைப் பெற்று
வீறுள பாட்டன் சாவன்
கனகபூ டணக்கை மானே!
பார்வையால் மயக்கும் தேனே! (245)

(இ-ள்.) பொன்னலான அணிகலனைப் பூண்ட கை களையுடைய, மானைப் போன்றவளே! ஆண்கள் அனை வரையும் தன் பார்வையால் மயக்கும் தேன்போன்ற இனிய மொழிகளைப் பேசும் பெண்ணே ! சூரியனைச் சனியும்

செவ்வாயும் பார்க்க, அல்லது சூரியனுடன் சனியும் செவ்வாயும் கூடி நிற்க, இவர்களைச் சுபக்கோள்கள் பார்க்க வில்லையென்றால், இக்குழந்தை தாயின் கருவில் இருக்கும் பொழுதே தந்தைக்கு மரணக்குறி தோன்றும். மேலும் தந்தையைப் பெற்ற தந்தையான பாட்டன் மரணமடைவான்.

## தந்தைக்குத் துக்கம்

*கடுத்திடு மைந்துக் குள்ளோன்*
*காரகன் சகலரும் நீச*
*பதித்தவங் கிசத்தில் ஏற*
*பகரைந்தில் சனிஇ ராகு*
*கொதித்தெழு குளிகன் பார்க்க*
*கூடவே இருக்கி லேனும்*
*துதித்திடுஞ் தந்தை யானோன்*
*துக்கத்தை அடைவன் தானே.* (246)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்திற்கு அதிபதி, காரகன் ஆகியோர் நீச அங்கிசத்தில் இருக்க, சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிட்த்தில் சனி, இராகு ஆகிய இரண்டு கோள்கள் நின்று, அவர்களை மாந்தி பார்க்க அல்லது அவர்களோடு கூடி இருக்க பிறந்த குழந்தையின் தந்தை துக்கத்தை அடைவான்.

## தந்தைக்கு உதவாதவன், சகோதர பீடை

*பந்தமாம் சரகேந் திரத்திற்*
*பானுவே இருக்கத் தோன்றும்*
*சந்ததி பிதாவுக் கோதான்*
*தானுத வாமற் போவன்*
*உந்திய மூன்றிற் காரி*
*உறச்சகோ தரர்க்குப் பீடை*
*பிந்திய பானு நிற்கிற்*
*பிற்சகோ தரவ ரிட்டம்.* (247)

(இ-ள்.) சர இராசியாக, இலக்கனத்திற்குக் கேந்திரமாக இருக்கும் வீட்டில் சூரியன் இருக்க, பிறந்த பிள்ளை, எந்தவகையிலும் தந்தைக்கு உதவாதவனாக இருப்பான். சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில் சனி இருக்க, சகோதரர்களுக்குத் துன்பம் நேரிடும்; சூரியன் இருக்க, இளைய சகோதரர்களுக்கு மரணக்குறி தோன்றும்.

### சகோதர மரண காலம்

ஏகிய மூன்றோன் மூன்றில்
இருந்தவன் பார்த்தோன் அங்ச
மாகிய இவர்கள் தன்னிற்
நற்பல வீன மானோன்
வாகினிற் றிசைபொசிப்பின்
மன்னுசித் திரத்தி லேதான்
போகியாஞ் சகோத ரங்கள்
பூமிசை இறந்து போமே. (248)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்திற்கு அதிபதி, மூன்றாமிடத்தில் நின்றவன், மூன்றாம் இடத்தைப் பார்த்தோர், அங்கிசாதிபர்கள் இவர்களில் பலவீனமான வனின் திசை, புத்தி, அந்தரம் ஆகிய காலங்களில் சாதகனின் உடன்பிறந்தோர் மரணம் அடைவார்கள்.

### இதுவுமது

போற்றிய மூன்று ளோனும்
பூமனும் கூடி எட்டிற்
றோற்றிடத் துணைவர் நாசஞ்
சொலுமிவர் தன்னைப் பாவர்
சாற்றிடக் கூடி நிற்றாற்
சகோதரர் உண்டாய் நாசம்
நூற்றருங் கதிரைப் பாவர்
நோக்கிடிற் சேட்டர் நாசம். (249)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்திற்கு அதிபதியும் செவ்வாயும் ஒன்றுகூடி எட்டாமிடத்தில் நிற்க, இச்சாதகனின் சகோதரர்கள் இறப்பர். இவர்களைப் பாவக் கோள்கள் கூடி இருக்க, இச்சாதகனின் சகோதரர்களுக்கு அழிவு நேரிடும். சூரியனால் பாவக்கோள்கள் பார்க்க, இச்சாதகனின் மூத்த சகோதரருக்கு அழிவு நேரிடும்.

## இதுவுமது

கடுத்திடும் சனிசேய் மூன்றிற்
கலந்திடப் பாவர் பார்க்கிற்
அடுத்திடும் துணைவ ரெல்லாம்
அரிட்டமென் றறைவர் மேலோர்
எடுத்தகா ரகன்மூன் றோரைக்
கிறைபல வீன மாகி
உடுத்தடு மாறி னாற்போல்
உற்பத்தி யாகி நாசம். *(250)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில் சனி, செவ்வாய் ஆகிய இருகோள்களும் ஒன்றுகூடி இருக்க, இவர்களைப் பாவக்கோள்கள் பார்க்க, இச்சாதகனின் உடன் பிறந்தோருக்குக் கண்டம் நேரிடும். காரகன், மூன்றா மிடத்திற்கு அதிபதி, இலக்கனாதிபதி ஆகிய மூவரும் பலவீனமாக இருக்க, இச்சாதகனுக்கு உடன்பிறந்தோர் தோன்றி மரணம் அடைவார்கள்.

## இதுவுமது

ஒன்றிய மூன்று நாலுக்
குடையவர் தன்னை செவ்வாய்
அன்றிமற் றோர்கள் கூடில்
அவர்நோக்கிற் றுணைவர் நாசம்
துன்றிய கேட்டை நாலிற்
றோகையே பிறக்கிற் சேட்டர்
மன்றின்மேல் நாச மாகும்
வடிவகல் அல்கு லாளே! *(251)*

(இ-ள்.) அழகிய மயிலின் தோகையினைப் போன்ற கூந்தலையும் அகன்ற வடிவினதான அல்குலையுடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடம், நான்காமிடம் ஆகிய இடங்களுக்கு அதிபதிகளை, செவ்வாயைத் தவிர மற்ற கோள்கள் ஒன்றுகூடி நிற்க, செவ்வாய் பார்க்க, இச்சாதகனின் உடன்பிறந்தவர்கள் மரணமடைவார்கள். கேட்டை நட்சத்திரத்தின் நான்காவது காலில் சாதகன் பிறக்க, இச்சாதகனின் மூத்த உடன்பிறந்தோர் மரணமடைவர்.

## இதுவுமது

கரவிலாப் பூசம் நாலிற்
கடகலக் கனம தாகப்
பரவிய பாவர் நிற்கப்
பகைவீட்டோன் இருக்கப் பாவர்
விரவுவை திருதி கண்டம்
விதிபாதம் வியாகா தத்து
முரவிட நாடித் திங்கண்
மூன்றெட்டிற் சேட்டர் நாசம். (252)

(இ-ள்.) பூச நட்சத்திரத்தின் நான்காம் காலில் கடக இலக்கனத்தில் பாவக்கோள் இருக்க, இதனுடன் பகை வீட்டிற்கு அதிபர் ஒன்று கூடி இருக்க, பாவக்கோள் வைதிருதி, கண்டம், விதிபாதம், வியாகதம் அமைந்த விஷ நாழிகைகளில் இருக்க பதினெட்டு மாதங்களுக்குள் இச்சாதகனின் உடன்பிறந்தோர் மரணமடைவர்.

## களத்திர தோஷம்

துள்ளிய ரெண்டோன் ஏழோன்
சுக்கிரன் இவர்கள் மூவர்
தள்ளிய பாவ வர்க்கத்
தானாய்த்தீ யோர்சேர்ந் தாரும்

விள்ளரும் பெண்ணிற் பானு
மீனத்திற் சனிநின் றாலுங்
கள்ளவிழ் கோதை மாதே!
களத்திர தோஷ மாமே! (253)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்திற்கு அதிபதி, ஏழாமிடத்திற்கு அதிபதி, சுக்கிரன் இவர்கள் மூவரும் பாவ வர்க்கத்தை அடைய, இவர்களோடு பாவக்கோள்கள் சேர்ந்திருந்தாலும், கன்னி இராசியில் சூரியன் நின்றாலும் மீன இராசியில் சனி இருந்தாலும், இச்சாதகனுக்குக் களத்திர தோஷம் இருக்கும்.

## இதுவுமது

சுக்கிரன் செவ்வாய் ஏழிற்
சொலுமைந்தோன் பதிலுற் றாலும்
மிக்கவொன் றேழொன் பானின்
மேவும்தேய் மதியும் பாவர்
ஒக்கவே கூடு மேனும்
ஒரேழும் அதற்குள் ளோனும்
அக்கணம் பாவ மத்தியம்
ஆயிடிற் றாரம் நாசம். (254)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் சுக்கிரன், செவ்வாய் ஆகிய இரண்டு கோள்களும் ஒன்றுகூடி நிற்க, ஐந்தாமிடத்திற்கு அதிபதி பத்தாமிடத்தில் இருந்தாலும் சென்ம இலக்கனத்தில் அல்லது அதற்கு ஏழாமிடத்தில் அல்லது ஒன்பதாமிடத்தில் தேய்பிறை சந்திரனும், பாவக் கோளும் ஒன்றுகூடி இருந்தாலும், சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடமும் ஏழாமிடத்திற்கு அதிபதியும் பாவக்கோள் களுக்கு இடையில் இருந்தாலும் இச்சாதகனின் மனைவி மரணமடைவாள்.

## இதுவுமது

வியத்தில்கேந்த திரத்திற் செவ்வாய்
மேவிட இரண்டே ழுள்ளோன்
இயற்பல வீன மேனும்
எழிற்மாந்தி யதனைச் செவ்வாய்
செயசனி பார்க்கு மேனுஞ்
சேய்மதி இரவி மைந்தன்
நயம்புதன் கூடி னாலும்
நவில்களைத் திரந்தான் நாசம். (255)

(இ-ள்.) சென்ம இலக்கனம், நான்காமிடம், ஏழாமிடம், பத்தாமிடம், பன்னிரண்டாமிடம். இவற்றி லொன்றில் செவ்வாய் இருக்க, இரண்டாமிடம், ஏழாமிடம் ஆகியவற்றுக்கதிபதிகள் பலவீனமாக இருந்தாலும், மாந்தியைச் செவ்வாய், சனி ஆகிய கோள்கள் பார்த்தாலும், செவ்வாய், சந்திரன், சனி ஆகியோரைப் புதன் கூடினாலும், இச்சாதனுக்கு களத்திர நாசம் உண்டாகும்.

## இதுவுமது

ஓரேழில் பன்னி ரண்டில்
ஒன்பதில் சனியி ருக்கக்
காரேரும் பாவர் பார்க்கக்
களத்திரம் விவாகம் ஈனம்
சீரேழில் அட்ட மத்தோன்
சிகிகூடிப் பாவர் பார்க்கிற்
பேரேழிற் களத்திர வீனம்
பிறர்மனைப் பொசிப்ப னாவன். (256)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில், பன்னிரண்டாமிடத்தில், ஒன்பதாமிடத்தில் சனி இருக்க, இச்சனியைப் பாவக்கோள் பார்க்க, இச்சாதகனின் திருமண வாழ்க்கை குறையுடையதாக இருக்கும். சென்ம இலக்கனத் திற்கு ஏழாமிடத்தில் எட்டாமிடத்திற்கு அதிபதியுடன் கேது ஒன்றுகூடி நிற்க, இச்சாதகனுடைய களத்திரத்திற்கு மரணம் நேரிடும். மேலும் இவன் பிறன்மனை நாட்டம் உடையவன்.

### இதுவுமது

தனத்தினில் ஏழில் இராகு
சனிநிற்க அதனுக் குள்ளோர்
கனத்துறு பாவ வர்க்கங்
கலந்திடிற் களத்திர வீனம்
வனத்துறு புதனி லாமல்
மற்றவர் கூடி நிற்கில்
இனத்துறு களத்திர ஈனம்
என்றனர் இனியே தேனே! (257)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்தில் அல்லது ஏழாமிடத்தில் இராகுவும் சனியும் இருக்க, அந்த இடத்திற்கு அதிபதிகள் பாவ வர்க்கம் பெற்று விளங்க, இச்சாதகனுடைய களத்திரத்திற்கு மரணம் நேரிடும். புதனைத்தவிர மற்றகோள்கள் ஓரிடத்தில் ஒன்றுகூடி விளங்க, இச்சாதகனுடைய களத்திரத்திற்கு மரணம் ஏற்படும்.

### இதுவுமது

வெள்ளியும் இரண்டே ழுள்ளோர்
மிகுபாவர் வர்க்க மாகி
ஒள்ளிய நீச மூடம்
எய்திப்பன் னிரண்டா றெட்டில்
வள்ளிதாய் இருக்கிற் கொண்ட
மனைவியர் அநேக மேனும்
ஒள்ளிதாய்க் கொள்ளக் கொள்ள
ஒழிவது திண்ண மாதே! (258)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடம், ஏழாமிடம் ஆகியவற்றிற்கு அதிபதிகள், சுக்கிரன் ஆகியோர் பாவ வர்க்கம் பெற்றிருக்க அல்லது நீச, மூடம் பெற்று இருந்து, சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடம், எட்டாமிடம், பன்னிரண்டாமிடம் இவற்றில் ஒன்றில் இருக்க, இச்சாதக னுக்குப் பல மனைவிகள் இருப்பார்கள் என்றாலும் புதிதாக மணமுடிக்க மணமுடிக்க அவர்கள் மரணமடைவார்கள்.

## இதுவுமது

இணங்கிய ஒன்றோ டேழுக்
கிறையவன் பலமி லாமல்
வணங்குமெட் டாறீ ராறீன்
மருவிடப் பாவர் பார்க்கில்
அணங்குகேள் களத்தி ரந்தான்
அனுமர ணந்தான் செய்வள்
குணங்குறி பலங்கண் டோதுங்
குருகடாட் சத்தி னாலே. *(259)*

(இ-ள்.) சென்ம இலக்கனாதிபதி, ஏழாமிடத்திற்கு அதிபதி ஆகிய இருவரும் பலமின்றி, எட்டாமிடம், ஆறாமிடம், பன்னிரண்டாமிடம் ஆகியவற்றில் ஒன்றில் இருக்க, இவர்களைப் பாவக்கோள் பார்க்க, இச்சாதகனின் மனைவி மரண மடைவான் சோதிடத்தில் குணம் குறி பலன்கள் கூறுவது குருவின் கடாட்சத்தினால் சிறப்புறும்.

## இதுவுமது

அடவுறும் ஒன்றா ரேழுக்
கதிபர்செவ் வாயைக்கூடித்
தடவுறு பாவ வர்க்கந்
தானுற்றே எட்டில் மேவத்
திடன்கொள்கேந் திரத்தோன் பார்க்கச்
செறிவுடன் கூடி னாலும்
மிடனுற்ற களத்தி ரந்தான்
இசைந்தனு மரண மாமே. *(260)*

(இ-ள்.) சென்ம இலக்கனம், ஆறாமிடம், ஏழாமிடம் ஆகிய இடங்களுக்கு அதிபதிகள் செவ்வாயுடன் ஒன்றுகூடி பாவவர்க்கமடைந்து, சென்ம இலக்கனத்திற்கு எட்டா மிடத்தில் இருக்க, கேந்திராதிபதி இவர்களைப் பார்க்க அல்லது இக்கோள்களுடன் ஒன்றுகூடி இருக்க, இச்சாதகனின் மனைவி மரணமடைவாள்.

## களத்திர மரண காலம்

குலவுமொன் றேழுக் குள்ளோர்
கோணகேந் திரந்தான் ஏற
நிலமகன் பார்க்க விண்ணோர்
நீடிசை அபகா ரத்தில்
அலகில்சித் திரத்தில் பாரி
அனுமர ணந்தான் செய்வள்
திலகநீண் முடிவிண் ணாட்டோர்
தேடிய அமிர்த மாதே! (261)

(இ-ள்.) அழகான நெற்றியில் திலகத்தை வைத்து, நீண்ட கூந்தலுடன் தேவர்கள் விரும்பிய அமிர்தத்தையொத்த இனிமையையுடைய பெண்ணே! சென்ம இலக்கனம், ஏழாமிடம் இவற்றிற்கு அதிபதிகள் இருவரும் கோண கேந்திரம் ஏறி இருக்க, இவர்களைச் செவ்வாய் பார்க்க,......... திசை, புத்தி, அந்தரத்தில் இச்சாதகனின் மனைவி மரணம் அடைவாள்.

குறிப்பு: விண்ணோர் என்பதன் பொருள் விளங்கவில்லை.

## இதுவுமது

அரியதோர் ஏழு தன்னில்
அதிபன்சுங் கனுமே நிற்கத்
தெரியுமட் டமத்தோன் சேயைச்
சேர்ந்துறக் கூடிப் பார்க்கிற்
பிரிவிலாக் களத்தி ரந்தான்
பின்னநு மரண மாவள்
விரியுள கணித நூலோர்
விதிப்படி உரைத்த வாறே. (262)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் அதன் அதிபதியும் சுக்கிரனும் இருக்க, எட்டாமிடத்திற்கு அதிபதி செவ்வாயோடு சேர்ந்து இருக்க அல்லது இவர்களைப் பார்க்க, இச்சாதகனின் மனைவி மரணமடைவாள் என்பதைச் சோதிட நூலில் வல்லவர்கள், அந்நூல்களில் கூறியுள்ள விதிப்படி எடுத்துக்கூறியுள்ளார்கள்.

**இதுவுமது**

எழுதிய ஒன்றி ரண்டுக்
கிறைவர்க்குஞ் சுங்க னுக்கும்
பழுதிலா ஐந்தா றெட்டில்
பனிரண்டிற் பாவர் நிற்கிற்
செழுமிவர் திசைபொ சிப்பிற்
கூறிய சித்தி ரத்தில்
விழுமிய களத்திர நாசம்
வேற்றடங் கண்ணி னாளே! *(263)*

*(இ-ள்.)* வேலையொத்த கூரிய நோக்கினையும் பெரிய கண்களையும் கொண்ட பெண்ணே! இலக்கனாதிபதி, இரண்டாமிடத்திற்கு அதிபதி, சுக்கிரன் இவர்களுக்கு ஐந்தாமிடம், ஆறாமிடம், எட்டாமிடம், பன்னிரண்டாம் இடத்தில் பாவக்கோள் நிற்க, அப்பாவக்கோளின் திசை, புத்தி, அந்தர காலத்தில் இச்சாதகனின் மனைவி மரணமடைவாள்.

**இதுவுமது**

அறைதரும் ஏழெட் டீரா
றதனிற்சே யுறரெண் டேழுக்
கிறைவரும் வெள்ளி யுந்தான்
நிகழ்பல வீன மேனும்
நிறையுமே ழெட்டிற் பாவர்
நிற்கப்பன் னிரண்டிற் செவ்வாய்
உறைவனேற் றார நாசம்
ஒளிபசுங் கமலத் தேனே! *(264)*

*(இ-ள்.)* புதிதாக மலர்ந்த தாமரை மலரில் துளிர்க்கும் தேன் போன்ற இனிமையையுடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடம், எட்டாமிடம், பன்னிரண்டா மிடம் ஆகிய இடங்களிலொன்றில் செவ்வாய் இருக்க,

இரண்டாமிடம், ஏழாமிடம் ஆகியவற்றிற்கு அதிபதிகளும் சுக்கிரனும் பலவீனமாக இருக்க, ஏழாமிடத்தில், எட்டாமிடத்தில் பாவர் நிற்க, பன்னிரண்டாமிடத்தில் செவ்வாய் இருக்க, இச்சாதகனின் மனைவி மரணமடைவாள்.

## கர்ப்பிணியான மனைவிக்குக் கண்டம்

பன்னிரண்டிற் பாவர் மல்க
பகர்மூன்றிற் சுபரி ருக்க
மனியலக் கனத்திற் காரி
மருவப்பொன் பாரா தேனும்
கனியுமொன் றேழிற் செவ்வாய்
கலக்கநற் கோணோக் கின்றி
இனியபொன் பலமே தாழில்
இருங்கர்ப்பத் துடனே கண்டம். (265)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டாமிடத்தில் பாவக்கோள்கள் இருக்க. மூன்றாமிடத்தில் சுபக்கோள்கள் இருக்க, இலக்கனத்தில் சனி நின்று, இவனைக் குரு பார்க்காமல் இருந்தாலும், இலக்கனம், ஏழாமிடம் இவற்றில் ஒன்றில் செவ்வாய் நிற்க, சுபக்கோள்களின் பார்வை அதற்கு இல்லாமல் இருந்து, குரு பலவீனமாக இருக்க, இச்சாதகனின் மனைவிக்குத் தாய்மையடைந்திருக்கும் காலத்தில் கண்டம் ஏற்படும்.

## இதுவுமது

குருமதி ஏழில் நிற்கக்
கொழுங்கதிர் பனிரெண் டெய்த
வருமிரண் டேழுக் குள்ளோர்
வன்கேது வுடனே கூட
வருளுங்கேந் திரத்தோன் பார்க்க
ஐந்துளோன் பலமே தாழில்
ஒருமைசேர் பாரி கர்ப்பத்
துடன்மரணந்தா னாவாள். (266)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் குரு, சந்திரன் ஆகிய இருகோள்களும் நிற்க, சூரியன் பன்னிரண்டா மிடத்தில் இருக்க, இரண்டாமிடம், ஏழாமிடத்திற்கு அதிபதிகள், கேதுவுடன் ஒன்றுகூடி இருக்க, இவர்களைக் கேந்திராதிபதி பார்க்க, ஐந்தாமிடத்திற்கு அதிபதி பலவீனமாக இருக்க, இச்சாதகனின் மனைவிக்குத் தாய்மை யடைந்திருக்கும் காலத்தில் கண்டம் நேரிடும்.

### மனைவி, கர்ப்பிணியாக மரணம்

மந்திரி வெள்ளி பாவ
மத்தியத் திரண்டே ழைந்தில்
உந்திடப் பாவ வர்க்கம்
உற்றிடக் களத்தி ரந்தான்
வந்திடும் கர்ப்பத் தோடே
வாதையாய் மரண மாவள்
சந்திரத் திலதம் போன்ற
தாமரை முகத்தி னாளே! (267)

(இ-ள். சந்திரத் திலகத்தை போன்று பொலிவுடனும் தாமரை மலரையொத்த அழகுடனும் விளங்கும் முகத்தை யுடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடம் ஏழாமிடம், ஐந்தாமிடம் இவற்றிலொன்றில் குருவும், சுக்கிரனும் ஒன்றுகூடி இருந்து பாவக்கோள்களுக்கு இடையே பாவவர்க்கம் பெற்றிருக்க, இச்சாதகனின் மனைவி, தாய்மை அடைந்திருக்கும் காலத்தில் உடல் துன்பத்தால் மரணமடைவாள்.

### இதுவுமது

நீழிய சனிசேய் எட்டில்
நிற்கவே அசுரர் மந்திரிக்
கேழினிற் பாவர் நிற்க
இரண்டைந்தே ழிறைவர் பாவர்

ஆழிய வர்க்க நீச
அஸ்தமன மாகிப் பொன்னே
வாழிய பலம்போய் நிற்கின்
மனைவிகர்ப் பத்தாற் சாவள். (268)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்திற் சனியும் செவ்வாயும் நிற்க, சுக்கிரனுக்கு ஏழாமிடத்தில் பாவக்கோள் நிற்க, இரண்டாமிடம், ஏழாமிடம் இவற்றிற்கு அதிபதிகள் பாவவர்க்கம், நீசம், அஸ்தமனமாகி, குரு பலமற்றவனாக இருந்தால், இச்சாதகனின் மனைவி, கர்ப்பத்தின் காரணமாக மரணமடைவாள்.

## மனைவி, குழந்தை மரணம்

சிகண்டிதன் பனிரண் டாகச்
செய்யவன் ஏழின் மன்னன்
புகன்றெழு காரி யைந்திற்
புகப்பாவர் கூடப் பார்க்க
வகம்பெறு நற்கோ ளானோர்
அன்புடன் பார்க்கின் மாதே!
இகம்பெறு குழவி தாரம்
இரண்டுக்கும் அரிட்ட மாமே. (269)

(இ-ள்.) பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டாமிடத்தில் குரு இருக்க, செவ்வாயும் ஏழாமிடத்திற்கு அதிபதி, சனி ஆகிய மூன்று கோள்களும் ஐந்தாமிடத்தில் ஒன்றுகூடி நிற்க, இவர்களோடு பாவக்கோள் ஒன்றுகூட அல்லது இவர்களைப் பாவக்கோள் பார்க்க, நற்கோள்களும் இவர்களைப் பார்க்க, இச்சாதகனின் மனைவிக்கும் குழந்தைக்கும் ஒரே நேரத்தில் கண்டம் ஏற்படும்.

## புத்திரர் மரணம்

உத்தியாம் ஐந்தும் ஐந்துக்
குடையோனும் குருவும் பாவ
மத்திய மாகப் பாவர்
மருவுறக் கூடி நிற்க
பத்திய சனியும் மாலும்
பண்புறப் பார்ப்பா ராகில்
புத்திர நாசம் என்றே
புகன்றனர் புலவர் தானே. (270)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடம், ஐந்தாமிடத்திற்கு அதிபதி, குரு ஆகியோர் பாவக்கோள் களுக்கு இடையே இருக்க, இவர்களோடு பாவக்கோள் கூடி இருக்க, இவர்களைச் சனியும் புதனும் பார்க்க, இச்சாதகனுடைய புதல்வர்கள் மரணம் அடைவார்கள் என்று சோதிட நூல் வல்ல புலவர்கள் கூறியுள்ளார்கள்.

## புத்திர தோஷம்

நவில்பனி ரண்டோன் நின்ற
நவாங்கிஷா திபனி ருந்த
குவிதிரே காணே சன்தான்
கூறுமஞ் சோனைக் கூட
புவியுறப் பார்ப்பா ராகிற்
புத்திர தோஷம் உண்டாம்
கவிஞர்சொற் கடங்கா தோங்கிக்
கனத்தெழும் தனத்தி னாளே! (271)

(இ-ள்.) கவிஞருடைய சொற்களுக்கெல்லாம் அடங்காது உயர்ந்து நிற்கும் கனத்த கொங்கைகளையுடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டாம் இடத்திற்கு அதிபதி நின்ற நவாங்கிசத்திற்கு அதிபதி இருந்த திரேகாணத்திற்கு அதிபதி, ஐந்தாமிடத்திற்கு அதிபதியுடன் ஒன்றுகூடி நிற்க அல்லது அவனைப் பார்ப்பாராகில், இச்சாதகனுக்கு புத்திர தோசம் உண்டாகும்.

## இதுவுமது

எழின்மதி இலக்க னத்துக்
        கேழில்சுக் கிரனும் நிற்க
பழிபடு பாவர் நிற்கப்
        பகர்மூர்த்தி யோனும் மாலும்
வழிபட நோக்கப் பின்னே
        வன்சனி செவ்வாய் கூட
தழியநா லிடத்திற் பாவர்
        தானிற்கில் நாச மாமே. (272)

(இ-ள்.) சென்ம இராசி, சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் நின்ற சுக்கிரனுடன் பாவக்கோள்கள் சேர்ந்து நிற்க, இலக்கனாதிபதியும் புதனும் பார்க்க, இவர்களோடு சனியும் செவ்வாயும் சேர்ந்து இருந்தாலும்,நாலாமிடத்தில் பாவக்கோள்கள் நின்றாலும் இச்சாதகனின் குலம் அழிந்து போகும்.

## இதுவுமது

ஈண்டிய உதயம் ஐந்தோன்
        எட்டுபன் னிரண்டிற் பாவர்
பூண்டிட வியத்தா னத்தோர்
        பொன்வர்க்க மிலாதி ருக்க
வேண்டிய இத்தா னங்கண்
        மிகுபாவ வர்க்க மாகி
ஆண்டகை வங்ச நாச
        மாமென்பர் கணித நூலோர். (273)

(இ-ள்.) இலக்கனம், ஐந்தாமிடம், எட்டாமிடம், பன்னிரண்டாமிடம் ஆகியவற்றில் பாவக்கோள்கள் இருக்க, பன்னிரண்டாமிடத்திற்கு அதிபதி, குரு வர்க்கம் பெறாமல் இருக்க, மேலும் இத்தானங்கள் பாவ வர்க்கம் பெற்று விளங்க, இச்சாதகனின் குலம் அழிந்து போகும் என்று சோதிடநூல் வல்லவர்கள் கூறியுள்ளார்கள்.

## இதுவுமது

*ஆக்கிய சாமன் வெள்ளி*
*அங்கிசம் இரண்டும் ஏழிற்*
*றாக்கிட நாலிற் பாவர்*
*தரிக்கப்பொன் துர்த்தா னத்திற்*
*தேக்கிட மதிக்கோர் எட்டிற்*
*திக்கோளே சேரு மாகிற்*
*போக்கிடும் அங்கி சத்தைப்*
*பூரிக்கும் தனத்தி னாளே!* (274)

(இ-ள்.) பூரித்து விம்மி விளங்கும் கொங்கைகளை யுடைய பெண்ணே! புதன், சுக்கிரன் அங்கிசங்கள் இரண்டும் ஏழாமிடத்தைத் தாக்க, நான்காமிடத்தில் பாவக்கோள் இருக்க, தீய வீடுகளான ஆறாமிடம், எட்டாமிடம், பன்னிரண்டா மிடம் ஆகியவற்றில் ஒன்றில் குரு இருக்க, சந்திரனுக்கு எட்டாமிடத்தில் பாவக்கோள் இருக்க, இச்சாதகனின் குலம் அழிந்து போகும்.

குறிப்பு: 'தாக்க' என்பதன் பொருள் விளங்கவில்லை.

## இதுவுமது

*ஓங்குத யத்திற் பாவர்*
*உறைந்திட மதிநா லாகத்*
*தேங்கிய இலக்க னேசன்*
*சிறந்தைந்தில் இருக்க ஐந்தோன்*
*தாங்கிய நீச மூடந்*
*தனிற்பல வீன மாகிற்*
*பாங்கிலவங் கிசநா சந்தான்*
*பலிக்கும்பொற் பாவை யன்னாய்!* (275)

(இ-ள்.) பொன்னாலாகிய சிலையையொத்த பெண்ணே! சென்ம இலக்கனத்தில் பாவக்கோள் இருக்க, நாலாமிடத்தில் சந்திரன் இருக்க, இலக்கனாதிபதி ஐந்தா மிடத்தில் நிற்க, ஐந்தாமிடத்திற்கு அதிபதி நீச, மூடம் பெற்று பலவீனமாகி இருக்க, இச்சாதகனின் குலம் அழிந்து போகும்.

## புத்திரர் அழிவு

அறத்தனே உதயம் மேவ
ஐந்தினிற் கதிரோன் நிற்பத்
திறச்சனி எட்டிற் நிற்பச்
செம்பொன்னே பாரா தேனும்
இறத்தினிற் கடகம் கும்பம்
இலக்கன மாக நற்கோள்
உறத்தொரு பாரா ராகில்
உரைத்திடும் புத்திர நாசம். (276)

(இ-ள்.) சென்ம இலக்கனத்தில் செவ்வாய் இருக்க, ஐந்தாமிடத்தில் சூரியன் நிற்க, எட்டாமிடத்தில் சனி இருக்க, குரு பார்க்காமல் இருந்தாலும், சென்ம இலக்கனம் கடகம் அல்லது கும்பமாக அதனை நற்கோள்கள் பார்க்காமல் இருந்தாலும், இச்சாதகனின் புத்திரர்களுக்கு அழிவு நேரிடும்.

## களத்திர அழிவும் புத்திரர் அழிவும்

அலகிலா ஐந்தே ழொன்பான்
அதிபரே துர்த்தா னத்திற்
பலமுடன் கூடி நிற்கப்
பெருசுபர் பாரா ராகில்
இலகிய களத்தி ரந்தான்
எத்தனை யிருக்கு மேனும்
குலவிய புத்ர நாசம்
கூறுவர் கோதை மாதே! (277)

(இ-ள்.) மாலையைச் சூடிய பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடம், ஏழாமிடம், ஒன்பதாமிடம் ஆகிய மூவிடங்களுக்கும் அதிபர்கள், ஆறாமிடம், எட்டாமிடம், பன்னிரண்டாமிடம் ஆகிய தீய இடங்களில் பலம் பெற்று நிற்க, இவர்களைச் சுபக்கோள்கள் பார்க்கவில்லையென்றால், இச்சாதகனுக்கு எத்தனை மனைவியர் இருந்தாலும், எத்தனை பிள்ளைகள் இருந்தாலும் அவர்கள் அனைவரும் மரணமடைவார்கள்.

### தாயும் மகனும் மரணம்

பாவரே ஆறில் எட்டில்
பதிந்திட ஏழிற் பானு
மேவலக் கனத்திற் செவ்வாய்
விளங்கிடச் சுபர்பா ராரேற்
காவன கர்ப்பந் தன்னைக்
கருவியா டலினாற் றானே
மாவுள மாது ரோடே
மைந்தனும் மரண மாமே. *(278)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடம் அல்லது எட்டாமிடத்தில் பாவக்கோள் இருக்க, ஏழாமிடத்தில் சூரியன் நிற்க, இலக்கனத்தில் செவ்வாய் இருக்க, இவர்களைச் சுபக்கோள்கள் பார்க்கவில்லையென்றால், குழந்தைப் பேற்றின் பொழுது, மருத்துவக் கருவிகளைப் பயன்படுத்தும்பொழுது தாயும் குழந்தையும் மரணமடைவார்கள்.

### இதுவுமது

தனமுறு நாலீ ராறிற்
சனியுறப் பாவர் கூட
வினமுறு சுபர்நோக் காரேல்
இனியதோர் கர்ப்பம் தன்னை
மனந்தளர் கருவி யாட்டான்
மாதருஞ் சிசுவும் சாவாம்
கனந்தருங் கணித நன்னூற்
கவிஞர்கள் உரைத்த தாமே. *(279)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடம் அல்லது பன்னிரண்டாமிடத்தில் சனி இருக்க, இதனுடன் பாவக்கோள் கூட, இதனைச் சுபக்கோள் பார்க்கவில்லையானால், குழந்தைப்பேற்றின் பொழுது, மருத்துவக் கருவிகளைப் பயன்படுத்துவதால், தாயும், குழந்தையும் மரணமடைவார்கள்.

## தாய் மரணம்

பண்ணுறும் எட்டி லாகிற்
பனிரண்டிற் பாவர் நிற்கக்
கண்ணுறு சுபர்நோக் காரேற்
காயமேல் வேதை யுண்டாய்
நண்ணுறுங் கர்ப்ப வாதை
நடுக்கத்தால் ஈன்ற பிள்ளை
எண்ணுறு மகவி ருக்க
ஈன்றதாய் மரண மாமே. (280)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் அல்லது பன்னிரண்டாமிடத்தில் பாவக்கோள் இருக்க, இவர்களைச் சுபக்கோள்கள் பார்க்காவிடில், தாய்க்குக் குழந்தைப்பேற்றின்பொழுது உடல் வேதனை உண்டாகி, நடுக்கம் ஏற்பட்டு, குழந்தை பிழைத்துக்கொள்ள, குழந்தையைப் பெற்றதாய் மரணமடைவாள்.

## புத்திரர் அழிவு

அருந்தைந்திற் பாவர் நிற்க
ஐந்துளோன் பாவ மத்யம்
பொருந்தவே சுபர்நோக் காரேற்
புத்திர நாச மாகுந்
தருங்குரு பாவ மத்யம்
சார்ந்தைந்தோன் பலக்கே டாகி
இருந்திடச் சுபர்பா ராறேல்
இலங்கிய புத்ர நாசம். (281)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில் பாவக்கோள் இருக்க, ஐந்தாமிடத்திற்கு அதிபதி பாவக் கோள்களுக்கு இடையே இருக்க, இவர்களைச் சுபக்கோள்கள் நோக்கவில்லையென்றால், இச்சாதகனுக்குப் புத்திரர் அழிவு உண்டாகும். குரு, பாவக்கோள்களுக்கு இடையே இருக்க, ஐந்தாமிடத்திற்கு அதிபதி பலவீனமாக இருக்க, இவர்களைச் சுபக்கோள்கள் பார்க்கவில்லையானால், இச்சாதகனுக்குப் புத்திரர் அழிவு உண்டாகும்.

### புத்திர மரணத்திற்குக் காரணம்

அரியபுத் திரத்தா னத்தில்
ஆறுளோன் இருக்கப் பார்க்கில்
எரியுறு பிரம சாபத்
தினிற்புத்ர நாசம் என்பர்
புரியுமைந் தோனைச் செவ்வாய்ப்
பொருந்திடச்சுபரைப் பாவர்
துரிதமாய் பார்க்கிற் சத்துரு
தோஷத்தாற் புத்திர நாசம். (282)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில் ஆறாமிடத்திற்கு அதிபதி இருக்க அல்லது ஐந்தாமிடத்தை ஆறாமிடத்திற்கு அதிபதி பார்க்க, இச்சாதகனுக்குப் பிரம சாபத்தினால் புத்திர இழப்பு உண்டாகும். ஐந்தாமிடத்திற்கு அதிபதியுடன் செவ்வாய் சேர்ந்திருக்க, அந்தச் சுபக்கோளைப் பாவக்கோள் பார்க்கில், இச்சாதகனுக்குச் சத்துரு தோஷத்தால் புத்திர இழப்பு உண்டாகும்.

### இதுவுமது

பதியினால் எட்டீ ராறிற்
பாவிகள் இருக்க ஐந்துக்
கதிபதி சனியைக் கூட
அருட்சுபர் நோக்கி னாலும்
மதியுறு மாதுர் தோஷம்
வருவதாற் புத்ர நாசம்
நிதிபெறு கணித நூலோர்
நிகழ்த்திய வாறி தாமே. (283)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடம் அல்லது பன்னிரண்டாமிடத்தில் பாவக்கோள்கள் இருக்க, ஐந்தாமிடத்திற்கு அதிபதியுடன் சனி ஒன்றுகூடி இருக்க, இவர்களைச் சுபக்கோள் நோக்கினாலும், இச்சாதகனின் தாயாருக்கு தோஷமும் புத்திரர்களுக்கு அழிவும் உண்டாகும் என்று சோதிடநூல் வல்லவர்கள் கூறியுள்ளார்கள்.

## பிதுர்தோஷத்தால் புத்திர தோஷம்

காணும்பாக் கியத்திற் பாவர்
கலந்திட ஐந்துக் குள்ளோன்
சேணுறு சனியைக் கூடத்
திரிகோணம் தன்னில் மாந்தி
ஊணுறிற் பிதுர்தோ ஷத்தால்
உற்றிடும் மைந்தர் நாசம்
வேணுவை மதன்கை வில்லை
விளங்கிய புயத்தி னாளே! (284)

*(இ-ள்.)* மூங்கிலையும் மன்மதன் கையிலுள்ள கரும்பு வில்லையும் ஒத்த தோள்களையுடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாம் இடத்தில பாவக்கோள் இருக்க, ஐந்தாமிடத்திற்கு அதிபதி சனியோடு ஒன்றுகூடி இருக்க, திரிகோணங்களில் ஒன்றில் மாந்தி நிற்க, இச்சாதகனுக்குப் பிதுர்தோஷத்தால் புத்திரதோஷம் உண்டாகும்.

## சர்ப்ப தோஷம், தெய்வ குற்றத்தால் புத்திர தோஷம்

பொற்பணி ஐந்தில் நிற்பப்
புகழைந்தோன் பலமே தாழிற்
சர்ப்பதோ ஷத்தி னாலே
தழைத்திடும் புத்ர நாசம்
எற்புறும் ஐந்துக் கேழுக்
கிறைவரைச் சனிசேய் பார்க்கில்
உற்பவ விதர தெய்வ
உபாதியாற் புத்ர நாசம். (285)

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில் கேது நிற்க, ஐந்தாமிடத்திற்கு அதிபதியின் பலம் தாழ்ந்திருக்க, இச்சாதகனுக்குச் சர்ப்பதோஷத்தினால் புத்திரர்கள் மரண மடைவார்கள். சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடம், ஏழாமிடம் ஆகியவற்றிற்கு அதிபதிகளைச் சனியும் செவ்வாயும் பார்க்க, தெய்வக் குற்றத்தால், இச்சாதகனின் பிள்ளைகள் மரணமடைவார்கள்.

## முற்பிறவி பாவத்தால் புத்திரர் மரணம்

அடைவுறு சாமி தானே
ஆறெட்டில் இருக்க ஐந்துக்
குடையவன் பாவ ரோடே
உற்றிடச் சத்துரு நீசம்
இடையுறு மூடம் எய்தி
இயற்பலம் மெலிந்தோர் பார்க்கிற்
தடையறும் உற்ப வத்தாற்
றனயரே நாச மாமே. (286)

(இ-ள்.) இலக்கனாதிபதி, ஜென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடம், எட்டாமிடம் இவற்றில் ஒன்றில் இருக்க, ஐந்தாமிடத்திற்கு அதிபதி பாவக்கோளோடு சேர்ந்திருக்க அல்லது பகை, நீசம், மூடம் பெற்று பலம் குறைந்த கோள்கள் பார்க்க, இச்சாதகனுக்கு முற்பிறவியில் செய்த பாவத்தின் பலனாகப் பிள்ளைகள் மரணமடைவார்கள்.

## புத்திர நாசம்

தாவிய ஐந்தே ழொன்பான்
சாற்றிய பன்னி ரண்டிற்
பாவிய சத்துரு வர்க்கம்
படைத்துரிற் புத்ர நாசம்
ஆவியாம் சாமி பொன்னும்
ஐந்தேழுக் குடைய பேரும்
மேவிய பலமே தாழின்
மிகுமைந்தர் நாச மாமே. (287)

(இ-ள்.) ஜென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடம், ஏழாமிடம் ஆகியவற்றிற்கு அதிபதிகள் பன்னிரண்டாமிடத்தில் பகைவர் வர்க்கத்தையடைந்து இருக்க, இச்சாதகனின் பிள்ளைகளுக்கு மரணம் நேரிடும். இலக்கனாதிபதி, குரு, ஐந்தாமிடம், ஏழாமிடம் ஆகிய இடங்களுக்கு அதிபதிகள் பலம் தாழ்ந்து இருக்க, இச்சாதகனின் பிள்ளைகளுக்கு மரணம் நேரிடும்.

## இதுவுமது

தீயவர் ஐந்தில் நிற்கத்
திகழைந்தோன் நீசம் ஏற
நேயமாம் சுபர்பா ராரேல்
நிகழ்த்திய புத்ர நாசம்
தூயவொன் பதினிற் பொன்னைச்
சுங்கனும் மதியும் பார்க்கில்
ஆய்தோர் புத்ர நாசம்
மாமயில் வேற்கண் ணாளே! (288)

(இ-ள்.) அழகிய மயிலைப் போன்ற சாயலையும் வேல் போன்ற கூரிய நோக்கினையும் உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில் பாவக்கோள்கள் நிற்க, ஐந்தாமிடத்திற்கு அதிபதி நீசம் பெற்று, இவரைச் சுபக்கோள் பார்க்கவில்லையென்றால், இச்சாதகனின் பிள்ளைகளுக்கு மரணம் உண்டாகும். சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதா மிடத்தில் உள்ள குருவைச் சுக்கிரனும் சந்திரனும் பார்க்க, இச்சாதகனுடைய பிள்ளைகளுக்கு மரணம் நேரிடும்.

## இதுவுமது

சந்திரன் சீவன் சாமி
தனக்கைந்திற் பாவர் நிற்க
வந்தமூன் றிடத்தோன் தானே
வரப்பல வீன மாகி
இந்தவைத் திடமும் ஐந்துக்
கிறைவனும் சுபவர்க் கத்தைச்
சொந்தமாய்ப் பெறாதி ருக்கிற்
றோன்றல்தான் நாச மாமே. (289)

(இ-ள்.) சந்திரன், இலக்கனம், இலக்கனாதிபதி இவர்களுக்கு ஐந்தாமிடத்தில் பாவக்கோள்கள் நிற்க, சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்திற்கு அதிபதி பலவீனமாக, ஐந்தாமிடமும் ஐந்தாமிடத்திற்கு அதிபதியும் சுபவர்க்கத்தை யடையாமல் இருக்க, இச்சாதகனுடைய பிள்ளைகள் மரணமடைவார்கள்.

## இதுவுமது

குருவுக்கைந் தொன்றே ழுக்குங்
　　கூறைந்தில் எட்டிற் பாவர்
மருவுற்று நிற்கு மேனும்
　　மகிழைந்திற் கேதுற் றாலுங்
கருதுகோல் உதய மாகக்
　　கரியவன் நிற்கு மேனும்
பொருகயல் அனைய கண்ணாய்!
　　புத்திர நாச மாமே! (290)

(இ-ள்.) சண்டையிடும் மீன்களையொத்த கண்களை யுடைய பெண்ணே! குரு, இலக்கனம், ஐந்தாமிடம், ஏழாமிடம் ஆகியவற்றிற்கு ஐந்தாமிடத்தில் அல்லது ஏழாமிடத்தில் பாவக்கோள்கள் நின்றாலும், ஐந்தாமிடத்தில் கேது இருந்தாலும், துலாம் இலக்கனமாக அதில் சனி நின்றாலும், இச்சாதகனுக்குப் பிள்ளைகள் பிறந்து இறப்பார்கள்.

## இதுவுமது

பிறைசனி ஒன்பான் நிற்கிற்
　　பிதுர்தோஷத் தாற்சே யீனம்
குறைபடு தனக்குப் பத்திற்
　　குசன்சனி நிற்கின் மைந்தர்
நிறைவிலா தீன மாகும்
　　நிகழ்கதிர் ஒன்ப தேனும்
மறையிற்புத் திரன்மு கத்தை
　　மகிழ்வுடன் தரிசிக் காதான். (291)

(இ-ள்.) சந்திரன், சனி ஆகிய இருகோள்களும் சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாமிடத்தில் இருக்க, இச்சாதகனுக்குப் பிதுர்தோஷமாகும். இப்பிதுர் தோஷத்தால் இவனுடைய பிள்ளைகள் மரணமடைவர். சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாம் இடத்தில் சூரியன் இருக்க, இச்சாதகன், தன் பிள்ளையின் முகத்தைக் காணாதவனாக இருப்பான்.

## உயிர்க்கொலை செய்பவன்

புகரேனும் இரவி யேனும்
புகநீச மூட மாகிப்
பகையுறு பாவர் கூடப்
பார்த்திடச் சுபர்பா ராரேல்
நிகருகேந் திரமே நிற்கில்
இதஞ்சீவ வதைகள் செய்வன்
மன்மதக் களிற்றை வெல்லும்
ஏந்திளங் கொங்கை மாதே! (292)

(இ-ள்.) மன்மதனாகிய ஆண் யானையை வெல்லக் கூடிய ஆற்றல்படைத்த இளமையான தனங்களையுடைய பெண்ணே! சுக்கிரன் அல்லது சூரியன் நீசம் அல்லது மூடமாகி பாவர்களோடு ஒன்றுகூடி இருக்க, அல்லது பாவக் கோள்களால் பார்க்கப்பட, சுபக்கோள் பார்க்காமல் கேந்திரங்களில் ஒன்றில் நிற்க, இச்சாதகன் உயிர்க்கொலை செய்பவனாக இருப்பான்.

## இதுவுமது

நிருதர்மந் திரியொன் பானில்
நீசமே யாகப் பாவர்
சறுவுற கூடப் பார்க்க
தருசுபர் நோக்கா ராகிற்
சொருமொடு பிரம் ஹத்தி
செய்வதே தொழிலாய் நிற்பன்
மறுவது கமலப் போதில்
வாழயன் வகுத்த வாறே. (293)

(இ-ள்.) சுக்கிரன், சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாமிடத்தில் இருக்க, பாவக்கோள் நீசம் பெற்று இவரோடு சேர்ந்திருக்க அல்லது இவரைப் பார்க்க, சுபக்கோள் எதுவும் பார்க்கவில்லையென்றால், இச்சாதகன் உயிர்க்கொலை செய்வதைத் தொழிலாக உடையவனாக இருப்பான். இது குற்றமற்ற தாமரைப் பொகுட்டில் வீற்றிருக்கும் பிரம்மன் வகுத்த வழியாகும்.

### பறவைகளைக் கொல்பவன், பொறி செய்பவன்

சமரச கேந்தி ரங்கள்
தன்னிலே பாவர் நிற்க
மாமந் திரியெட் டாகி
அனுதினம் பட்சி கொல்வான்
இமகரன் குருசேய் நீலன்
எழில்புதன் கூடில் அற்ப
எமன்சீவ வதைகள் செய்யும்
எந்திரப் பொறிசெய் வானே. *(294)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு கேந்திர இடங்களில் பாவக்கோள்கள் நிற்க, குரு எட்டாமிடத்தில் இருக்க, இச் சாதகன், தினமும் பறவைகளைக் கொல்வான். சந்திரன், குரு, செவ்வாய், சனி, புதன் ஆகிய ஐந்து கோள்களும் ஒன்றுகூடி இருக்க, உயிர்களைக் கொல்ல இயந்திரப் பொறிகளை இச்சாதகன் செய்வான்.

குறிப்பு : இமகரன் - சந்திரன்.

### சுரா பானம் செய்பவன்

நவக்கிர கங்கள் மூன்று
ராசியில் நிற்கி லேதான்
பவக்குல பாத கன்தான்
பானுஅம் புலியும் நீலன்
றுவதொடு கேந்தி ரிக்க
நற்சுபர் பாரா ராகிற்
றவத்தொடு விரதி போலத்
தான்சுரா பானம் செய்வன். *(295)*

*(இ-ள்.)* ஒன்பது கோள்களில் மூன்று கோள்கள் இராசியில் நிற்க, இச்சாதகன் பாதகனாக இருப்பான். சூரியனும் சந்திரனும், சனியும் கேந்திரங்களில் இருக்க இவர்களைச் சுபக்கோள்கள் பார்க்கவில்லை என்றால், இச்சாதகன் சுராபானம் (மதுவகையுள் ஒன்று) செய்வான்.

## இதுவுமது

மன்னுமோ ரிரண்டோன் பாம்பின்
வர்க்கமுற் றிடமூன் றோனும்
சுன்னுமே நீச மூடத்
துடனின்று பார்க்க ரெண்டின்
மின்னுரு இரவி காரி
வெண்மதி கூடி நிற்கில்
தன்னுளே நயிட்டி கன்போற்
றான்சுரா பானம் செய்வன். (296)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்திற்கு உரியவன் பாவ வர்க்கம் பெற, மூன்றாமிடத்திற்கு அதிபதியும் சனியும் நீசமுடத்துடன் ஒன்றுகூடி இருந்து பார்க்க, இரண்டாமிடத்தில் சூரியன், சனி, சந்திரன் ஆகிய மூன்று கோள்களும் ஒன்றுகூடி இருக்க, இச்சாதகன், நல்லவன்போல் இருந்துகொண்டு சுராபானம் செய்வான்.

## இதுவுமது

இசையும்கேந் திராதா னத்தில்
எட்டுளோன் சுங்க னாகி
இசைவிலா திருக்க காரி
இருக்கஅம் புலியும் கூடி
வகையில்சுக் கிரனைப் பார்க்கில்
மாதவ முடைய னேனும்
திசையெலாம் அறியத் தானே
தினம்சுரா பானம் செய்வன். (297)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குக் கேந்திரத்தானங் களில் எட்டாமிடத்திற்கு உரியவனாகச் சுக்கிரன் அமர, சனியும் சந்திரனும் ஒன்றுகூடி சுக்கிரனைப் பார்க்க, இச்சாதகன் மாதவத்தைச் செய்தவனாக இருந்தாலும் உலகோரறிய சுராபானம் செய்வான்.

## குலநாசம்

அம்புலி சாமி யுந்தான்
அஸ்தம மடையப் பாவர்
வம்பொடு கூடப் பார்க்க
மலிவுறு பாக்கி யத்தான்
றம்பமாய் வித்தை சாரில்
றாரமும் புத்தி ராளும்
இம்பரில் குலமும் நாசம்
எய்திடும் இனிய தேனே. *(298)*

(இ-ள்.) தேன்போன்று இனிமையான மொழிகளைப் பேசக்கூடிய பெண்ணே! சந்திரனும், இலக்கனாதிபதியும் அஸ்தமனம் அடைய, பாவக்கோள்கள் இவர்களோடு ஒன்றுகூடி நிற்க அல்லது பார்க்க, ஒன்பதாமிடத்திற்கு அதிபதி இரண்டாமிடத்தைச் சேர, இச்சாதகனின் மனைவியும் மக்களும் குலமும் நாசமாகும்.

## இதுவுமது

பத்தில்வெண் மதியும் ஏழிற்
பார்க்கவன் குருவும் நிற்க
ஒத்தபாக் கியத்திற் பாவ
ருறிற்குல நாசம் என்பார்
வைத்தெழும் இரவி திங்கள்
வக்கிரன் சுக்கி ரன்மால்
கொத்துடன் கூடி நிற்கிற்
குலநாசம் என்று கூறே. *(299)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பத்தாமிடத்தில் நிறைந்த சந்திரனும், ஏழாமிடத்தில் சூரியனும், குருவும் நிற்க, ஒன்பதாமிடத்தில் பாவக்கோள் இருக்க, இச்சாதகனின் குலம் நாசமாகும். சூரியன், சந்திரன், செவ்வாய், சுக்கிரன், புதன் ஆகிய ஐந்து கோள்களும் ஒன்றுகூடி இருக்க, இச்சாதகனின் குலம் நாசமாகும்.

## இதுவுமது

புதியபொன் னிரண்டில் நிற்கப்
புதன்பார்க்க பாக்கி யத்திற்
சதியுறு பாவர் நிற்கிற்
றருகுல நாச மாகும்
திதிவாரத் துடன்நட் சத்திரம்
செப்பிய மூன்றுங் கூடில்
விதிகுல நாச மாகும்
வெண்மதி முகத்தி னாளே! (300)

(இ-ள்.) நிறைந்த சந்திரனைப் போன்ற அழகான முகத்தையுடைய பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டா மிடத்தில் குரு இருக்க, அதனைப் புதன் பார்க்க, ஒன்பதா மிடத்தில் பாவக்கோள் இருக்க, இச்சாதகனின் குலம் நாசமாகும். திதி, வாரத்துடன் நட்சத்திரம் ஒன்றுகூடி இருக்க, இச்சாதகனின் குலம் நாசமாகும்.

## குலநாசம், பாவ சிந்தனை

பல்லுடன் பிறக்கு மேனும்
பத்தில்வெண் மதியும் நாலில்
எல்லுறப் பாவர் நிற்க
ஏழில்சுக் கிரன்நின் றாலும்
சொல்லுறு குலநா சம்தான்
சுக்கிரன் மதியும் கூடிற்
செல்லுற கொடிய பாவ
சிந்தனை யுடைய னாமே. (301)

(இ-ள்.) குழந்தையாகப் பிறக்கும்பொழுதே பல்லுடன் பிறந்தாலும் சென்ம இலக்கனத்திற்குப் பத்தாமிடத்தில் நிறைந்த சந்திரனும் நான்காமிடத்தில் பாவக்கோள் இருக்க, ஏழாமிடத்தில் சுக்கிரன் நின்றாலும் அச்சாதகனின் குலம் நாசமாகும். சுக்கிரனும், சந்திரனும் ஒன்றுகூடி இருக்க, இச்சாதகன், மிகுந்த பாவச்சிந்தனையுடையவனாக விளங்குவான்.

**பாவ சிந்தை**

கணக்கன்சேய் மதியும் கூடிக்
கலந்துடன் இருக்கு மேனும்
இணக்கொன்பான் சேய்நின் றாலும்
ஏழில்சுக் கிரன்நின் றாலும்
வணக்குலக் கனத்தொட் டேழு
வரையேழு கோளுற் றாலும்
தணக்குநா லிடங்கே தேனும்
சனியன்சேய் பாவ சிந்தை. *(302)*

(இ-ள்.) புதன், செவ்வாய், சந்திரன் ஆகிய கோள்கள் ஒன்றுகூடி இருந்தாலும், இலக்கனத்திற்கு ஒன்பதாமிடத்தில் செவ்வாய் இருந்தாலும், ஏழாமிடத்தில் சுக்கிரன் இருந்தாலும், சென்ம இலக்கனம் முதல் ஏழாமிடம் வரை ஏழு கோள்களும் இருந்தாலும், சென்ம இலக்கனத்திற்கு நான்கா மிடத்தில் கேது அல்லது சனி, செவ்வாய் ஆகிய கோள்களும் இருக்க, இச்சாதகன், பாவசிந்தனை உடையவன்.

**பசி உடையவன், சூதாடி, எப்பொழுதும் உறங்குவான்**

சத்துருத் தானந் தன்னிற்
றபனனேற் சேயேற் பொன்னோன்
மெத்தென இருப்பா ராகில்
வெகுபசி உடைய னாவான்
பத்தினிற் பாவர் நிற்கப்
பரிந்துசூ தாடல் கற்பன்
எத்திசேய் மதிசுன் பொன்கூ
டிடிற்சதா நித்திரை யாமே. *(303)*

(இ-ள்.) பகை வீடுகளில் சூரியன், செவ்வாய், குரு ஆகிய கோள்களில் ஏதேனும் ஒன்று இருப்பின், அச்சாதகன் மிகுந்த பசியை உடையவனாக இருப்பான். சென்ம இலக்கனத்திற்குப் பத்தாமிடத்தில் பாவக்கோள் இருக்க, சூதாடலைக் கற்றுக்கொள்வான். செவ்வாய், சனி, சந்திரன், குரு ஆகிய நான்கு கோள்களும் ஒன்றுகூடி இருப்பின், இச்சாதகன் எந்நேரமும் உறங்கிக் கிடப்பான்.

### எட்டாம் பாவத்தில் சூரியன் நின்ற பலன்

அட்டமம் இரவி நிற்கில்
அற்பாயுள் கண்ணோய் கல்வி
தொட்டவா சலவி யாதி
தூராசையைக் கினிப யத்தோ
டிட்டமித் துருவி ரோதம்
இசையலங் கார நாட்டம்
கெட்டிடுஞ் சுகம்த னம்தானம்
கர்வித னழகுள் ளோனே. (304)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் இரவி இருந்தால் இச்சாதகன், குறைந்த ஆயுள் உடையவன்; கண்களில் நோய் உள்ளவன்; கல்வி கற்றவன்; சலவியாதி உடையவன்; தீய ஆசைகளைக் கொண்டவன்; இனிமை யாகப் பழகக்கூடியவன்; நண்பர்களுக்குப் பகைவ னாவான்; இசையிலும் ஒப்பனையிலும் நாட்டம் மிக்கவன்; சுகக்குறைவு உள்ளவன். செல்வம் உடையவன்; தானம் செய்பவன்; அகங்காரம் உடையவன். அழகு மிக்கவனாக விளங்குபவன்.

### எட்டாம் பாவத்தில் சந்திரன் நின்ற பலன்

கஷஅல்மதி எட்டில் நிற்கிற்
கனதியாகி புத்தி ரூபன்
உலைவின்ஞா னக்கு ணத்தான்
உயர்வித்தை விநோத கன்மம்
நிலையிலற் பாயுள் உள்ளோன்
நீர்பயம் நீரிற் கண்டம்
தலையுறு சலக்க ழிச்சல்
சயரோகம் நீர்க்க டுப்பே! (305)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் சந்திரன் இருக்க, இச்சாதகன் தியாகியாகவும் நல்ல சிந்தனையை உடையவனாகவும் விளங்குவான்; பேரறிவு

உள்ளவன்; நல்லகுணம் கொண்டவன்; உயர்ந்த வித்தை களைக் கற்றவன்; நல்ல செயல்களைச் செய்பவன்; ஆயுள் குறைந்தவன்; நீர் பயம் உடையவன்; நீரில் கண்டம் உள்ளவன்; சலக்கழிச்சல், சயரோகம், நீர்க்கடுப்பு முதலான நோய்களுக்கு ஆளாகக் கூடியவன்.

## எட்டாம் பாவத்தில் செவ்வாய் நின்ற பலன்

*கடியசே யெட்டிற் பாவ*
*களத்திரங் களத்ர தோஷம்*
*படியுறு தூய்க ளத்ரம்*
*பாவரோ கத்தன் அல்லால்*
*அடியுறு கலகி சஞ்சா*
*ரத்தினன் களத்ர ஈனன்*
*விடிவாதங் களத்தி ரத்தால்*
*வெகுசேதம் உடைய னாமே.* *(306)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் செவ்வாய் இருக்க, இச்சாதகனுக்குப் பாவ களத்திரம் அமையும்; களத்திர தோஷம் உள்ளவன்; பாவ நோய்களைக் கொண்டவன்; கலகம் செய்பவன்; அலைச்சல் உள்ளவன்; களத்திரக் குறைபாடு உடையவன்; களத்திரத்தி னால் மிகுந்த இழப்புகளுக்கு ஆளாகக் கூடியவன்.

## எட்டாம் பாவத்தில் புதன் நின்ற பலன்

*சாமனே எட்டிற் நிற்கிற்*
*சதாரோகி வாத பீடை*
*மாமரு பலந்தீர்க் காயுள்*
*வாகுள வெகுத னத்தன்*
*நாமநற் சமானன் கீர்த்தி*
*ஆக்கினை தான்ப யத்தன்*
*தேமரு வித்தை தன்னைச்*
*செப்புங்கால் அவமா னத்தன்.* *(307)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் புதன் நின்றால், இச்சாதகன் எப்பொழுதும் நோயுள்ளவனாக இருப்பான்; இவனுக்கு வாதநோய்கள் உண்டாகும்; பலம் உடையவன்; நீண்ட ஆயுள் உள்ளவன்; மிகுந்த பொருட் செல்வம் பெற்றவன்; தண்டனை பெறுபவன்; புகழ் கொண்டவன்; பயம் உடையவன்; அவமானத்தை அடைபவன்.

குறிப்பு: மூன்றாம் பாடலடியில் உள்ள ஆக்கி....என்பதன் பொருள் விளங்கவில்லை.

### எட்டாம் பாவத்தில் குரு நின்ற பலன்

பொன்னவன் எட்டில் நல்ல
புத்திதீர்க் காயுள் கீர்த்தி
பன்னுமா சார வீணன்
பந்துதாட் சணியன் மித்ர
உன்னுவாய்ச் சால கன்றா
னுத்யோகி கூலி வேலைத்
துன்னிய காமி பொல்லான்
சொல்லவ மான னாமே. *(308)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் குரு இருக்கப் பிறந்த சாதகன், நல்ல புத்தியைக்கொண்டவன்; நீண்ட ஆயுளை உடையவன்; புகழ் மிக்கவன்; ஆசாரக் குறைபாடுடையவன்; உறவினர்கள், நண்பர்கள் போன்றோரிடம் அன்பு பாராட்டுபவன்; திறமையாகப் பேசக் கூடியவன்; கீழ்படிந்துள்ள பணியில் இருப்பவன்; காமம் மிக்கவன்; தீமையைச் செய்பவன்; அவமானத்தை உடையவன்.

### எட்டாம் பாவத்தில் சுக்கிரன் நின்ற பலன்

வெள்ளியே எட்டிருக்கின் நற்குணந்தீர்க் காயுள்
வெகுராச யோகமுடன் சுகம்பலமும் உடையன்
தள்ளரிய தாசிதா சாள்கன்று காலித்
தான்கேடு கிரகத்தாற் களத்திரத்தி னாலும்

*வில்ளரிய கேடுவாகன முடக்கந் துக்கம்*
*வீறுற சவத்திற் பிராந்தியவ மானம்*
*ஒள்ளியதோர் புருடாங்சலட்சணத்திற் றானே*
*ஒழியாத ரோகமுண்டாம் ஒளிமலர்ப்பூங் கொடியே! (309)*

(இ-ள்.) பொலிவுடன் விளங்கும் மலர்க்கொடியினைப் போன்று விளங்குகின்ற பெண்ணே! ஜென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் சுக்கிரன் இருக்கப் பிறந்த சாதகன், நல்ல குணத்தை உடையவன்; நீண்ட ஆயுளைப் பெற்றவன்; இராசயோகம் உள்ளவன்; சுகம் பெறுபவன்; பலம் கொண்டவன்; ஆள் அடிமைகள் உள்ளவன்; கால்நடைகளால் துன்பம் உடையவன்; வீட்டின் காரணமாகவும், மனைவியினாலும் துன்பங்களை அடைபவன்; வாகனம் முடக்கமாகும்; துக்கம் நிறைந்தவன்; அவமானம் உடையவன், ஆண்மை மிக்க அழகுடையவன்.

குறிப்பு: மூன்றாவது பாடலடியிலுள்ள 'வீறுற சவத்திற் பிராந்தி' என்பதன் பொருள் விளங்கவில்லை.

## எட்டாம் பாவத்தில் சனி நின்ற பலன்

*சனியனெட்டில இருக்கில்பயம் பாலியத்தான் மரணம்*
*தந்தைக்கும் தோஷமுண்டாம் பசிபட்னி துக்கம்*
*இனியதனம் தைரியத்தன் பொய்யன்நா சாரன்*
*எழிலுலுத்தன் துர்க்கமி இருநேத்ர யோகி*
*அனியநீசாள் கலகம் கேடுகுட்ட ரோகம்*
*ஆசனத்தில் வியாதிதுர்ச் சீவனம்பாவ சிந்தை*
*கனவிலா அவமிருத்து தோஷமே காணும்*
*காரியவிக் கினமுண்டாம் களபமுலை மயிலே! (310)*

(இ-ள்.) சந்தனம் பூசப்பட்ட அழகான தனங்களையும் மயில்போன்ற சாயலையும் உடைய பெண்ணே! ஜென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் சனி நிற்கப் பிறந்த சாதகன், இளம்வயதில் மரணபயம் உடையவன்; இச்சாதகனால், இவனுடைய தந்தைக்குத் தோஷம் உண்டாகும். பசி,

பட்டினி, துக்கம் போன்றவற்றை உடையவன்; செல்வம் உடையவன்; தைரியசாலி; பொய்யுரை கூறுபவன்; தீய செயல்களைச் செய்பவன்; கண்களில் நோயுடையவன் கலகம் செய்பவன்; குட்டரோகம், ஆசனப் பகுதியில வியாதி உள்ளவன்; தீய தொழிலை உடையவன்; பாவ சிந்தனை கொண்டவன்; கண்டங்களையுடையவன்; இவன் செய்யும் செயல்களில் குறைபாடுகள் உண்டாகும்.

## எட்டாம் பாவத்தில் இராகு நின்ற பலன்

*கரியபாம் பெட்டிருக்கின் வசூரிவிட முண்ணல்*
*கள்ளர்பயஞ் சர்ப்பபயம் பிளவைதன நாசம்*
*அரியதைரி யமனத்திற் புண்படுகி லேசம்*
*ஆபத்து ரோகம்விடத் தீட்டத்தாற் கண்டம்*
*பரிவுடன்கா லாந்திரத்தி லேபுத்திர யோகம்*
*பலபலமந் திரங்களினாள் பலன்பயமும் உண்டாந்*
*தெரிதருபங் கயப்பொகுட்டில் அரசிருக்கும் தேனே !*
*தெளிவுடைய வடநூலோர் செப்பியதிவ் வகையே!(311)*

(இ-ள்.) அழகுமிக்க தாமரைப் பொகுட்டில் வீற்றிருக்கும் திருமகளையொத்த இனியமொழிகளைப் பேசக்கூடிய பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் கரிய பாம்பாகிய இராகு இருக்கப் பிறந்த சாதகன், வைசூரி நோயால் வருந்துவான்; விஷத்தை உண்ணுவான், திருடர், பாம்பு போன்றவற்றால் அச்சம் உடையவன்; பிளவை நோயால் துன்புறுவான்; செல்வ நாசம் உடையவன்; தைரியம் உடையவன்; மிகுந்த மனத்துயரத்திற்கு ஆளாகக் கூடியவன். ஆபத்து, நோய், பாம்பு கடித்தல், கண்டம் போன்றவை உடையவன்; இவனுக்கு வயதான காலத்தில் பிள்ளைகள் பிறப்பார்கள். மந்திர தந்திரங்களால் பயன் உண்டாகும். அதனோடு சேர்ந்து அச்சமும் தோன்றும். வடமொழியில் உள்ள சோதிடநூல்களைக் கற்றறிந்த அறிஞர்கள் இதனைக் கூறியுள்ளார்கள்.

### எட்டாம் பாவத்தில் கேது நின்ற பலன்

*பொருந்துங் சேதெட்டி ருக்கினிரு வித்தைப்*
*பாவ சிந்தைபுத்ர ஈனம்*
*வருந்தும் பேய்பிடி சர்ப்பபயஞ் சூலை*
*மடிப்பு பொதுமாத ராசை*
*திருந்துபிறர் திரவி யத்தி லபேட்சை விஷம*
*தனையுண்ணல் தேக ரோகம்*
*திருந்தியது ராசை யநாசா ரமுடன்*
*துன்ர்மரணம் செப்பு வாரே.* *(312)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் கேது இருக்க, இச்சாதகன் இரண்டு வித்தைகளை உடையவன்; பாவ சிந்தனை உடையவன்; புத்திர குறைபாடு உடையவன்; பேய், பாம்பு முதலானவற்றால் அச்சம் உடையவன்; சூலை நோய் கொண்டவன்; பொது மகளிடம் விருப்பம் உடையவன்; பிறருடைய செல்வத்தின்மீது பற்று உள்ளவன்; விஷத்தினை உண்பவன்; நோய் கொண்ட உடலையுடையவன்; தீய ஆசைமிக்கவன்; தீயசெயல்களைச் செய்பவன்; இவனுக்குத் துர்மரணம் நேரிடும் என்று கூறுவார்கள்.

### எட்டாம் பாவத்தில் குளிகன் நின்ற பலன்

*குளிகனோ எட்டி நிற்கில்*
*குளம்வாவி தடாகங் கூபம்*
*வழியுறும் ஆறு தன்னின்*
*மரணங்கண் முகமு ரோகம்*
*அழியுறுஞ் சொற்ப தேகி*
*அருண்மாந்தி பவனன் நிற்கிற்*
*பொழின்மலை மரம திட்கோ*
*புரத்தேறி வீழ்ந்து சாவன்.* *(313)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் குளிகன் நிற்கப் பிறந்த சாதகன், குளம், பொய்கை, கிணறு, ஏரி, ஆறு முதலான நீர்நிலையிலொன்றினால் மரணம்

அடைபவன், முகம், கண் ஆகிய உறுப்புகளில் நோய் உடையவன்; ஆரோக்கியமற்ற உடலை உடையவன்; எட்டாமிடத்தில் மாந்தி நின்ற இராசியாதி இருக்க, இச்சாதகன் மலை, மரம், கோபுரம் இவற்றில் ஒன்றில் ஏறி விழுந்து உயிரிழப்பான்.

**சகிதாதிய பலன்**

*நிறையெட்டில் அட்ட மத்தோன்*
*நிற்கில்தீர்க் காயுள் உண்டாம்*
*அறையிலக் கினத்தோன் நிற்கில்*
*சுபமிருத்து மயல தின்மை*
*கிறையுடன்மே னோக்கு இன்றித்*
*தீயநோய் அதனால் மாய்வன்*
*மறைதரு கணித நூலின்*
*வண்மையிவ் வாறு தானே.* *(314)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் எட்டாமிடத்தின் அதிபதி நிற்க,இச்சாதகன் நீண்ட ஆயுளுடன் இருப்பான்; எட்டாமிடத்தில் இலக்கனாதிபதி இருக்க, இச்சாதகனுக்குக் கண்டம் ஏற்படும் என்று சோதிடநூல் வல்லவர்கள் வகுத்துரைத்துள்ளார்கள்.

குறிப்பு: மயலதின்மை கிறையுடன் மேனோக்கு இன்றி என்பதன் பொருள் விளங்கவில்லை.

**இதுவுமது**

*மந்தபவ னாதிபதி மன்னுதிசை தன்னிற்*
*சந்திரனப காரமதி லேமரண மென்ப*
*அந்தமுறு கேந்திரதிசை அங்கனோ இந்தும்*
*சொந்தினப காரமது சூழுநிரி யாணம்.* *(315)*

*(இ-ள்.)* சனி இருந்த இராசிக்கதிபதியின் திசையில் சந்திரனின் புத்தியில் மரணம் நிகழும். கேந்திர நாதனின் திசையில், சந்திரனின் புத்தியில் மரணம் நிகழும்.

**இதுவுமது**

கீர்த்தியோ னுடனே நின்ற
கிரகங்கள் திசையைக் கூட்டிப்
பூர்த்தியாம் பன்னி ரண்டிற்
போக்கிநின் றிடுசே டத்தை
வர்த்திக மில்லாச் சித்திரை
மாதந்தொட் டெண்ணிக் கண்டே
சேர்த்திய திங்க ளிற்பொன்
செல்லுநாள் மரண மாமே. *(316)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்திற்கு அதிபதியுடன் நின்ற கிரகங்களின் திசையைக் கூட்டி, பன்னிரெண்டில் வகுத்து மீதியைச் சித்திரை மாதம் முதல் எண்ணி கண்டு, அந்த மாதத்தில் குரு செல்லும் நாளில் சாதகனுக்கு மரணம் என்று கூறவேண்டும்.

**இதுவுமது**

இசையுமைந் தோனைக் கூடி
இருந்திடும் கோள்கள் தங்கள்
திசைவரு டங்கள் தன்னை
திகழ்பனி ரண்டுக் கீந்தே
அசைவிலா நின்ற சேட
மதையிலக் கனந்தொட் டெண்ணி
விசையுறும் ஓரை தன்னின்
மென்சனி வருநாட் கண்டம். *(317)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்திற்கு அதிபதியுடன் கூடியுள்ள கோள்களின் திசைவருடங்களை பன்னிரண்டில் வகுத்து, மீதியை இலக்கனம் தொட்டு எண்ணி, எந்த இராசியோ, அந்த இராசியில் சனிவரும் காலத்தில் சாதகனுக்குக் கண்டம் என்று கூறவேண்டும்.

## இதுவுமது

சூரியனுக் கஞ்சோ யொன்பான்
சுபர்நிற்க அதனுக் குள்ளோர்
சீரிய கேந்தி ரத்துந்
திரிகோணந் தனிலுற் றாலும்
சாரிய நிசியிற் றோன்ற
சனிக்கிந்த படியி ருக்க
பெரியபி தாவுக் கேதான்
பேசுதீர்க் காயுள் என்றே. *(318)*

*(இ-ள்.)* சூரியனுக்கு, ஐந்தாமிடம், ஒன்பதாமிடம் ஆகிய இரு இடங்களிலும் சுபக்கோள்கள் நிற்க, அவ்விடங்களுக்கு அதிபதிகள் கேந்திர திரிகோணங்களில் இருந்தாலும், இரவில் தோன்றி, சனிக்கு ஐந்தாமிடம் ஒன்பதாமிடம் ஆகிய இருவிடங்களிலும் சுபக்கோள்கள் நின்று, அவ்விடங்களுக்கு அதிபதிகள் கேந்திர திரிகோணங்களில் இருந்தாலும் இச்சாதகனின் பெரிய தந்தைக்கு நீண்ட ஆயுள் என்று கூறவேண்டும்.

## இதுவுமது

சொல்லிய ஐந்தோ டொன்பான்
சுபமத்யம் சுபரி ருக்க
அல்லது உச்சர் நிற்க
அழகிய சுபரே பார்க்க
வெல்லுமித் தானர் உச்சம்
விளங்கும்உச் சாங்கி சத்தை
சொல்லிடிற் பிதாவுக் கேதான்
தீர்க்காயுள் என்று கூறே. *(319)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடம், ஒன்பதாமிடம் ஆகிய இரு இடங்களுக்கு அதிபதிகளும் சுபர்களாக இருக்க, இவர்களுக்கு இடையே சுபக்கோள்

அல்லது உச்சக்கோள் நிற்க, இதனைச் சுபக்கோள்கள் பார்க்க, அல்லது சுபக்கோள் அல்லது உச்சக்கோள் நின்ற தானாதிபதி உச்சாங்கிசத்தைப் பெற்றிருந்தாலும், இச்சாதகனின் தந்தைக்கு நீண்ட ஆயுள் இருக்கும் என்று கூறவேண்டும்.

## உடல் அறுபடுபவன்

வைத்தலக் கனமும் மின்னே
வருமோரை நாதன் தானும்
பத்திலங் கிசமே யாக
பத்தோனைச் சாமி கூடி
சித்தமாய் ஆறில் நிற்ப
சேய்பார்க்க லக்க னத்தில்
நித்தகேந் திரத்தோன் நிற்கில்
நீலுடல் அறுப்புண் பானே. *(320)*

(இ-ள்.) சென்ம இலக்கனமும், இராசிநாதனும் பத்தாமிட அதிபதியின் அங்கிசம் பெற்று இருக்க, அந்தப் பத்தாமிடத்திற்கு அதிபதியை இலக்கனாதிபதி கூடி ஆறாமிடத்தில் இருக்க, இவர்களைச் செவ்வாய் பார்க்க, இலக்கனத்தில் கேந்திராதிபதி நிற்க, இச்சாதகனின் உடல் அறுபடும்.

## செவியறுபடுபவன்

உன்னிய மூன்று பன்னொன்
றுடையோர்பத் தோனைக்கூடி
பன்னிய ஆறோ டெட்டுப்
பனிரெண்டில் இருவர் தோன்ற
மன்னிய கதிரைக் கூடி
மலிவுறப் பார்க்கில் மூன்றிற்
சென்னியாம் செவ்வாய் நிற்கில்
செவியறுப் புண்பன் தானே. *(321)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு மூன்று, பதினோரா மிடத்திற்கு அதிபதிகள் பத்தாமிடத்திற்கு அதிபதியைக் கூடி நிற்க, ஆறாமிடம், எட்டாமிடம், பன்னிரண்டாமிடங்களில் ஒன்றில் இருகோள்கள் இருக்க, இவர்களோடு சூரியன் ஒன்றுகூடி நிற்க அல்லது இவர்களைப் பார்க்க, மூன்றா மிடத்தில் செவ்வாய் நிற்க, இச்சாதகனுக்குச் செவிகள் அறுபடும்.

**கண்களை இழப்பவன்**

இலக்கனம் இரண்டா றேழெட்
டினிற்பனி ரண்டு ளோரும்
துலக்கிய பானு திங்கள்
துர்த்தானம் தன்னில் மேவி
இலக்கிய நீச மூட
மேவபத் துடையோன் செவ்வாய்
கலக்கிய பார்வை யுற்றால்
கண்பறி போமின் னாளே! *(322)*

(இ-ள்.) மின்னலை யொத்த பெண்ணே ! இலக்கனம், இரண்டாமிடம், ஆறாமிடம், ஏழாமிடம், எட்டாமிடம், பன்னிரண்டாமிடம் ஆகியவற்றிற்கு அதிபதிகளும் சூரியனும் சந்திரனும் தீய இடங்களில் நீச, மூடம் பெற்றுப், பத்தாம் இடத்திற்கு அதிபதி, செவ்வாயின் பார்வையைப் பெற்றால், இச்சாதகனின் இரண்டு கண்களும் பறிபோகும்.

**மூக்கறுபடுபவன்**

வேண்டிய இரண்டோன் வாக்கு
மிகபாவர் வர்க்க மாக
மீண்டசேய் கூடப் பார்க்க
இவர்களங் கிசத்து ளோரும்
மாண்டபத் தோனைக் கூடி
ஆறெட்டு பன்னி ரண்டின்
மூண்டவர் நிற்பா ராகின்
மூக்கறுப் புண்பான் தானே. *(323)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடம், இரண்டாமிடத்திற்கு அதிபதி பாவர் வர்க்கமாக, இரண்டாமிடத்தில் செவ்வாய் நிற்க, அல்லது இரண்டாமிடத்தை செவ்வாய் பார்க்க, இரண்டமிடத்திற்கு அதிபதியோடு செவ்வாய் ஒன்றுகூடி நிற்க, அல்லது இரண்டாமிடத்திற்கு அதிபதியைச் செவ்வாய் பார்க்க, இரண்டாமிடம், இரண்டாமிடத்திற்கு அதிபதி ஆகியோரின் அங்கிசத்துள்ளோர் பத்தாமிடத்திற்கு அதிபதியுடன் ஒன்றுகூடி, ஆறாமிடம், எட்டாமிடம், பன்னிரண்டாமிடம் இவற்றில் ஓரிடத்தில் இருக்க, இச்சாதகனுடைய மூக்கு அறுபடும்.

### கண்ணோய் உள்ளவன்

புகலுமா றெட்டு ளோடும்
புகருலக் கனத்தில் நிற்கப்
பகரும்பத் துடையோன் கூடப்
பார்க்கிற்கண் பறிபோம் என்பர்
மகரலக் கனத்திற் செவ்வாய்
மலிவுறச் சிங்கந் தன்னில்
நிகர்மதி ரவிசுன் கூடில்
நேத்திர நோயுண் டாமே. *(324)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்திற்கு அதிபதி எட்டாமிடத்திற்கு அதிபதி ஆகிய இருவரும் இலக்கனத்தில் இருக்க, இவர்களோடு பத்தாமிடத்திற்கு அதிபதி ஒன்றுகூட, அல்லது பத்தாமிடத்திற்கு அதிபதி இவர்களைப் பார்க்க, இச்சாதகனின் கண்கள் பறிபோகும். சென்ம இலக்கனம் மகரமாக அதில் செவ்வாய் நிற்க, சிம்ம இராசியில் சூரியன், சந்திரன், சனி ஆகிய மூன்று கோள்களும் ஒன்றுகூடி இருக்க, இச்சாதகன், கண்ணோய் உடையவனாக இருப்பான்.

## தலையறுபடுபவன்

*அனையலக் கனமும் வோரைக்*
*கதிபனும் பாவ வர்க்கத்*
*தினைப்புறு பலம தின்றி*
*இயல்கன்மத் தோனைக் கூடிப்*
*புனைரவி யங்கி சத்திற்*
*பொருந்துமா றுடையோன் பூமன்*
*சனியனுங் கூடிப் பார்க்கிற்*
*றலையறுப் புண்பன் தானே. (325)*

*(இ-ள்.) சென்ம இலக்கனம் பாவ வர்க்கத்தை அடைந்து பலமின்றி பத்தாமிடத்திற்கு அதிபதியுடன் ஒன்றுகூடி, சூரிய அங்கிசத்தில் இருக்க, ஆறாமிடத்திற்கதிபதி, செவ்வாய், சனி இவர்கள் ஒன்றுகூடிப் பார்க்க, இச்சாதகனின் தலை அறுபடும். இராசியாதிபதி பாவவர்க்கத்தை அடைந்து, பலமின்றி, பத்தாமிடத்திற்கு அதிபதியுடன் ஒன்றுகூடி நின்று, சூரிய அங்கிசத்தில் இருக்க, ஆறாமிடத்திற்கு அதிபதி, செவ்வாய், சனி இவர்கள் ஒன்றுகூடிப் பார்க்க, இச்சாதகனின் தலை அறுபடும்.*

## அங்க ஆக்கினை உடையவன்

*உரவிய மூன்று பன்னொன்*
*றுடையோராங் கிசத்து ளோரும்*
*இரவிசேய் வர்க்கம் பெற்றே*
*எட்டாறு பன்னி ரண்டிற்*
*பரவியே இருக்க ஆறோன்*
*பரிவுறப் பார்ப்பா னாகில்*
*அரவக லல்கு லாளே !*
*அங்கவாக் கினையுண் டாமே. (326)*

*(இ-ள்.) பாம்பின் படத்தையொத்த அகன்ற அல்குலை உடைய பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்திற்கதிபதி, பதினோராமிடத்திற்கு அதிபதி, அவர்களின்*

அங்கிசத்தில் உள்ளவர்களும் சூரியன், செவ்வாய் வர்க்கம் பெற்று, ஆறாமிடம், எட்டாமிடம், பன்னிரண்டாமிடம் இவற்றில் ஒன்றில் இருக்க, இவர்களை ஆறாம் இடத்திற்கு அதிபதி பார்க்க, இச்சாதகனின் உடல் உறுப்பு அறுபடும்.

## சித்திரவதைக்கு ஆளாகக் கூடியவன்

அரும்புரு ஷாங்ச ராசிக்
கதிபர்பத் தாறோன் றன்னைக்
கரும்புயற் காலோன் றன்னைக்
காலாதி பதியைக் கூடி
விரும்பிய செவ்வாய் வர்க்கம்
வெய்யவன் வர்க்கம் நண்ணிற்
திரும்புமான் பார்வை யன்னாய் !
சித்திர வதையுண் டாமே. *(327)*

*(இ-ள்.)* திரும்புகின்ற மானின் நோக்கினை ஒத்த பார்வையையுடைய பெண்ணே ! சென்ம இராசி, ஆண் இராசியாக அதன் அதிபதி, பத்தாமிடத்திற்கு அதிபதி, ஆறாமிடத்திற்கு அதிபதி.......................................
ஆகியோருடன் ஒன்றுகூடி செவ்வாய் வர்க்கம் அல்லது சூரியனின் வர்க்கம் சேர, இச்சாதகன் சித்திரவதைக்கு ஆளாவான்.

## இலிங்கம் அறுபடுபவன்

ஆறிடத் தோனும் மாலும்
அரவுடன் கூடச் செவ்வாய்
ஏறிடம் பார்க்கி லேதான்
இலிங்கத்தை யறுத்துக் கொள்வன்
கூறிட இவர்கள் தானே
குலவுபத் தோனைக் கூடின்
மீறிய லிங்கம் தன்னை
வேந்தராக் கினைசெய் வாரே. *(328)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்திற்கு அதிபதியும் புதனும் இராகு அல்லது கேதுவுடன் ஒன்றுகூடி இருக்க, இவர்களைச் செவ்வாய் பார்க்க, இச்சாதகன் தன் ஆண் உறுப்பினை தானே அறுத்துக் கொள்வான். இவர்களுடன், பத்தாமிடத்திற்கு அதிபதி ஒன்றுகூடி இருக்க, இச்சாதகன் அரசரால் தன் ஆண் உறுப்பினை இழப்பான்.

## கை அறுபடுபவன்

ஒன்பதிற் சனிபொன் கூட
வோராறோன் பார்க்கு மேனும்
வன்பின்மூன் றீரா றெட்டின்
மந்திரி சனியுங் கூட
முன்பகர் பத்து நாலின்
மூண்டதீக் கோட்கள் நிற்கிற்
துன்பனாம் மன்ன னாலே
தூயகை யறுப்புண் பானே. (329)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாமிடத்தில் சனி, குரு ஆகிய இருகோள்களும் ஒன்றுகூடி இருக்க, இவர்களை ஆறாமிடத்திற்கு அதிபதி பார்த்தாலும், மூன்றாமிடம், எட்டாமிடம், பன்னிரண்டாமிடம் இவற்றில் ஒன்றில், குரு, சனி ஆகியோர் ஒன்றுகூடி இருக்க, பத்தாமிடம், நான்காமிடம் இவற்றில் பாவக்கோள்கள் நிற்க, இச்சாதகன், அரசரால் கையறுபடுவான்.

## தலை அறுபடுபவன்

நீடிய ஏழிற் காரி
நிற்கவே ழோனும் பாம்பும்
கூடிய தீக்கோ ளொன்று
குரூரங் கிசத்து நிற்க
சூடிய பலம தன்றிச்
சாமியும் பத்தா றோனும்
தேடியே பார்க்கின் மாதே!
சிரமறுப் புண்பன் தானே. (330)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் சனி இருக்க, ஏழாமிடத்திற்கு அதிபதியும் இராகு அல்லது கேதுவும் தீக்கோளொன்றும் குரூரராங்கிசத்தில் இருக்க, இலக்கனாதிபதி பலமின்றி, பத்தாமிடத்திற்கு அதிபதியுடனும், ஆறாமிடத்திற்கு அதிபதியுடன் ஒன்றுகூடிப் பார்க்க, இச்சாதகனின் தலை அறுபடும்.

## கை அல்லது கால் அறுபடுபவன்

ஏற்றுலக் கனத்திற் காரி
இருக்கவே ஏழில் ராகு
தோற்றிடக் கன்னி தன்னிற்
சுக்கிரன் இருக்கத் திங்கள்
ஆற்றிய அமர பக்க
மாகிற்கை கால்போம் என்றே
தேற்றிய கணித நூலோர்
செப்பினர் தடங்கண் மாதே ! (331)

(இ-ள்.) அழகான பெரிய கண்களைக் கொண்ட பெண்ணே ! சென்ம இலக்கனத்தில் சனியும், ஏழாமிடத்தில் இராகுவும் இருக்க, கன்னி இராசியில் சுக்கிரன் நிற்க, தேய்பிறைச் சந்திரனாக இருக்க, இச்சாதகனின் கை அல்லது கால் அறுபடும் என்று சோதிட நூல்களில் தேர்ச்சிபெற்றோர் கூறியுள்ளார்கள்.

## உடல் அறுபடுபவன்

இடமுற்ற அம்மா வாசை
எய்திய காலந் தன்னிற்
கடகத்தின் மதியி ராகு
கதிரவன் தானும் நிற்கத்
தடமுற்ற லக்க னத்திற்
சனியனங் குறைவ னாகிற்
திடமுற்ற கருவி யாலே
தேகமே பிளப்புண் பானே. (332)

(இ-ள்.) அமாவாசை நாளில் கடக இராசியில் சந்திரன், இராகு, சூரியன் ஆகிய மூன்று கோள்களும் ஒன்றுகூடி இருக்க, சென்ம இலக்கனத்தில் சனி இருப்பானால், இச்சாதகன் ஆயுதத்தால் வெட்டுப்படுவான்.

## தலை அறுபடுபவன்

அட்டமா திபனை வெள்ளி
அன்புடன் பார்க்க மந்தன்
இட்டமாஞ் செவ்வாய் இராகு
இவர்மூவர் ஒன்றாய்க் கூடிச்
சட்டமா யவர்க்குங் குரூர
சஷ்டியங் கிசத்தில் நிற்கில்
வட்டமா முலையாய்! கேளாய்
மணிமுடி அறுப்புண் பானே. (333)

(இ-ள்.) வட்டவடிவமான பெரிய முலைகளையுடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்திற்கு அதிபதியைச் சுக்கிரன் அன்புடன் பார்க்க, சனி, செவ்வாய், இராகு ஆகிய மூன்று கோள்களும் ஒன்றுகூடி, குரூர சஷ்டி யங்கிசத்தில் இருக்க, இச்சாதகனின் தலை அறுபடும்.

## கருவியினால் மரணம்

தினகரன் இரண்டில் நிற்பச்
சேய்மதி பத்தில் மேவ
வினவிய பாவர் பார்க்கில்
வெட்டுண்டுப் புழுத்துச் சாவன்
இனகுசன் கிரகம் மாற
எட்டுளோன் கேந்தி ரிக்கில்
அனதரு வானகோ வாலே
ஆயுத மரண மாவன். (334)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்தில் சூரியன் இருக்க, செவ்வாயும் சந்திரனும் பத்தாமிடத்தில் இருக்க, இவர்களைப் பாவக்கோள்கள் பார்க்க, இச்சாதகன்

வெட்டுப்பட்டு புழுபுழுத்து மரணமடைவான். செவ்வாய் கிரகம் மாற (பரிவர்த்தனை), எட்டாமிடத்திற்கு அதிபதி கேந்திர இடங்களில் நிற்க, இச்சாதகன் அரசனின் கட்டளையால் கருவியால் கொல்லப்படுவான்.

## நீண்ட ஆயுள் உடையவன்

*சென்மத்தின் அழக தாகச்*
*செழுமதி இலக்க னத்தன்*
*கன்மத்தன் மூன்று பேரும்*
*கடுநட்பாய் கலந்து நிற்கிற்*
*தன்மத்தைச் செய்வன் தேக*
*நரைதிரை இழப்பில் லாமல்*
*என்றைக்கும் நெடுநாள் வாழ்ந்தே*
*எய்துவன் மோட்சந் தானே. (335)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்தில் நிறைந்த மதி, இலக்கனாதிபதி, பத்தாமிடத்திற்கு அதிபதி ஆகிய மூன்று கோள்களுடன் நட்புடன் ஒன்றுகூடி இருக்க, இச்சாதகன் மிகுந்த தானதர்மங்களைச் செய்வான். உடலில் நரை, சுருக்கம், இழப்பு இல்லாமல் இளமை பொருந்தியவனாக வாழ்ந்து மோட்சம் எய்துவான்.

## இதுவுமது

*குலவிய மீனில் வெள்ளி*
*குறித்துறக் குருதான் நிற்க*
*விலகுகார்த் திகைரெண் டாங்கால்*
*எழில்மதி இருக்கச் செவ்வாய்*
*உலவுசிங் காச னாங்சம்*
*உற்றிட பிறந்த பாலன்*
*பலம்வெகு ஆயுள் என்றே*
*பேசினர் கணித நூலார். (336)*

(இ-ள்.) மீன இராசியில் சுக்கிரன், குரு ஆகிய இரு கோள்களும் இருக்க, கார்த்திகை இரண்டாங்காலில் சந்திரன் நிற்க, செவ்வாய் சிங்காசனாங்கிசத்தில் இருக்க, இச் சாதகனுக்கு நீண்ட ஆயுள் உண்டென்று சோதிடநூல் வல்லவர்கள் கூறியுள்ளார்கள்.

## இதுவுமது

சனிதேவ லோகாங் சத்தைச்
சார்ந்திடச் செவ்வாய் பாரில்
இனியபா ராவ தாங்சம்
மிகுந்திட உபய இலக்கனம்
தனிலொண்சிங் காச னாங்சந்
தனிற்பொன்னோன் இருப்பா னாகில்
முனிவர்கள் சமான னாக
முசிப்பின்றி வாழ்வன் மாதே! *(337)*

(இ-ள்.) சனி தேவலோகாங்கிசம் அடைய, செவ்வாய் பாராவதாங்கிசம் பெற்றிருக்க, உபய இலக்கனங்களாகிய மிதுனம், கன்னி, தனுசு, மீனம் இவற்றிலொன்றில் குரு, சிங்காசனாங்கிசம் பெற்று இருப்பானானால், இச்சாதகன் முனிவர்களுக்குச் சமானனாகக் குறைவின்றி வாழ்வான்.

## இதுவுமது

கிளைத்திடும் உபயம் தோன்றக்
கேந்திரத் திரண்டுகோளே
விளைத்திட இருந்திட் டாலும்
இடுமூன்று கிரகம் உச்ச
முளைத்திட அவர்க ளோடே
மூர்த்தியோன் அட்ட மத்தோன்
தழைத்திட இருக்கிற் பார்மேல்
சதாயுவென் றுரைப்பர் மாதே! *(338)*

(இ-ள்.) உபய இலக்கனமாக இருந்து, கேந்திரத்தில் இரண்டு கோள்கள் இருந்தாலும், மூன்று கிரகங்கள் உச்சம் பெற்று இருக்க, இவர்களோடு இலக்கனாதிபதி, எட்டாமிடத்திற்கு அதிபதி ஆகியோர் கூட, இச்சாதகன் நீண்ட வாழ்நாளை உடையவனாக இருப்பான்.

## இதுவுமது

பொன்னவன் கோபு ராங்கிசம்
பொருந்திகேந் திரத்தில் நிற்கப்
பன்னிய திரிகோ ணத்திற்
பாராவ தாங்சம் தன்னில்
உன்னிய வெள்ளி நிற்க
உயர்கட கம்பி றக்கின்
மன்னிய உகாந்தம் மட்டும்
வாழ்குவன் மலர்க்கண் ணாளே! (339)

(இ-ள்.) மலர் போன்ற கண்களையுடைய பெண்ணே! குரு, கோபுராங்கிசத்தல் இருந்து கேந்திரத்தில் இருக்க, சுக்கிரன் திரிகோணத்தில் பாராவதாங்சத்தில் இருந்து, கடக இலக்கனமான இருக்க, இந்தச் சாதகன் நீண்ட நாட்கள் இவ்வுலகில் வாழ்வான்.

## சிவபெருமானின் அருளைப் பெறுபவன்

கடகலக் கனத்திற் பொன்னோன்
கருதிய தனுரங் சத்தில்
இடமுட கேந்திரம் ஏறி
எதிர்ப்பாவர் நால்வர் மூவர்
திடமுர இருக்கில் தோன்றுஞ்
செம்மலே விரிஞ்சன் பாத
முடனடைந் திருப்பன் கண்டாய்
ஒளிகதிர் வேற்கண் ணாளே! (340)

*(இ-ள்.)* ஒளிபொருந்தியதாகவும் வேல் போன்று கூரியதாகவும் விளங்கக்கூடிய கண்களையுடைய பெண்ணே! சென்ம இலக்கனம் கடகமாக, அதில் குரு தனுரங்கிசத்தில் இருக்க, கேந்திரத்தில் மூன்று அல்லது நான்கு கோள்கள் இருக்க, இச்சாதகன் சிவனுடைய பாதங்களை அடைவன்.

**திருமாலின் அருளைப் பெறுபவன்**

*வில்லுத யத்திற் பொன்னோன்*
*மிகுமேடாங் கிசத்தி லாகச்*
*சொல்லுதண் டதனில் வெள்ளி*
*தோன்றிடக் கன்னி தன்னில்*
*செல்லுஞ்சந் திரனே நிற்கச்*
*சென்மித்தோன் திருமாற் பாத*
*மல்லுநற் பகலும் பெற்றே*
*மலையின்றி இருப்பன் மாதே !* *(341)*

*(இ-ள்.)* பெண்ணே ! சென்ம இலக்கனம் தனுராசி, அதில் குரு மேடாங்கிசத்தில் இருக்க, மிதுனத்தில் சுக்கிரன் இருக்க, கன்னி இராசியில் சந்திரன் இருக்க, இச்சாதகன் திருமாலுடைய அருளைப்பெற்றுத் துயரின்றி இருப்பான்.

**தேவர் சமானன்**

*திரிகோண கேந்தி ரத்திற்*
*தீயோரில் லாதி ருக்கப்*
*பிரியமாம் கேந்தி ரத்திற்*
*பேசிய நற்கோ ளெல்லாம்*
*பொறிவுடன் சோர ராகப்*
*பொருத்துமற் றிடத்தில் நிற்கில்*
*அறிவுடன் பிறந்த பாலன்*
*அமரர்கள் சமான னாவன்.* *(342)*

*(இ-ள்.)* இலக்கனத்திற்குத் திரிகோண கேந்திரங்களில் தீயகோள்கள் இல்லாமல், கேந்திரங்களில் நல்ல கோள்கள்

இருந்து, பாவக்கோள்கள் பிற இடங்களில் இருக்க, இச்சாதகன், தேவர்களுக்குச் சமமானவனாக விளங்குவான்.

## இதுவுமது

காரியுற் றிடுரா சிக்கும்
கடியசேய் உறைரா சிக்கும்
சீரிய நடுவிற் கோட்கள்
சேராம லேயி ருக்க
வாரிய கிரக மெல்லாம்
வைசேடி காங்சம் ஏறில்
வீரிய மகிமை யுள்ள
விண்ணவர் சமான னாவன். *(343)*

*(இ-ள்.)* சனி நிற்கின்ற இராசிக்கும் செவ்வாய் நிற்கின்ற இராசிக்கும் நடுவில் உள்ள கோள்கள் ஒன்றுடன் ஒன்று சேராமல் வைசேடிகாங்சம் ஏற, இச்சாதகன் மகிமையுள்ள தேவர்களுக்குச் சமமானவனாக விளங்குவான்.

## தீர்க்காயுள் உடையவன்

சேர்ந்திடுங் கடகம் தோன்றச்
செழுமதி குருவி ருக்கக்
கேந்திரம் அதனில் வெள்ளி
கிளர்புதன் இருக்க மற்றோர்
பாந்தமாய் மூன்றோ டாறு
பன்னொன்றில் இருக்கத் தோன்று
மாந்தரால் அவருக் காயுள்
வகுத்திட முடியா தென்னே! *(344)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனம் கடகமாக, அதில் குருவும் புதனும் இருக்க, கேந்திரத்தில் சுக்கிரனும் புதனும் இருக்க, மற்றக்கோள்கள் மூன்றாமிடம், ஆறாமிடம், பதினொன்றா மிடம் இவற்றில் இருக்க, இந்தச் சாதகனின் ஆயுளை மற்றவர்களால் எளிமையாகக் கூற இயலாது.

## இதுவுமது

குருசனி ஒருபா கைக்குள்
　　கூடிபாக் கியத்திற் பத்தில்
இருக்கமற் றிடத்தி லேனும்
　　இவ்வண்ண மிருக்க நற்கோள்
ஒருக்கமாய்ப் பார்க்கப் பானு
　　ஒன்றாகக் கூடித் தோன்றின்
வருக்கமா முனிவ ராயுள்
　　பெற்றினி திருப்பன் மாதே. *(345)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாமிடம் அல்லது பத்தாமிடத்தில் அல்லது மற்ற இடங்களில் குருவும் சனியும் ஒரே பாகையில் இருக்க, இவர்களை நல்ல கோள்கள் பார்க்க, இவர்களோடு சூரியனும் ஒன்றாகக் கூட, இச் சாதகனின் நீண்ட ஆயுளை உடையவனாக விளங்குவான்..

## இதுவுமது

பாக்கியம் அதனின் மால்பொன்
　　பானுவும் ஒன்றாய்க் கூடி
வீக்கிய சனியங் சத்தை
　　மேவிட திருந்து நிற்கில்
மாக்கிய வங்சம் ஏற
　　அம்புலி உதயம் நிற்கில்
தேக்கிய யுகாந்த காலம்
　　செல்லப்பெற் றிருப்பன் மின்னே! *(346)*

(இ-ள்.) சென்ம இலக்கினத்திற்கு பத்தாமிடத்தில் புதன், குரு, சூரியன் ஆகிய மூன்று கோள்களும் நின்று சனியின் அங்கிசத்தில் இருக்க அல்லது சனி அங்கிசம் ஏற, சந்திரன் சென்ம இலக்கனத்தில் இருக்க, இச்சாதகன் நீண்ட ஆயுளை உடையவனாக விளங்குவான்.

குறிப்பு: 'திருந்து சொந்தமாக்கிய வங்சம் ஏற' என்பதன் பொருள் விளங்கவில்லை.

## இதுவுமது

சாற்றிய ரவியும் செவ்வாய்
சனியாங் கிசத்தின் மேவச்
சேற்றிடும் வியாழம் வெள்ளி
திராங்கிசத் திருக்க மற்றோர்
பாற்றிடும் உபயாங் கிசத்தில்
பண்புற்று நிற்பா ராகில்
ஏற்றிடும் சதாயுள் என்றே
இயம்பினர் கணிதர் தாமே. *(347)*

*(இ-ள்.)* சூரியனும் செவ்வாயும் சனியாங்கிசத்தில் இருக்க, குரு, வெள்ளி ஸ்திர அங்கிசத்தில் இருக்க, மற்றக் கோள்கள் உபயாங்கிசத்தில் இருக்க, இச்சாதகன் நீண்ட ஆயுளை உடையவனாக விளங்குவான்.

## இதுவுமது

உரைக்கும் உதயம் உபயமதாய்
உபயத் தோன்கேந் திரமுச்சம்
தரைக்கும் மூல திரிகோணம்
சார்ந்திட் டாலும் உச்சனுடன்
நிரைக்குஞ் சனிதான் அட்டமத்து
நிருபன் தானே கூடிடினும்
இரைக்குங் காடற்சூழ் புவிமீது
இலங்கும் சதாயுள் எனவுரையே ! *(348)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனம் உபய இராசியாக இருக்க, அந்த இராசிக்கு அதிபதி கேந்திரங்களில் இருக்க, அல்லது உச்சம் பெற்று அல்லது மூல திரிகோண வீடுகளில் இருந்தாலும் உச்சனுடன் சனி, எட்டாமிடத்திற்கு அதிபதி யோடு கூடி இருந்தாலும், இச்சாதகன் கடல்சூழ்ந்த இப் புவியுலகில் நீண்ட வாழ்நாள் உடையவனாக வாழ்வான்.

## இந்திர சமானன்

உரைத்திடும் இலக்க னேசன்
　　உபசயந் தனிலி ருக்க
நிரைத்தெழு மதியொன் பானில்
　　நின்றிட அல்லது நல்லோர்
புரைத்தவங் கிசமே யாகப்
　　புகல்சுபர் கேந்திர மேறி
இரைத்தெழு பாவர் தாழில்
　　இந்திர சமான னாவன். (349)

(இ-ள்.) சென்ம இலக்கனாதிபதி உபசய வீடுகளான இலக்கனத்திற்கு மூன்று, ஆறு, பத்து, பதினோராம் வீடுகளில் ஒன்றில் இருக்க, ஒன்பதாமிடத்தில் சந்திரன் இருக்க, அல்லது நல்லோர் அங்கிசத்தில் இருக்க, சுபக்கோள் கேந்திரத்தில் இருக்க, பாவக்கோள் பலம் குன்றி இருக்க, இச்சாதகன் இந்திரனைப் போன்று பெருமையுடன் விளங்குவான்.

## அரிட்ட பங்கம்

பூரண மதியை மற்றோர்
　　பொற்புடன் நோக்கி னாலும்
காரண மதிக்கா றேழிற்
　　கருதெட்டு சுபர்நின் றாலும்
ஆரண மதிநல் லோரை
　　அடைந்துதான் சுபமத் யத்தில்
நேரணி சுபவர்க் கத்தால்
　　நின்றிட வரிட்ட பங்கம். (350)

(இ-ள்.) நிறைந்த சந்திரனை மற்ற கோள்கள் நோக்கி னாலும், சந்திரனுக்கு ஏழாமிடத்தில், எட்டாமிடத்தில் சுபக்கோள் நின்றாலும், சந்திரன் நல்ல வீடுகளில் இருந்து சுபக்கோள்களுக்கு இடையே சுபவர்க்கம் பெற்றிருந்தாலும், இச்சாதகன் கண்டத்திலிருந்து விடுபடுவான்.

## இதுவுமது

சுகமதி சுபரா சிக்கு
துவாதசாங் கிசமே செய்ய
அகமகிழ் சாமி பார்க்கில்
அரிட்டபங் கந்தா னாகும்
சகலருங் குருக்ஷேத் திரத்திற்
சாரினும் ஒன்றொன் பானிற்
புகலரும் உச்சர் நிற்கப்
பூவையே! அரிட்ட பங்கம். (351)

(இ-ள்.) சந்திரன், சுப இராசிக்கு துவாதசாங்சம் பெற்று இருக்க, இதனைச் சென்ம இலக்கனாதிபதி பார்க்க, இச்சாதகன் கண்டத்திலிருந்து விடுபடுவான். இராகு, கேதுக்களைத் தவிர அனைத்துக் கோள்களும் குருவின் வீட்டில் இருந்தாலும், சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதா மிடத்தில் உச்சக்கோள் ஒன்று நின்றாலும், இச்சாதகன் கண்டத்திலிருந்து விடுபடுவான்.

## இதுவுமது

சாமிக்கே யுறவாய் நற்கோள்
சதிருடன் பார்க்கு மேனும்
மாமிக்கா மூர்த்தி யோனை
அனைவரும் பார்க்கு மேனும்
நேமிக்கும் உதய னுக்கே
கேந்திர மதிற்சேய் நிற்கிற்
பூமிக்குள் அரிட்ட பங்கம்
புரிகுழற் கயற்கண் மாதே. (352)

(இ-ள்.) சுருண்ட குழலையும் சேல்மீன் போன்ற கண்களையும் உடைய பெண்ணே! சென்ம இலக்கனாதி பதியும் நற்கோள் ஒன்றுகூடி இருந்தாலும் அல்லது பார்த்தாலும், இலக்கனாதிபதியை அனைத்துக் கோள்களும் பார்த்தாலும், இலக்கனாதிபதிக்கு கேந்திரத்தில் செவ்வாய் நின்றாலும், இச்சாதகன் கண்டத்திலிருந்து விடுபடுவான்.

## இதுவுமது

அருண்மதி தனக்குப் பத்தில்
ஐம்பொன்பன் னொன்றில் பானு
வருவியந் தன்னில் வெள்ளி
மாலவன் நிற்கு மேனும்
எருதிற்பூ ரணம திக்கே
எதிர்பாவர் பார்க்கு மேனும்
பொருவரும் அரிட்ட பங்கம்
பூரிக்கும் தனத்தி னாளே! (353)

(இ-ள்.) பூரித்தெழுந்த கொங்கைகளையுடைய பெண்ணே! சந்திரனுக்குப் பத்தாமிடத்தில் குரு இருக்க, பதினோராமிடத்தில் சூரியன் இருக்க, பன்னிரண்டாமிடத்தில் சுக்கிரன், புதன் ஆகிய இரண்டு கோள்களும் ஒன்றுகூடி நின்றாலும், இடப இராசியில் நிறைந்த சந்திரன் இருக்க, அதனைப் பாவக்கோள் பார்த்தாலும், இச்சாதகன், மரணகண்டத்திலிருந்து விடுபடுவான்.

## இதுவுமது

அனையலக் கனத்திற் பொன்னோன்
அஸ்தமம் இல்லா தேனும்
இனையலக் கனநற் கோளுக்
கிராசியாய் சுபரே பார்க்க
வினையுறு பாவர் எல்லாம்
மெலிவுடன் பார்க்கு மேனும்
புனைமலர்க் குழலி னாளே!
புகலுவர் அரிட்ட பங்கம். (354)

(இ-ள்.) மலர்கள் சூட்டப்பட்ட குழலினையுடைய பெண்ணே! சென்ம இலக்கனத்தில் குரு அஸ்தமனமின்றி இருந்தாலும், இலக்கனத்தில் சுபக்கோள் பார்க்க, சுப இராசியாகவும் இருந்து சுபக்கோள் பார்க்க, பாவக் கோள்கள் பலமிழந்து இருந்தாலும், இச்சாதகன் மரணகண்டத்திலிருந்து விடுபடுவான்.

## இதுவுமது

ஏவின்மூன் றாறு பன்னொன்
றினின்பாம்பைச்சுபர்பார்த் தாலும்
பாவிகள் நற்கோள் வர்க்கம்
படைத்திடச் சுபரே பார்க்கின்
மேவிடும் அரிட்ட பங்கம்
மிக்கமூர்த் தியன்ப லக்கத்
தாவிய சுபரே பார்க்கிற்
சாற்றிடும் அரிட்ட பங்கம். *(355)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடம், ஆறாமிடம், பதினோராமிடம் ஆகிய இடங்களில் ஒன்றில் இருக்கும் இராகு அல்லது கேதைச் சுபக்கோள் பார்த்தாலும், பாவக்கோள்கள், சுபக்கோள்கள் வர்க்கம் பெற்றாலும் பாவக்கோள்களைச் சுபக்கோள்கள் பார்த்தாலும், இச்சாதகன் மரண கண்டத்திலிருந்து விடுபடுவான். இலக்கனாதிபதி பலம்பெற்று விளங்க, இக்கோளைச் சுபக்கோள் பார்க்க, இச்சாதகன் மரண கண்டத்தில் இருந்து விடுபடுவான்.

## இதுவுமது

தெரிவுறு பலமாம் பாவர்
திருட்டியால் குரூர னாகிப்
பரிவேடம் இருக்கப் பார்மேற்
பணமில நோக்கும் இராசி
பரியதாம் இராகி ருக்க
உயர்சுபர் பாரா ராகிற்
றுரிதமாம் அரிட்ட பங்கம்
துடியிடை மடநல் லாளே! *(356)*

(இ-ள்.) துடிபோன்ற இடையினையுடைய மடப்பம் பொருந்திய நல்ல குணங்களையுடைய பெண்ணே! இராகு பாவக் கோள்களின் பார்வை பெற்று குரூரனாகிப் பரிவேடம் பெற்று இருக்க, அல்லது அது நோக்கும் இராசியில் இராகு இருக்க, இவர்களைச் சுபக்கோள்கள் பார்க்கவில்லை

யென்றால், இச் சாதகன் மரண கண்டத்திலிருந்து விடுபடுவான்.

குறிப்பு: பரிவேடம் - சந்திர சூரியரைச் சூழத் தோன்றும் வட்டம்.

## அரிட்ட பங்கம், சிரேட்ட புத்திரன்

ஏற்றுநண் டினிலி ராகு
இருந்திடில் அரிட்ட பங்கம்
தோற்றிய ஒன்ப திற்பொன்
திரனே பிதாவின் பத்திற்
சாற்றிய பாக்கி யத்தோன்
சாமிக்கு பலமே தாழிற்
போற்றிய பிதாவுக் கேதான்
புத்திரன் சிரேட்ட னாவான். (357)

(இ-ள்.) கடக இராசியில் இராகு இருக்க, இச்சாதகன் மரண கண்டத்திலிருந்து விடுபடுவான். சென்ம இலக்கனத் திற்கு ஒன்பதாமிடத்தில் குரு, சூரியன் ஆகிய கோள்கள் இருக்க, இதற்குப் பத்தாமிடத்தில் ஒன்பதாமிடத்திற்கு அதிபதி நிற்க, இலக்கனாதிபதி பலம் குன்றியிருக்க இச்சாதகன் தன் தந்தைக்கு நல்ல புத்திரனாக விளங்குவான்.

## ஆயுர்த்தாயம்

சாதகம் ஆயுர்த் தாயம்
சாற்றிடின் நைசர்க் கத்தோ
டேதமில் பயிண்டி கம்மங்
கிசகிர ணத்தி னோடே
சேதமில் கால சக்ரம்
திசையட்ட வர்க்க முந்தான்
பேதமில் எழுவர்க் கத்தாற்
பேசுவ தாயுள் என்பார். (358)

(இ-ள்.) ஒரு சாதகத்தில், சாதகனின் ஆயுளை நைசர்க்கியம், பயிண்டிகம், அங்கிசம், கிரணம், காலச்சக்கரம், மரணதிசை, அட்டவர்க்கம் ஆகிய ஏழுவகையான கணக்கீடு களைக் கொண்டு கூறுவார்கள்.

## இதுவுமது

இலக்கனம் பலக்கின் அங்கிசம்
இரவிக்குப் பயிண்டி கந்தான்
கலக்கமில் மதிநை சர்க்க
கணக்கர்க்கே கிரணம் சேய்க்குத்
துலங்குமட் டகவர்க் கந்தான்
சுன்னுக்கே கால சக்கர
அலக்கமில் சனிக்குச் சாவாட்
டகவர்க்கம் ஆகும் மாதே! *(359)*

(இ-ள்.) பெண்ணே! இலக்கனம் பலம்பெற்று இருக்க அங்கிசத்தைக் கொண்டும், இரவி பலம் பெற்றிருக்க, பயிண்டிகத்தைக் கொண்டும், சந்திரன் பலம் பெற்று இருக்க நைசர்க்கத்தைக் கொண்டும், புதன் பலம் பெற்று இருக்க, கிரகணத்தைக் கொண்டும், செவ்வாய் பலம் பெற்று இருக்க அட்டவர்க்கத்தைக்கொண்டும், சனி பலம் பெற்று இருக்க, காலச்சக்கரத்தைக்கொண்டும் சர்வாட்டக வர்க்கத்தைக் கொண்டும் பலன் கூறலாம்.

## நைசர்க்க திசை

திசைபெறு நைசர்க் கத்தின்
திசைபானுக் கிருப தாகும்
இசைமதி ஒன்று செவ்வாய்க்
கிரண்டாகும் புதனுக் கென்பார்
விசையபொன் பதினெட் டாகும்
வெள்ளிக்கே இருப தென்பர்
அசைவிலாச் சனிக்கே ஐம்ப
தாந்திசை கொள்ளும் வாறே. *(360)*

*(இ-ள்.)* நைசர்க்க திசையில் சூரியனுக்கு இருபது; சந்திரனுக்கு ஒன்று; செவ்வாய்க்கு இரண்டு; புதனுக்கு ஒன்பது; குருவிற்குப் பதினெட்டு; சுக்கிரனுக்கு இருபது; சனிக்கு ஐம்பது என்று கொண்டு வருடங்களைக் கணக்கிட வேண்டும்.

**குறிப்பு:** நைசர்க்கிய திசையைக் காண இராகு, கேது நீங்கிய ஏழு கிரகங்களில் சந்திரனை ஆதியாக வைத்து, செவ்வாய், புதன், சுக்கிரன், குரு, சூரியன், சனி ஆகியோரை இறுதியாகக் கொள்ளவேண்டும். சந்திரன், சூரியன் இவர்களுக்குச் சந்திர இலக்கனத்தை முதலாகக்கொண்டும், செவ்வாய்க்குச் செவ்வாய் இருந்த இராசியை முதலாகக் கொண்டும், சுக்கிரனுக்கு சென்ம இராசியை முதலாகக் கொண்டும், குருவுக்கு இலக்கனாதிபன் இருந்த இராசியை முதலாகக்கொண்டும், சனிக்குச் சூரியன் இருந்த இராசியை முதலாகக் கொண்டும் திசை நடக்கவேண்டும்.

## பயிண்டிக திசை

*பயிண்டிகத் திசையா தித்தன்*
*பத்தொன்பான் மதியை யைந்தாம்*
*வயிண்டசேய் பதினைந் தாகும்*
*மாலவன் பன்னி ரண்டாஞ்*
*செயந்தரு பொன்பன் னைந்தாம்*
*திரவெள்ளி இருபத் தொன்றாம்*
*வியன்சனி இருபத் தாகும்*
*மிகுபயிண் டிகத்தின் வாறே.* *(361)*

*(இ-ள்.)* பயிண்டிக திசையில் சூரியனுக்குப் பத்தொன்பது; சந்திரனுக்கு ஐந்து; செவ்வாய்க்குப் பதினைந்து; புதனுக்குப் பன்னிரண்டு; குருவிற்குப் பதினைந்து; சுக்கிரனுக்கு இருபத்தொன்று; சனிக்கு இருபது என்று கொண்டு கணக்கிட வேண்டும்.

## கிரணதிசை

*கிரணமாந் திசைக்குப் பானு*
*கிளர்பத்து மதியும் ஒன்பான்*
*முரணிய செவ்வா யைந்தாம்*
*மொழிந்திடும் புதனும் ஐந்தாம்*

தரணிக்குட் பொன்னேழ் வெள்ளி
தனச்செட்டு சனிக்கைந் தாகும்
அரணிற்பாங் கிரண மார்க்கம்
அடைவினிற் றெரிந்து பாரே! (362)

(இ-ள்.) கிரண திசைக்குச் சூரியனுக்குப் பத்து; சந்திரனுக்கு ஒன்பது; செவ்வாய்க்கு ஐந்து; புதனுக்கு ஐந்து; குருவிற்கு ஏழு; சுக்கிரனுக்கு எட்டு; சனிக்கு ஐந்து எனக் கொண்டு கணக்கிட வேண்டும்.

## ஆயுட் பிரமாணம்

இயம்பிய இலக்க னந்தான்
இனியதோர் பலமே யாகி
நயம்பெறு இராசிக் குள்ள
நவாங்கிசம் ஒருநூற் றெட்டிற்
செயம்பெறு கோட்கள் ஏழும்
சென்றவங் கிசத்தைக் கூட்டி
வயங்குமண் டலத்திற் றள்ளி
மற்றது ஆயு ளாமே. (363)

(இ-ள்.) இலக்கனம் பலம் பெற்று, பன்னிரு இராசிகளுக்குள்ள நவாங்கிசம் நூற்று எட்டில், கோள்கள் ஏழும் சென்ற அங்கிசத்தைக் கூட்டி, அந்தக் கூட்டுத் தொகையில் மண்டலம் (நாற்பது) கழித்து மீதி வருவது ஆயுள் என்று சொல்லவேண்டும்.

குறிப்பு: மண்டலம் என்பது நாற்பது நாள் கொண்டது எனவும், நாற்பத்தெட்டு நாள் கொண்டது எனவும் இருவேறு கருத்துகள் உள்ளன.

## இதுவுமது

குருமாந்தி சனிமூவர் புடத்தையுமொன் றாகக்
கூட்டியே ஒன்பதினிற் பெருக்கியே பின்னுந்
தருமான தொகையதனைத் திரும்பவே ஒன்பான்
றனிற்பெருக்கிக் கண்டதொகை அறிந்ததனினூடே

பொருமாறுஞ் சனிப்புடமும் குளிகனுடப் புடமும்
பொன்னவன்றன் புடந்தனையும் பொருந்திடவே கூட்டி
வருமாமத் தொகைராசி அங்கிசத்தி லேதான்
மன்னுகுரு வருங்காலம் மரணமென்பர் மயிலே! *(364)*

*(இ-ள்.)* மயிலின் சாயலையுடைய பெண்ணே! குரு, மாந்தி, சனி ஆகிய மூவருடைய புடத்தையும் ஒன்றாகக் கூட்டி, ஒன்பதிற் பெருக்கி மீண்டும் அந்தத்தொகையை ஒன்பதிற் பெருக்கி, அதனுடன் சனிபுடத்தையும், குளிகன் புடத்தையும் குருவின் புடத்தையும் கூட்டி, அத்தொகையின் இராசி அங்கிசத்தில் கோசார ரீதியாகக் குரு வரும் காலத்தில் மரணம் நேரிடும் என்று கூறுவார்கள்.

## இதுவுமது

குருவிமிலக் கனப்புடத்தை ஐந்தினிலே பெருக்கிக்
குளிகபுடந் தனைக்கூட்டி வைப்பதுவே சீவன்
இலகுமதிப் புடத்தையெட்டிற் பெருக்கியே மாந்தி
இனியபுடந் தனைக்கூட்டி வைத்தக்காற் றேகம்
அலகில்குளி கன்புடத்தை ஏழினிலே பெருக்கி
அருக்கனது புடம்சேர்க்கின் மிருத்துவென்ப தாகும்
தலமிரண்டுக் கதிகமற்பஞ் சமனாகிற் சமனாந்
தான்குறையிற் றீர்க்காயுள் தானென்பர் மயிலே! *(365)*

*(இ-ள்.)* மயில் போன்ற சாயலையுடைய பெண்ணே! குருவின் புடத்தையும் இலக்கனப் புடத்தையும் ஐந்தில் பெருக்கி, குளிகனுடைய புடத்தையும் கூட்டி வைப்பது சீவனாகும். சந்திரபுடத்தை எட்டில் பெருக்கி, மாந்தி புடத்தைக் கூட்டிவைக்க, தேகமாகும். குளிகனுடைய புடத்தை ஏழில் பெருக்கி, சூரியனின் புடத்தையும் சேர்க்க, மரணமாகும். சீவன் தேகத்தைக் காட்டிலும் மரணம் அதிகமானால் அற்பாயுளாகும். சீவன் தேகத்திற்குச் சமமாக மரணம் இருந்தால், நடுத்தரமான ஆயுள் என்பதை அறிய வேண்டும். சீவன், தேகத்தைக் காட்டிலும் மரணம் குறைவாக இருந்தால், தீர்க்காயுள் என்று கூறுவர்.

## இதுவுமது

இம்மூன்று புடத்தனையும் ஒன்றாகக் கூட்டி
இசைராசி மண்டலத்திற் றான்களைந்த சேடத்
தம்மூல ராசியினிற் பாகைதனி லேதான்
அரிதான சனிவருங்கால் அரிட்டமென லாகுஞ்
செம்மூலத் திதுதப்பிற் றிரிகோணந் தன்னிற்
றிரும்பவிது தப்பிற் ராசிநவாங் சத்தில்
வெம்மூலச் சனிவருங்கால் மரணமே யாவன்
வெண்மதிபோற் றுலங்குமுக மின்னரசுக் கரசே. *(366)*

*(இ-ள்.)* நிறைந்த மதியைப் போன்று பொலிவு பெற்ற முகத்தையுடைய பெண்களுக்கு அரசியே ! சீவபுடம், தேக புடம், மரணபுடம் என்ற மூன்று புடங்களையும் ஒன்றாகக் கூட்டி, இராசி மண்டலத்தில் (பன்னிரண்டு) வகுத்த ஈவு, மூல இராசி பாகையிலே சனி வருங்காலத்தில் மரணம் நிகழும். இது மாறினால் திரிகோணத்தில் சனி வருங்காலத்தில் நிகழும். இது மாறினால் இராசி நவாங்கிசத்தில் சனி வருங்காலத்தில் மரணம் நிகழும்.

## இதுவுமது

ஒன்றிதூ மாதிபஞ்சக் கிரகபுடம் தனையே
ஒன்றாகக் கூட்டியதைப் பனிரண்டிற் களைந்தே
நின்றதொரு ராசியினிற் றிரேகாணந் தன்னில்
நீலனுடன் இரவிவந்து சேருமந்தக் காலம்
பொன்னுவது நிச்சயமாம் என்பரது தப்பிற்
புகல்குளிகன் றிரிகோண ராசிவரும் மாதம்
மன்றுடலி றப்பர்திண்ணம் பொன்மானே! தேனே !
வடிவேலைப் பொருந்தடக்கண் மழலைமொழி
மாதே! *(367)*

*(இ-ள்.)* பொன்னிறமான மானைப்போன்ற சாயலையும் தேன்போன்ற இனிமையையும், வடித்தெடுத்த

வேலோடு போரிடுவதைப் போன்ற கூரிய பார்வையையும் பெரிய கண்களையும் இனிய மழலை மொழியினையும் உடைய பெண்ணே! தூமன், விதிபாதன், பரிவேடம், இந்திர தனுசு, தூமகேது ஆகிய உபக்கிரகங்களின் புடங்களை ஒன்றாகக் கூட்டி அதை பன்னிரண்டில் வகுத்து நின்ற இராசியில், திரேகாணத்தில் சனியுடன் சூரியன் வந்து சேருகின்ற காலத்தில் சாதகன் மரணமடைவது உறுதியாகும். இது தப்பினால் குளிகன் திரிகோண இராசியில் வருகின்ற காலத்தில் மரணம் தப்பாது.

## மாதுர் கண்டம் வரும் காலம்

ஆதித்தன் புடத்தை வைத்தே
அம்புலிப் புடத்தை வாங்கிச்
சோதித்துக் கண்ட ராசித்
துடர்வாங் சத்தி லேதான்
போதித்த திரிகோ ணத்தின்
புகல்சனி குருவ ருங்கால்
நீதிக்காம் மாதுர் கண்டம்
நிச்சயம் நெடுங்கண் ணாளே! (368)

(இ-ள்.) நீண்ட கண்களையுடைய பெண்ணே! சூரியனின் புடத்திலிருந்து சந்திரபுடத்தைக் கழித்து கண்ட இராசி அங்கிசத்தில், திரிகோணத்தில் கோசார ரீதியாகச் சனி, குரு வருங்காலத்தில் தாயாருக்குக் கண்டம் நேரிடும்.

## பிதாவின் மரண காலம்

மாந்தியின் புடத்தை வைத்தே
வன்ரவிப் புடத்தை வாங்கித்
தேர்ந்துநின் றிடுமி ராசி
திரிகோணஞ் சனிவ ருங்கால்
மாய்ந்திடும் பிதாவும் ரோகம்
மதி அங்கிசத் திரிகோ ணத்திற்
போந்திடுங் குருவ ருங்கால்
பிதாவுக்கே மரணம் எய்தும். (369)

*(இ-ள்.)* மாந்தியின் புடத்திலிருந்து இரவி புடத்தைக் கழித்து நின்ற இராசி, திரிகோணங்களில் கோசார ரீதியாக சனிவரும் காலத்தில், தந்தைக்கு நோய்கள் தோன்றும். சந்திர அங்கிசத்தில், திரிகோணத்தில் கோசார ரீதியில் குரு வருங்காலத்தில் தந்தைக்கு மரணம் நேரிடும்.

### இதுவுமது

இரவி புடத்தி னோடே
இமகண்டன் புடத்தைக் கூட்டித்
திறமுறக் கண்ட ராசித்
திரிகோணம் பொன்வ ருங்காற்
பிதுருடல் ரோக மல்லாற்
பெரியதங்சத் திரிகோ ணத்திற்
சதமுரு குருவ ருங்காற்
றந்தைக்கே அரிட்ட மாகும். *(370)*

*(இ-ள்.)* சூரியனின் புடத்தோடு இமகண்டன் புடத்தைக் கூட்டிக் கண்ட இராசி திரிகோணத்தில், கோசார ரீதியாகக் குருவருங்காலத்தில் தந்தைக்கு நோய் உண்டாகும். அங்கிச, திரிகோணத்திற் கோசார ரீதியாகக் குருவருங்காலத்தில் தந்தைக்கு மரணம் நேரிடும்..

### சகோதர மரண காலம்

உதயத்தோன் புடத்தின் மூன்றுக்
குடையவன் புடத்தை வாங்கிற்
சிதைவுற்றுக் கண்ட நட்சத்
திரத்திரி கோணந் தன்னிற்
புதைவுற்ற சனிவ ருங்காற்
புகல்சகோ தரமே நாசஞ்
சுதைவுற்று கணித நூலோர்
சொல்லிய இயற்கை யாமே. *(371)*

(இ-ள்.) இலக்கனத்தோன் புடத்தில மூன்றுக்குடைய வனின் புடத்தைக் கழித்துக் கண்ட நட்சத்திர திரிகோணத்தில், கோசார ரீதியாகச் சனி வருங்காலத்தில் சகோதரனுக்கு மரணம் நேரிடும் என்பதனை சோதிட நூலோர் எடுத்துரைத்துள் ளார்கள்.

## துணைவர் மரண காலம்

துண்டரா குவின்பு டத்திற்
துய்யசேய் புடத்தைத் தள்ளிக்
கண்டவங் கிசரா சிப்பொன்
காணுமுற் றுணைய ரிட்டம்
விண்டசேய் புடத்தை வைத்து
விடராகு புடத்தை வாங்கிக்
கொண்டரா சிக்கோ ணத்திற்
குருவரிற் றுணைவர் நாசம். *(372)*

(இ-ள்.) இராகுவின் புடத்தில் செவ்வாயின் புடத்தைக் கழித்து கண்ட அங்கிச ராசியில் கோசார ரீதியாகக் குரு வருங்காலத்தில் மூத்த துணைவருக்குக் கண்டம் நேரிடும். செவ்வாயின் புடத்தில் இராகுவின் புடத்தைக் கழித்து கண்ட இராசி திரிகோணத்திற் கோசார ரீதியாக குரு வருங்காலத்தில் துணைவருக்கு அழிவு நேரிடும்.

## மாமனுடைய மரண காலம்

எண்டிசை இரவி மாந்தி
இலக்கனப் புடமுங் கூட்டிக்
கண்டிடும் இராசிக் குள்ளோன்
கருதியே இருந்த வீட்டிற்
கொண்டிடும் தேவ மந்திரி
குறிப்புடன் வருங்கா லத்தில்
வண்டிற லாக மாமன்
வருநிரி யான மாமே. *(373)*

(இ-ள்.) சூரியன், மாந்தி, இலக்கனப்புடம் ஆகிய மூன்று புடங்களையும் கூட்டிக் கண்டிடும் இராசிக்கு அதிபதி இருந்த வீட்டிற்குக் கோசார ரீதியாகக் குரு வருங்காலத்தில் சாதகனின் மாமன் மரணமடைவான்.

## இதுவுமது

என்றலக் கனபு டத்தில்
எமகண்டன் புடத்தை வாங்கி
நின்றிடும் இராசி யங்ச
இராசியிற் குருவ ருங்கால்
வென்றிமாந்தி யுடன்பு டத்தில்
விளங்குமங் கிசரா சிக்குள்
மன்றல்சேர் சனிவ ருங்கால்
வருநிரி யாணந் தானே. *(374)*

(இ-ள்.) இலக்கனபுடத்தில் எமகண்டன் புடத்தைக் கழித்து வரும் இராசி, அங்கிச இராசியில் கோசார ரீதியாக குருவருங் காலத்திலும் மாந்தியுடைய புடத்தில் வரும் அங்கிச இராசிக்குள் கோசார ரீதியாகச் சனி வருங்காலத்தில் சாதகன் மரணமடைவான்.

## இதுவுமது

மாந்தி சந்திரன் வாகுல இலக்கனம்
போந்த மூன்று புடத்தையும் கூட்டியே
ஈந்து கண்ட இராசியு தயத்தில்
ஆய்ந்திடு நிரியாண மாதம தாகுமே. *(375)*

(இ-ள்.) மாந்தி, சந்திரன், இலக்கனபுடம் ஆகிய மூன்று புடங்களையும் கூட்டிக் கண்ட இராசி உதயம், மரணம் நிகழும் மாதமாகும்.

அரும்பகற் சாதகர்க் கருக்கன் மந்தனில்
வரும்புடம் இரண்டையும் வகையிற் கூட்டியே
பொருந்திய தொகையினிற் புகல்நட் சத்திரந்
திருந்திய திசையினிற் றேகமா யிடுமே. *(376)*

*(இ-ள்.)* பகலில் பிறந்த சாதகர்க்குச் சூரியன், சனி ஆகிய கோள்களின் புடங்களைக் கூட்டி வரும் நட்சத்திரத்திற்கான திசையில் மரணம் நிகழும்.

சந்துறும் நிசியிற் சாதகர்க் குந்தான்
இந்திரச் சனியுடன் இராகு வின்புடம்
கொந்துறும் இரண்டையும் கூட்டிக் கண்டிடச்
சிந்துநட் சத்திரத் திசையின் மரணமே. *(377)*

*(இ-ள்.)* இரவில் பிறந்த சாதகர்க்குச் சனி, இராகு ஆகிய இரு கோள்களின் புடங்களை ஒன்றாகக் கூட்டிவரும் நட்சத்திரத்திற்கான திசையில் மரணம் நிகழும்.

**மாதுர் கண்ட காலம்**

அம்புலிக்கெட் டாமிடத்துக் கிறைவனங் கிசத்து
அறியநா லாமிடத்துக் கதிபதியங் கிசத்தும்
விம்பமுற்ற ரவிவருங்கால் மாதுர்கண்ட மென்பர்
விள்ளுமிதின் திரிகோணந் தன்னிலுமிப் பலனே
வம்புறுமாந் தியின்புடத்தை மாதுருத்தா னேசன்
மன்னுபுடத் துடன்கூட்டி மண்டலத்திற் களைந்தே
நம்பிநின்ற மிச்சத்தில் அமைச்சன்வருங் காலம்
நல்கியமா துருகண்டம் நண்ணுமென நவிலே. *(378)*

*(இ-ள்.)* சந்திர இலக்கனத்திற்கு எட்டாமிடத்திற்கு அதிபதியின் அங்கிசத்திலும், நான்காமிடத்திற்கு அதிபதியின் அங்கிசத்திலும் சூரியன் வருங்காலத்தில் சாதகனின் தாய்க்குக் கண்டம் ஏற்படும். இவற்றின் திரிகோணங்களில் சூரியன் வருங்காலத்திலும் சாதகனின் தாய்க்குக் கண்டம் உண்டாகும். மாந்தியின் புடத்தை நான்காமிடத்திற்கு அதிபதியின் புடத்துடன் கூட்டி, நாற்பதால் வகுத்து, நின்ற இராசியில் கோசார ரீதியாக குருவரும் காலத்தில் தாய்க்கு மரணம் நேரிடும்.

மந்தபவ நாதிபதி மன்னுதிசை தன்னிற்
சந்த்ரனப காரமதி லேமரண மென்ன
வந்தமுறு கேந்திரதிசை அங்கவனோ டுந்தும்
சொந்தனப காரமது சூழில்நிரி யாணம். (379)

(இ-ள்.) சனி நின்ற இராசிக்கு அதிபதியின் திசையில், சந்திரன் புத்தியில், சாதகன் மரணமடைவான். கேந்திர திசையில் அக்கோளுடன் இணைந்துள்ள கோளின் புத்தியில், சாதகன் மரணமடைவான்.

## கிரந்தாந்தரங்களிலே சொல்லப்பட்டிருக்கிற ஆயுட் பிரமாணம்

பாருலகிற் சாதகருக் காயுள்தா யந்தான்
பண்புடைய சத்தியா சநர்சித்த் சேன
பேருடையவர நாராயணர் தெய்வசு வாமிப்
பெருமணி இந்தசாரி மயன்பட்டோத் பலராங்
கூடும்யவ நாசாரி இவர்களெண் மருந்தான்
குலவுதர்க்க வாதமுடன் மறைமுதற்சம் மதியாய்ச்
சீருடைய மூன்றுவகை யாயுர்தா யந்தான்
செப்பியதோர் வடமொழியைச் செந்தமிழாற்
சொல்வாம். (380)

(இ-ள்.) புவியுலகில் சாதகர்க்கு ஆயுள் நிர்ணயத்தைச் சத்தியாசனர், சித்தநேசர், வர நாராயணர், தெய்வசுவாமி, இந்தசாரி, மயன், பட்டோத்பலர், யவனாச்சாரி ஆகிய எண்மரும் தர்க்கவாதம் செய்து வேதநூல்களில் கூறியுள்ள சோதிட செய்திகளை ஏற்று, மூன்று வகையான ஆயுள் வகைகளை வடமொழியில் கூறியதை செந்தமிழ் மொழியால் சொல்லத் தொடங்குகிறேன்.

## பிண்டாயுர் தாயம்

கதிரவன்பத் தொன்பதுடன் மதியிருபத் தைந்து
கருதுசெவ்வாய் பதினைந்து கணக்கன்பனி ரண்டாம்
எதிர்பொன்னோன் பதினைந்து வெள்ளியீ ரேழு
இனியசனி இருபதுடன் னூற்றிருப தாண்டுஞ்

*சதிருடனே பிண்டாயுர் தாயமென்பர் இவர்கள்*
*தங்கடங்கள் பரமஉச்சம் தன்னிநின்றாற் றானே*
*யதிபரம உச்சமுத லந்நீச மட்டும்*
*ஆனநூற்றெண் பதுபாகை யுமடவிற் கொண்டே. (381)*

(இ-ள்.) சூரியன் பத்தொன்பது; சந்திரன் இருபத்தைந்து செவ்வாய் பதினைந்து; புதன் பனிரெண்டு; குரு பதினைந்து; சுக்கிரன் பதினான்கு; சனி இருபது ஆகியவை சேர்த்து நூற்று இருபதாண்டும் பிண்டாயுர் தாயம் என்று சொல்லுவார்கள். இக்கோள்கள் தங்கள் தங்கள் பரம உச்சம் முதல் நீசம் மட்டும் நூற்றொன்பது பாகைகளையும் கணக்கிடவேண்டும்.

## இதுவுமது

*பகருமவ ரவர்க்குள்ள திசைவருடம் தன்னைப்*
*பன்னுமுன் னூற் றறுபதுபங் காகவே பிரித்துத்*
*திகழ்பரம உச்சம்விட்டு அடுத்தபா கையிலே*
*சொல்லுங்கால் ஒருபங்கு குறையுமிந்தப் படியே*
*நிகழதிக நீசமட்டில் வரிற்பாதி நிற்கும்*
*நின்றப்பா லடக்குங்கால் ஒவ்வொருபங் கேறும்*
*இகலிலாப் பரமவுச்சந் தன்னிலே வருங்கால்*
*எப்போதும் உண்டான திசைவருட நிறையும். (382)*

(இ-ள்.) அவரவர்க்குள்ள திசைவருடங்களை முன்னூற்று அறுபது பங்காகப் பிரித்து, பரம உச்சம் விட்டு அடுத்த பாகையிலே ஒன்று குறையும், இந்தப்படியே நீசம் வரை வரும்பொழுது முன்னூற்றறுபதில் பாதியில் நிற்கும். அதன் பிறகு மீண்டும் அடைக்கும்பொழுது ஒருவொரு பங்கு உயரும். பரம உச்சத்திற்கு வரும்பொழுது திசைவருடம் நிறைவுபெறும்.

## இதுவுமது

*இவ்வண்ணம் இரவிமுதல் ஏழுகோ ணுக்கு*
*எண்ணியே கண்டறிந்த ஆயுர்த்தா யத்தில்*
*பௌவமுறுஞ் சத்துருத்தா னத்திருந்த கோட்கள்*
*பங்காக வேகொடுத்த வருடத்தி லேதான்*

செவ்வியசெவ் வாய்தவிர மற்றப்பேர்க் கெல்லாம்
செப்பமுடன் மூன்றிலொன்றில் தள்ளியே கூட்டல்
வெவ்வினையாம் மூடமுற்றோர் கொடுத்தவரு டத்தில்
வெள்ளிசனி யல்லார்க்குப் பாதிதள்ளிக்
கூட்டே. *(383)*

(இ-ள்.) இதைப்போல சூரியன் முதலான ஏழு கோள்களுக்கும் கண்டறிந்த ஆயுர்த்தாயத்தில் பகை வீடுகளில் இருந்த கோள்கள் பங்காகக் கொடுத்த வருடங்களில் செவ்வாயைத் தவிர மற்ற கோள்களுக்கெல்லாம் மூன்றில் ஒன்றைத் தள்ளி கூட்டவேண்டும். மூடமான கோள்கள் கொடுத்த வருடத்தில சுக்கிரன் சனியைத் தவிர மற்ற கோள்களுக்குப் பாதியைத் தள்ளிக் கூட்டவேண்டும்.

## இதுவுமது

வியந்தொட்டே அபசவ்விய மாறிரா சியிலும்
வெம்பாவர் இருக்கிலவர் கொடுத்தவய தினிலே
இயல்வியத்திற் பாவர்நிற்கின் முற்றுங்கொடு போவர்
இனியசுபர் இருந்தக்காற் பாதிகொடு போவர்
நயமுறுலா பந்தன்னிற் பாவநிற்கிற் பாதி
நண்ணுசுபர் இருந்தாக்கால் நாலிலொன்று கொள்வார்
சுயகருமந் தனிற்பாவர் உறின்மூன்றத் தொன்றாம்
சுபரிருக்கிற் ஆறிலொன்று தொடர்ந்துகொள்வர்
தானே. *(384)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டாம் இடம் தொட்டு இடப்பக்கமாக இராசியில் பாவக்கோள் இருக்க, இவர்கொடுத்த வயதினிலும், பன்னிரண்டா மிடத்தில் பாவக்கோள் நின்றால், முழுமை. சுபக்கோள் இருந்தால், பாதி, பதினோராம் இடத்தில் பாவக்கோள் நின்றால் பாதி, பதினோராமிடத்தில் சுபக்கோள் இருந்தால் நான்கிலொன்று, பத்தாமிடத்தில் பாவக்கோள் இருக்கில், மூன்றில் ஒன்று, அதே பத்தாமிடத்தில் சுபக்கோள் இருந்தால், ஆறில் ஒன்று என்றும் கணக்கிட்டுக்கொள்வர்.

## இதுவுமது

*பாக்கியத்திற் பாவர்நிற்கில் நாலிலொன்று கொள்வார்*
*பாங்கான சுபரிக்கில் எட்டிலொன்று கொள்வார்*
*வீக்குமெட்டில் பாவர்நிற்கில் ஐந்திலொன்று கொள்வார்*
*வீறுசுப ரேயிருக்கிற் பத்திலொன்று கொள்வார்*
*நோக்கரிய காமத்திற் பாவரே யிருக்கில்*
*றுவலுமோ ராறிலொன்று சுபரிருக்கிற் பாதி*
*ஆக்கமொடு கொள்வர்கிர கங்களே கூடி*
*ஆனபலத் தவர்க்குமாத் திரந்தன்னிற் கூட்டே. (385)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாமிடத்தில் பாவக்கோள் நின்றால், நான்கிலொன்று, அதே ஒன்பதா மிடத்தில் சுபக்கோள் நின்றால், எட்டில் ஒன்று, எட்டா மிடத்தில் பாவக்கோள் நின்றால் ஐந்தில் ஒன்று, அதே எட்டாமிடத்தில் சுபக்கோள் நின்றால், பத்தில் ஒன்று, ஏழாமிடத்தில் பாவக்கோள் நின்றால், ஆறில் ஒன்று, அதே ஏழாமிடத்தில் சுபக்கோள் நின்றால், பாதி என்றும் கணக்கிட்டுக்கொள்வர். கிரகங்கள் கூடி இருப்பின், பலம்பெற்றவர்களை மட்டும் கணக்கில் கொண்டு கூட்டிக்கொள்ள வேண்டும்.

## இலக்கன ஆயுர்தாயம்

*கூறரிய லக்கினஆ யுர்தாயந் தன்னை*
*கூட்டும்வகை யுதயரா சியிற்சென்ற கலையை*
*வீறுடைய இருநூற்றுக் கீந்ததொகை வருட*
*மிச்சத்தைப் பனிரண்டிற் பெருக்கிமுன்னர்க் கீய*
*பேறுடைய மாதமிச்ச நின்றதைமுப் பதிலே*
*பெருக்கிமுன்னர்க் கீயுநா ளாகுமிச்சந் தன்னை*
*மாறுமறு பதிற்பெருக்கி இருநூற்றுக் கீய*
*வரும்பெரிய கடிகைமிச்சம் விநாடியுந்தற் பரையே. (386)*

*(இ-ள்.)* இராசியில் சென்ற கலையை இருநூற்றில் வகுத்த ஈவு வருடம்,மீதியுள்ளதைப் பனிரண்டில் பெருக்கி, இருநூற்றில் வகுத்த ஈவு மாதம், மீதியுள்ளதை முப்பதில்

பெருக்கி, இருநூற்றில் வகுத்த ஈவு நாள். மீதியுள்ளதை அறுபதில் பெருக்கி இருநூற்றில் வகுத்த ஈவு நாழிகை. மீதி விநாடியும் தற்பரையுமாகும்.

இலக்கனத்தி லேபாவர் இருக்கினும்பார்க் கினுந்தான்
இலக்கனவா யுர்தாயம் பார்த்திடவே வேண்டாம்
அலக்கணுறும் பாவர்நிற்கச் சுபர்பார்க்கு மேனும்
அரிதான சுபரிருக்கப் பாவர்பார்த் தாலும்
துலக்கரிய சுபர்பாவர் கூடியிருந் தாலும்
தோணுமிவர் எதிர்நின்று கூர்ந்துபார்த் தாலும்
நிலைத்தபுடந் தனிற்பாதி கூட்டநல்லோர் நிற்க
நீடுசுபர் பார்த்தாலும் உள்ளபடி கூட்டே. (387)

(இ-ள்.) சென்ம இலக்கனத்தில் பாவக்கோள் இருந்தாலும், சென்ம இலக்கனத்தை பாவக்கோள் பார்த்தாலும் இலக்கன ஆயுர்தாயம் பார்க்க வேண்டியது இல்லை. சென்ம இலக்கனத்தில் பாவக்கோள் இருக்க, அதனை சுபக்கோள் பார்த்தாலும் அல்லது சென்ம இலக்கனத்தில் சுபக்கோள் இருக்க, அதனைப் பாவக்கோள் பார்த்தாலும், சென்ம இலக்கனத்தில் சுபக்கோளும் பாவக் கோளும் ஒன்றுகூடி இருந்தாலும், அல்லது பார்த்தாலும் புடம் தனில் பாதி கூட்டவேண்டும். சுபக்கோள்கள் நின்றாலும் சுபக்கோள்கள் பார்த்தாலும் உள்ளபடி கூட்ட வேண்டும்.

## இதுவுமது

தவமுடைய சிவஜந்மா விஷ்ணுகுரு புத்ரச்
சத்தியாசா நர்தெய்வ சாமிசித்த சேனன்
இவர்களனை வரும்வகுத்த வாயுர்தா யந்தான்
இரவிமுத லேழுகோ ளுக்குமகா திசைதான்
பவமிலா வருடநூற் றிருபதினில் ஒருவர்
பங்கொன்று கண்டுபதி னேழுதிங்க ளொன்று
திவசமிரு பத்திரண்டு கடிகையெட்டு நாழிகை
திகழ்முப்பா னாலுடன்தற் பரையுமிரு பதுவே. (388)

(இ-ள்.) தவத்திற் சிறந்த சிவஜந்மா, விஷ்ணு, குருபுத்ரன், சத்தியாசாஞர், தெய்வசாமி, சித்தசேனர் இவர்களெல்லாம் வகுத்த இந்த ஆயுர்தாயத்தில், சூரியன் முதல் ஏழு கோள்களுக்கும் வருடம் நூற்று இருபது. அதில் ஒருவர் பங்கு ஆண்டு பதினேழு; மாதம் ஒன்று; நாள் இருபத்து இரண்டு; கடிகை எட்டு; விநாழிகை முப்பத்து நான்கு; தற்பரை இருபதாகும்.

### இதுவுமது

இப்படியே திசையைவைத்துக் கொண்டுமுன்னோர் சொன்ன
இயற்கையுள்ள வானங்கள் யாவுமே செய்து
செப்பமுடன் தொகைகண்ட வருடத்தி னுடனே
சிரசுசுப மானலக்கி னாயுர்தா யந்தான்
ஒப்பமுடன் கூட்டும்வகை இலக்கனமே பலக்கில்
உயர்மேட முதற்சென்ற இராசிக்கோர் வருடம்
தப்பன்றிக் கூட்டுவதாம் இலக்கினாங் கிசமே
தான்பலக்கின் முன்சொன்ன வகையிற்கூட் டுவதே. *(389)*

(இ-ள்.) சென்ற பாடலில் கூறியபடி திசையை வைத்துக்கொண்டு, முன்னோர் கூறியுள்ளபடி கணக்கிட்டு கண்ட வருடத்துடன் இலக்கனாயுர்தாயம் கூட்ட வேண்டும். இலக்கனம் பலம்பெற்று இருக்க, மேட இராசி முதல் சென்ற இராசிக்கு ஓர் ஆண்டைக் கூட்டிக்கொள்ள வேண்டும். இலக்கனாங்கிசம் பலம்பெற்று இருக்க, முன்கூறிய வகையில் கூட்ட வேண்டும்.

ஆதித்தன் முதமேழு கிரகபுடந் தன்னை
அறிந்துவெவ் வேறாகவைத்தே யவரவர்கள் புடத்தைச்
சோதித்துக் கலையாக்கி இருநூற்றுக் கீந்தத்
தொகைவருடம் மிச்சத்தைப் பன்னிரண்டிற் பெருக்கிப்
பேதித்த விருநூற்றுக் கீந்ததொகை மாதம்
பின்புநின்ற சேடத்தை முப்பதிலே மாறி
போதியமுன் னர்க்கீயா நாளாமிச் சத்தை
உரைக்குமறு பதிற்பெருக்கு முன்போலீ வதுவே. *(390)*

(இ-ள்.) சூரியன் முதல் ஏழு கிரகங்களின் புடங்களை அறிந்துகொள்ள வேண்டும். ஒவ்வொருவரின் புடத்தையும் கலையாக்கி, இருநூற்றில் வகுத்து வரும் ஈவு வருடம் மீதியை பன்னிரண்டில் பெருக்கி, இருநூற்றில் வகுத்து வரும் ஈவு மாதம். மீதியை முப்பதால் பெருக்கி, இருநூற்றில் வகுத்து வரும் ஈவு நாள். மீதியை அறுபதில் பெருக்கி இருநூற்றில் வகுத்து வரும் ஈவு நாழிகை.

நாழிகையாம் மிச்சத்தை அறுபதிலே தாக்கி
நவிலுமுன்னர்க் கீவதுவே விநாடியாம் என்பார்
தாழியசே டந்தன்னை அறுபதிலே மாறிச்
சாற்று முன்னர்க் கீவதுதான் தற்பரையே யாகும்
வீழியதாம் வருடமுடன் மாதநாள் கடிகை
விநாடியொடு தற்பரையும் விளங்கவே கண்டு
வாழியாம் இராசிதனி லேயதுக ளைந்து
வந்தமிச்சந் தனிலரணம் வகுக்கும்வகை
சொல்வாம். (391)

(இ-ள்.) நாழிகை கண்டபின் வரும் மீதியை அறுபதில் பெருக்கி இருநூற்றில் வகுத்து வரும் ஈவு விநாடி என்பர். மீதியை அறுபதிலே பெருக்கி இருநூற்றில் வகுத்து வரும் ஈவு தற்பரையாகும். இவ்வாறாக வருடம், மாதம், நாள், நாழிகை, விநாழிகை, தற்பரை ஆகியவற்றைக் கண்டறிந்து, இராசி தனில் கழித்து வரும் மிச்சத்தில் அரணம் வகுக்க வேண்டும்.

உச்சத்தில் இருந்திடினும் இலக்கனமுற் றிடினும்
உள்ளதற்கு மும்மடங்கு கூட்டுவது முறையாம்
மிச்சமாம் சொட்சேந்திரஞ் சுயதிரே காணம்
விளம்புசுய வாங்சம்வர் கோத்தமன நவாங்கிசமும்
மச்சமன்றி யேயிருக்கில் இரட்டித்துக் கொள்க
அன்றியொரு கோளுச்சம் வக்கிரஞ்சேர்ந் தங்சம்
வைச்சசுய திரேகாணம் வர்க்கோத்த மாங்சம்
வாய்த்திருக்கு மேனுந்தான் கூட்டுதன்மும் மடங்கே. (392)

*(இ-ள்.)* உச்சத்தில் இருந்தாலும் இலக்கனத்தில் இருந்தாலும் மும்மடங்காக்கிக் கூட்டவேண்டும். சொந்த வீடு, சுய திரேகாணம், சுய அங்கிசம், வர்கோத்தமம், நவாங்கிசமும் குறையேதுமின்றி இருக்க இரண்டால் பெருக்கிக் கூட்டவேண்டும். ஒருகோள் உச்சம், வக்கிரம் சேர்ந்து அங்கிசம், சுய திரேகாணம், வர்கோத்தம், நவாங்கி சமும் வாய்க்கப்பெற்றால், மூன்றால் பெருக்கிக் கூட்ட வேண்டும்.

*அருங்காமம் முதல்வியமட் டிருந்தகோட் கெல்லாம்*
*அரணங்கள் செய்துபின்னோர் பலமறிந்து கூட்டல்*
*பொருந்தியமூ டந்தனிலும் நீசத்தி லேனும்*
*பொருந்தவர்தா னந்தனிலும் போயினதுற் றாலும்*
*திருந்துமர ணங்கள்தள்ளி நின்றதைக்கண் டறிந்தே*
*சிறந்தபல னறிந்துமுன்னோர் சொன்னபடி கூட்டி*
*இருந்தலக் கனபுடமும் முன்னோர்சொற் படியாம்*
*இவ்வகையிற் கணிலன்பலம் சொன்னதெலா*
*மாமால். (393)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடம் முதல் பன்னிரண்டாம் இடம்வரை இருந்த கோள்களெல்லாம் அரணங்கள் செய்து பின்னோர் பலமறிந்து கூட்டவேண்டும். மூடத்தில் இருந்தாலும், நீசத்தில் இருந்தாலும் அரணங் களைக் கழித்து, மீதியுள்ளதைக் கண்டறிந்து, கோள்களின் பலன் அறிந்து, முன்னோர் சொன்னபடி கூட்டி, இலக்கன புடமும் முன்னோர் சொன்னபடி கண்டு, சோதிடர்கள் ஆயுர்தாயத்தின் பலனைக் கூறுவார்கள்.

**எட்டாம்பாவம் முற்றிற்று.**



# ஒன்பதாம் பாவம்

## பிதுர் பலன்

நலத்தாம் உதய மூர்த்திக்கு
நவிலொன் பானுக் கிறைவன்தான்
பலத்தாற் பிதுர்பாக் கியமுடையன்
பிதாதான் பிறந்த இலக்கனத்துக்
கிலக்காய்ச் சட்ட மம்பிறக்கில்
இனிய பிதுர்க்குத் துவேசியதாய்
வலுத்கா ரமும்செய் சத்துருவாய்
மைந்த னாவான் மடமயிலே ! *(394)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாம் இடத்திற்கு அதிபதி பலமுடையவனாக இருப்பின், இச்சாதகன் தந்தை பாக்கியம் உடையவன். பிதா பிறந்த இலக்கனத்திற்கு ஆறாம் இலக்கனத்தில் சாதகன் பிறக்கில், இவன் தந்தையைக் குறை கூறுபவனாக இழிந்துரைப்பவனாக இருப்பான். காரகக் கிரகமும் அவ்வாறு இருப்பின் இச்சாதகன், தந்தைக்குப் பகைவனான மகனாவான் என்றவாறு.

## இதுவுமது

திவியிற் சனன மாயருக்கன்
சேரும் சலரா சியிலிருக்க
புவியில் செவ்வாய் தான்பார்க்கிற்
புதல்வன் சனன காலத்திற்
கவநம் பிதாவே தேசாந்திரம்
கருதி நிசியிற் சனனமுதற்
குவியும் சனியுமிப் படியிருக்கிற்
கூறும் பிதுர்த்தான் தேசாந்திரம் *(395)*

(இ-ள்.) சனன காலத்தில் சூரியன் சல இராசியில் இருக்க, இதனைச் செவ்வாய் பார்க்க, இச்சாதகன் பிறக்கின்ற காலத்தில் இவனுடைய தந்தை வேறுநாட்டில் இருப்பான்.

சந்திர இராசியில் சனி இருக்க, இச்சாதகன் பிறக்கும் சமயத்தில் இவனுடைய தந்தை தேசாந்திரம் சென்று இருப்பான்.

**இதுவுமது**

அருந்தும்பாக் கியத்து ளோனும்
அருக்கனும் சரரா சிக்கு
இருந்துதான் சராங்கி சத்தில்
ஏறிடில் பிதுர்தே சாந்திரம்
திருந்துபாக் கியன்பா னுக்கும்
சென்மஞ்சென் மத்தி னிற்கும்
வருந்துர்த் தான நிற்கின்
மகிழ்பிதா தேசாந் திரந்தான். *(396)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாம் இடத்திற்கு அதிபதியும் சூரியனும் சரஇராசியில் இருந்து சராங்கிசத்தில் ஏறி இருக்க, இச்சாதகனின் தந்தை, இவன் பிறக்கும் நேரத்தில் தூரதேசம் சென்றிருப்பான். ஒன்பதாம் இடத்திற்கு அதிபதி, சூரியனுக்கும் இலக்கனத்திற்கும் தீய இடங்களில் இருந்தால், இச்சாதகன் பிறக்கும்பொழுது, இவன் தந்தை தூரதேசம் சென்று இருப்பான்.

**இதுவுமது**

உயரும் தனம்தனக் குதயத்தோ னுக்கும்
சுயமுறும் உபயம் துர்த்தான மாகவே
பயனுறு பாக்கியன் பானு நின்றிடில்
அயர்விடம் திரமெனில் அகத்துள் தந்தையே. *(397)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்திற்கு அதிபதி, இலக்கனாதிபதி ஆகியோருக்கு இரண்டாமிடம் துர்த்தானமாக இருக்க, சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாம் இடத்தில் சூரியன் இருக்க, அது திர இராசியாக இருப்பின், இச்சாதகன் பிறக்கும்பொழுது தந்தை வீட்டிலேயே இருப்பான்.

## வெளிநாட்டில் சம்பாதிக்கும் தந்தை

அட்டமம் சரமே யாக
    அதற்குள்ளோன் சராங்சம் ஏற
விட்டபாக் கியனே பார்க்கில்
    இனியபி தாதே சாந்திரம்
வட்டமா மதிபொன் வெள்ளி
    வக்கிரன் இரவி கூடிற்
இட்டமாம் தந்தை தேசாந்
    திரத்தினில் செல்வன் மின்னே. *(398)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு எட்டாம் இடம் சர இராசியாக இருக்க, எட்டாமிடத்திற்கு அதிபதி சராங்கிசம் ஏற இவனை ஒன்பதாமிடத்திற்கு அதிபதி பார்க்க, இச்சாதகனின் தந்தை வெளிநாட்டில இருப்பான். பூரணச் சந்திரன், குரு, சுக்கிரன், செவ்வாய், சூரியன் ஆகிய ஐந்து கோள்களும் ஒன்றுகூடி ஒரு வீட்டில இருக்க, இச்சாதகனின் தந்தை வெளிநாட்டில் இருப்பான்.

## தந்தையைப் பகைப்பவன், தந்தைக்கு வஞ்சகம் செய்பவன்

ஞாயிறு திங்கள் செவ்வாய்
    நற்குறு வெள்ளி கூடில்
காயுறு பிதுர்து வேசி
    காரிரா குவுமொன் பானில்
ஆயுறக் கூடி நிற்கில்
    அருள்பிதுர்த் தோசம் என்பார்
ஓயுறா தாவி நீலன்
    உறில்பிதுர் வஞ்ச னாமே. *(399)*

*(இ-ள்.)* சூரியன், சந்திரன், செவ்வாய், சுக்கிரன் ஆகிய நான்கு கோள்களும் ஒன்றுகூடி இருப்பின், இச்சாதகன் தன் தந்தையைப் பகைப்பவனாக இருப்பான். சனியும், இராகுவும் ஒன்பதாம் இடத்தில் இருக்க, இச்சாதகன் தன் தந்தையைப் பகைப்பான். இலக்கனத்தில் சனி இருப்பின், இச்சாதகன் தன் தந்தைக்கு வஞ்சகம் செய்பவனாக இருப்பான்.

### நல்லசெயல்களைச் செய்பவன், தந்தையின் செல்வம் அழிவு

*கொண்ட கதிரொன் பதிலிருக்கக்*
*குளிகன் பவநன் மூன்றிநிற்கில்*
*கண்ட பிதாவின் வழிசுபர்*
*கன்மி யாவன் கதிர்நாலில்*
*அண்டி இருக்கக் கடும்பாவர்*
*அடுத்துப் பார்க்கின் பிதாவினுடன்*
*உண்டாங் கிருந்த பழைமனையும்*
*உள்ள தனமும் நாசமதே.* *(400)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாம் இடத்தில் சூரியன் இருக்க, குளிகன் பவனன் மூன்றாமிடத்தில் இருக்க, இச்சாதகன், தந்தையின் வழியில் சுபகர்மங்களைச் செய்பவனாக இருப்பான். நான்காமிடத்தில் சூரியன் இருக்க, பாவக்கோள்கள் இவனைப் பார்க்க, இச்சதாகனின் தந்தை கட்டியிருந்த பழையவீடும் அவன் சேமித்து வைத்த செல்வமும் அழிந்து போகும்.

### நோயுள்ள, பகைமை பாராட்டும் தந்தை

*நாசமி லாத பாக்கியத்தில்*
*நவிலும் சனிசேய் இரவிநிற்கில்*
*வாச முடைய பிதாரோகி*
*மருவும் ஏழில் குருவிருக்கப்*
*பேச வரும்ஒன் பதில்ஐந்தில்*
*பெரிதாம் பாவர் இருந்தக்காற்*
*பாச மாகிப் பயந்தபிதா*
*பகையாம் துதோஷி ஆகுவனே.* *(401)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாம் இடத்தில் சனி, செவ்வாய், சூரியன் இருக்க, இச்சாதகனின் தந்தை நோயுள்ளவராக இருப்பார். சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் குரு இருக்க, ஒன்பதாமிடத்திலும் ஐந்தா மிடத்திலும் பாவக்கோள்கள் இருந்தால், பாசத்தோடு வளர்ந்த

இச்சாதகனின் தந்தை தன் மகனிடம் பகைமை பாராட்டு பவனாகவும் அவனைத் தூற்றித்திரிபவனாகவும் இருப்பான்.

**செல்வன்**

உத்திரம் ரேவ திக்கு
உயர்வெள்ளி இருக்கு மேனும்
சித்தியாம் விசாக நல்லுத்
திராடத்திற் குருநின் றாலும்
புந்திசேர் பூரா டத்தில்
புதன்செவ்வாய் இருக்கு மேனும்
மத்திபம் பூரட் டாதி
மால்கேட்டை இரவிக்குச் செல்வம். *(402)*

*(இ-ள்.)* உத்திரம், இரேவதி நட்சத்திரக் கால்களில் சுக்கிரன் இருந்தாலும், விசாகம், உத்திராட நட்சத்திரக் கால்களில் குரு நின்றாலும் பூராட நட்சத்திரக் கால்களில் புதன், செவ்வாய் இருந்தாலும் பூரட்டாதி நட்சத்திரக் கால்களில் சூரியன் இருந்தாலும் இச்சாதகனுக்குச் செல்வம் சேரும்.

**வாலிப வயதில் செல்வன்**

விரும்பிய இலக்க னத்தில்
வெள்ளிதான் புதன்தான் நிற்கில்
திருந்திய நாலில் பாவர்
சேரில்வா லிபத்தில் செல்வர்
மருந்திய வியத்தில் இராகு
வரினுமுதயம் மிதுனம் கன்னி
பொருந்திய செவ்வாய் நிற்கில்
புவியில்பாக் கியவான் மின்னே. *(403)*

*(இ-ள்.)* ஜென்ம இலக்கனத்தில் சுக்கிரனும் புதனும் கூடி இருக்க, இலக்கனத்திற்கு நான்காமிடத்தில் பாவக் கோள்கள் இருக்க, இச்சாதகன் வாலிப வயதில் செல்வனாக்

இருப்பான். சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டாமிடத்தில் இராகு இருக்க, இலக்கனத்தில், மிதுனத்தில் அல்லது கன்னியில் செவ்வாய் இருக்க, இச்சாதகன் அனைத்துப் பாக்கியங்களையும் உடையவனாகத் திகழ்வான்.

**பாக்கியவான்**

சாமிதான் சுபனே யாகிச்
சதிருடன் சுபரைக் கூடித்
தோமில்வர்க் கோத்த மத்தில்
சொலுமுச்சம் ஆட்சி நிற்கிற்
பூமியும் கேந்திரம் ஏறப்
பொன்னவன் உதயம் நிற்கிற்
சேமிய சனனம் தொட்டே
சிறந்தபாக் கியவா னாவான். (404)

(இ-ள்.) சென்ம இலக்கனாதிபதி சுபக்கோளாகி, சுபக் கோளுடன் கூடி வர்க்கோத்தமம் பெற்று உச்சம் அல்லது ஆட்சி வீட்டில் நிற்க, செவ்வாயும் கேந்திரத்தில் ஏற, குரு இலக்கனத்தில் நிற்க, இச்சாதகன் பிறந்த நேரம் முதல் அனைத்துப் பாக்கியங்களையும் பெற்று சிறப்புடன் வாழ்வான்.

**இதுவுமது**

வாசிய உதயம் லாபம்
வியத்தினிற் சுபரி ருக்கப்
பேசிய சாமி தானே
பலத்துகேந் திரத்தி லாக
வாசிலாக் குருவு திக்கில்
இளையவா லிபத்தைத் தொட்டே
மாசில்பாக் கியவான் என்பர்
வரிவளைக் கையி னாளே. (405)

(இ-ள்.) வரிசையாக அடுக்கப்பட்ட வளையல்களை அணிந்த அழகான கைகளையுடைய பெண்ணே ! சென்ம இலக்கனம், பதினோராமிடம், பன்னிரண்டாமிடம் ஆகிய

இடங்களில் சுபக்கோள்கள் இருக்க, இலக்கனாதிபதி பலவானாகி கேந்திரங்களில் இருக்க, அதில் குரு இருக்க, இச்சாதகன் வாலிப வயது தொடங்கி, அனைத்து பாக்கியங் களையும் உடையவனாக விளங்குவான்.

**இதுவுமது**

பாவரைச் சாமி கூடிப்
பரிந்துலக் கனத்தில் நிற்க
தாவரும் தனத்தான் மிக்கச்
சலராசி யாய தற்குட்
பூவருஞ் சலக்கோ ளோடு
புரியுநற் கோளே நிற்கில்
ஏவரும் வாலி பந்தொட்
டெய்துபாக் கியவா னாமே. *(406)*

*(இ-ள்.)* இலக்கனாதிபதி பாவக்கோளோடு ஒன்றுகூடி சென்ம இலக்கனத்தில் இருக்க, இரண்டாம் இடத்திற்கு அதிபதி சல இராசியாக, சலக்கோளோடு சுபக்கோள்கள் சேர்ந்து நிற்கில், இச்சாதகன், வாலிபம் முதலாக மிகுந்த பாக்கியங்களைப் பெற்ற பாக்கியவானாக விளங்குவான்.

**இதுவுமது**

அடுத்தபாக் கியத்தா னோடே
யாத்துமத் திறைவன் கூடி
எடுத்ததோர் உதயம் ஒன்பான்
இருந்திட வியாழன் பார்க்கிற்
படுத்திடா நெடுங்கா லந்தான்
பாக்கிய வானே யாவன்
வடுத்தவிர் கணித நூலோர்
வகுத்துரை செய்த வாறே. *(407)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாமிடத்திற்கு அதிபதியுடன் இலக்கனாதிபதி கூடி இருக்க, இலக்கனத்தில்

ஒன்பதாம் இடத்திற்கு அதிபதி இருக்க, இவனைக் குரு பார்க்கில், இச்சாதகன், நெடுங்காலம் பாக்கியவானாக வாழ்வான் என்று குற்றமற்ற சோதிட நூல்களை ஆய்ந்தறிந்த வல்லுநர்கள் வகுத்துரைத்துக் கூறியுள்ளார்கள்.

**செல்வன்**

*விரவிய இரண்டு கேந்திரம்*
*வீரிலாப் பாவர் நிற்கத்*
*துரமிகு பாவர் பார்க்கச்*
*சுபர்நிற்கச் சுபரே பார்க்க*
*மரபுண்மூர்த் தியன்பெ லக்கின்*
*மத்திபம் தொட்டுச் செல்வம்*
*கரதலாம் அலகம் என்னக்*
*கணிதநூ லுரைத்த வாறே.* *(408)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்தின் இரண்டு கேந்திரங் களில் பாவக்கோள்கள் நிற்க, அவர்களைப் பாவக்கோள் பார்க்க, அல்லது சுபக்கோள் நிற்க, அவர்களைச் சுபக்கோள் பார்க்க, இலக்கனாதிபதி பலவானாக விளங்க, இச்சாதகன் தன்னுடைய மத்திய வயது முதல் செல்வம் மிக்கவனாக விளங்குவான் என்று சோதிடநூல் வல்லநர்கள் உரைத் துள்ளார்கள்.

*கோலிய இலக்க னத்திற்*
*குறிப்பொடு நற்கோள் எய்த*
*மூவிய தனத்தோன் கேந்திரம்*
*உற்றிட சாமி தானும்*
*மேவியல் பாவர் தானும்*
*மிகுபலம் பெற்றி ருக்கில்*
*வாலிப மட்டும் செல்வம்*
*மயிலன்ன சாய ளாளே!* *(409)*

*(இ-ள்.)* மயிலை ஒத்த சாயலைக் கொண்ட பெண்ணே! சென்ம இலக்கனத்தில் சுபக்கோள் இருக்க, இரண்டா

மிடத்திற்கு அதிபதி கேந்திரங்களில் இருக்க, இலக்கனாதிபதி யுடன் பாவக்கோளும் சேர்ந்து பலம்பெற்று விளங்கில், இச்சாதகன் பிறந்தது முதல் வாலிப வயதுவரை செல்வனாக விளங்குவான்.

### நடுவயதில் செல்வன்

*மீபுரா உதயம் சாமி*
*மிகுசுபர் உடன்ப லத்துக்*
*கோபுராங் கிசத்தில் நிற்கக்*
*குறைவிலா வெள்ளி தானே*
*ஏபுராத் தெய்வ லோகாங்*
*கிசத்தினில் இருப்பா னாயின்*
*மாபுராக் கியன்பொ ருட்டான்*
*மத்திப வயதிற் செல்வம்.* *(410)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்தில் இலக்கனாதிபதி இருக்க, அவருடன் சுபக்கோள் பலத்துடன் நிற்க கோபுராங் கிசத்தில் நிற்க, சுக்கிரன் தெய்வலோகாங்கிசத்தினில் இருக்க, இச்சாதகன் தன்னுடயை மத்திய வயதில் செல்வத்தைப் பெறுவான்.

### முப்பதாவது வயதில் செல்வன்

*இயலும் சாமி இருந்திடும் அங்கிசம்*
*நயமி லாபத் ததிபதி கேந்திரம்*
*குயமி குந்திரி கோணத் திருந்திடில்*
*வயது முப்பதில் வந்திடும்பாக் கியமே.* *(411)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனாதிபதி இருந்திடும் அங்கிசத்தில் இருக்க, பதினோராம் இடத்திற்கதிபதி கேந்திரம் அல்லது திரிகோணத்தில் இருக்க, இச்சாதகனுக்கு முப்பதாவது வயதில் அனைத்துப் பாக்கியங்களும் கிடைக்கும்.

**இதுவுமது**

உதயமே சுபராசி யாகஉத யத்தோன்
உற்றசுப னானவன்நட் பாயுச்சம் சேரில்
சிதைவில்கேந் திரமாகிக் கோபுராங் கிசமாய்ச்
சீரான வெள்ளிபொன்னுஞ் சிறப்பாகப் பெலக்கில்
இதயமுற்றுப் பதினாறு வயதுமுதற் செல்வம்
இலக்கனத்தன் சுபருடனே இனிதாகக் கூடிப்
பகையிலாக் கோபுராங் கிசமேறி இருக்கிற்
பதினாறு வயதுமுதற் பாக்கியவா னாமே. *(412)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனம் சுப இராசியாக, சென்ம இலக்கனாதிபதி சுபக்கோளாக இருக்க அவன் நட்பு, உச்ச வீடுகளைச் சென்று சேர்ந்திருந்தாலும், கேந்திரமாகி கோபுராங் கிசத்தில் இருப்பினும் சுக்கிரனும் குருவும் பலம் பெற்று இருந்தாலும் இச்சாதகன் பதினாறு வயது முதல் செல்வனாக விளங்குவான். சென்ம இலக்கனாதிபதி சுபக்கோளுடன் சேர்ந்து கோபுராங்கிசம் ஏறி இருக்க, இச்சாதகன் பதினாறு வயது முதல் செல்வனாக விளங்குவான்.

**இதுவுமது**

சாற்றும் சுவாமியும் சுவாமிப் பவனனும்
மேற்றம் மீறிய இலாபத் திருந்திடின்
மாற்றம் இன்றி வயதொரு முப்பதிற்
பாற்று கந்திட பாக்கியம் எய்துமே. *(413)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனாதிபதியும், இலக்கனாதிபதி இருந்த இராசிக்கதிபதியும் பதினோராமிடத்தில் இருந்தால், இச்சாதகன் தன்னுடைய முப்பதாவது வயதில் அனைத்துப் பாக்கியங்களையும் பெற்றவனாக விளங்குவான்.

### செல்வம் வரும் காலம்

நாலுக் குடையோன் சுபருடனே
நயந்து கூடில் அவன்திசையில்
கோலும் பொசிப்பிற் சித்திரத்திற்
குலவும் செல்வம் வருமிவனே
ஏலும் பாவர் உடன்கூடில்
திசையந் தத்திற் செல்வமெய்தும்
பாலும் தேனும் முக்கனியும்
பாகும் கலந்து பனிமொழியே. *(414)*

(இ-ள்.) பாலையும், தேனையும், முக்கனிகளின் சாற்றையும், சர்க்கரைப் பாகையும் ஒன்று கலந்தது போன்ற இனிமையையும் குளிர்ச்சியையும் உடைய மொழியினைப் பேசும் பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்கு நான்கா மிடத்திற்கு அதிபதி சுபக்கோளுடன் ஒன்றுகூடில், அவனுடைய திசையில், புத்தியில், அந்தரத்தில் இச் சாதகனுக்கு செல்வம் வந்து சேரும். நான்காம் இடத்திற்கு அதிபதியுடன் பாவக்கோள் சேர்ந்திருக்க அவனுடைய திசையின் இறுதியில் செல்வம் வந்து சேரும்.

### பாக்கியவான்

சரமுதய மாகவே சாமிதான் இருந்து
சரக்கிரகம் பார்க்க
உரமிகு சஞ்சார மதிற்பாக் கியனாய்
புகர்தேவ லோகாங்சத்தில்
விரவிநிற்க உபயத்தோன் கோபுராங்ச மாக
மிகுந்த நல்லோர்
பரவுதயம் தனிலிருக்கிற் பாதிவய திற்படைப்பன்
பாக்கியம் தானே. *(415)*

(இ-ள்.) சென்ம இலக்கனமாக சர இராசி இருக்க, அதில் இலக்கனாதிபதி இருக்க, அதனைச் சரக்கிரகம் பார்க்க, இச்சாதகன் பாக்கியவானாக விளங்குவான். சுக்கிரன்

தேவலோகாங்கிசத்தில் நிற்க, இரண்டாமிடத்திற்கு அதிபதி கோபுராங்கிசமாக இருக்க, இதனைச் சுபக்கோள் பார்க்க, இலக்கனத்தில் இருக்க, இச்சாதகன் மத்திய வயதிற்குமேல் அனைத்துப் பாக்கியங்களையும் பெற்றவனாக விளங்குவான்.

**இதுவுமது**

ஒன்பது நாலுக் குடையவர்
கூடி ஒருநாளில்
அன்பொடு நிற்கிற் பாக்கிய
வானாம் அணியாகத்
துன்பமில் நாலில் ஒன்பதில்
உச்சம் துடியாகி
இன்புகழ் வாலையில் அன்புறு
செல்வன் இவனாமே. *(416)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாமிடம், நான்காமிடம் ஆகியவற்றிற்கு அதிபதிகள் ஒன்றுகூடி நான்காமிடத்தில் இருக்க இச்சாதகன், பாக்கியவானாக விளங்குவான். நான்காமிடத்தில் ஒன்பதாமிடத்தில் நான்காமிடத்திற்கு அதிபதியும் ஒன்பதாம் இடத்திற்கு அதிபதியும் இருக்க, இச்சாதகன், சிறுபருவம் முதல் செல்வனாக விளங்குவான்.

**ஒன்பதாம் பாவத்தில் சூரியன் நின்ற பலன்**

தூயபாக் கியத்தில் இரவிதான் இருக்கிற்
துராசையன் பாவர்சிந் தையனாம்
ஆயுறு மைந்தர் மித்திரர்க் கினியர்
அந்தணர் தேவாத பக்தி
ஏயுறு மனத்தன் தனத்தினன் செல்வம்
இயல்பிதா குருவுக்கும் தோஷம்
ஞாயமாம் பிதுர்க்குத் தோஷியல் லாது
நவில்குரு பகைஞனும் அவனே. *(417)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாம் இடத்தில் சூரியன் இருக்க, இச்சாதகன் தீய ஆசைகளை உடையவனாகவும், பாவ எண்ணங்களைக் கொண்டவனாகவும் இருப்பான். பிள்ளைகளுக்கும் நண்பர்களுக்கும் இனியவன்; அந்தணர், இறைவன் போன்றோரிடத்து அன்புடையவனாக இருப்பான். செல்வம் உடையவன். தந்தைக்கும் குருவுக்கும் தோஷம் உண்டாகும். தந்தைக்குத் தோஷத்தோடு குருவுக்குப் பகைவனாகவும் இவன் விளங்குவான்.

**ஒன்பதாம் பாவத்தில் சந்திரன் நின்ற பலன்**

*பேதமிம் பாக்கி யத்திற்*
*பிறைநிற்கில் தெய்வ பக்தி*
*தாதவிழ் பாக்கி யத்தன்*
*தனஞ்சுகம் புத்ர மித்ராள்*
*பேதமில் தனக்கும் ஈன்ற*
*பிதாவுக்கும் தீர்க்கம் உள்ளோன்*
*சீதளக் குணனு தாரன்*
*திரிமோகன் பரஸ்திரி மோகன். (418)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாம் இடத்தில் வளர்பிறைச் சந்திரன் இருக்க, இச்சாதகன் அனைத்துப் பாக்கியங்களையும் உடையவன், செல்வம் மிக்கவன்; சுகவான்; புதல்வர்கள் நண்பர்கள் அதிகம் உள்ளவன். தீர்க்காயுள் உடையவன்; இவனுடைய தந்தைக்கும் தீர்க்காயுளாகும் நல்ல குணம் உடையவன்; தாராள மனம் படைத்தவன்; பெண்கள் விருப்பம் மிக்கவன்; பிற பெண்களை விரும்பக் கூடியவன் என்றவாறு.

**ஒன்பதாம் பாவத்தில் செவ்வாய் நின்ற பலன்**

*திகழ்பாக் கியத்தில் சேயிருக்கிற்*
*செல்வ நாசம் பிதுர்த் தோஷம்*
*தகமை இலாதான் துர்க்கன்மி*
*சகல சனநிந் தைகளுடையன்*

சுகமாம் துணைவர் தங்களுக்கும்
தோடம் பிதுர்க்கும் குருவுக்கும்
பகரும் பசும்பொற் குரும்பையெனப்
பசலைப் பூத்த பணை முலையே ! (419)

(இ-ள்.) பசுமையான பொன்னால் செய்யப்பட்ட குரும்பையைப் போன்று பசலை பூத்த பெரிய முலைகளை யுடைய பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாம் இடத்தில் செவ்வாய் இருக்க, இச்சாதகனின் செல்வம் அழியும், தந்தைக்குத் தோஷம் உண்டாகும்; நல்ல குணம் இல்லாதவன்; தீயச்செயல்களைச் செய்பவன்; பலருடைய நிந்தனைக்கும் ஆளாகக்கூடியவன்; இளைய சகோதரர் களுக்கும், தந்தைக்கும், குருவுக்கும் தோடம் உண்டாகும்.

**ஒன்பதாம் பாவத்தில் புதன் நின்ற பலன்**

மாலயன் பாக்கியம் மருவிற் கீர்த்தியும்
சாலநல் வாக்குடன் சமர்த்தும் வித்தையும்
சீலமும் தன்மத்தில் சிந்தையும் உள்ளவன்
ஞாலமேற் றனமுளோன் நளின மங்கையே ! (420)

(இ-ள்.) தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளை ஒத்த பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாமிடத்தில் புதன் இருக்க, இச்சாதகன் புகழ்மிக்கவனாக விளங்குவான். நல்ல வாக்கு உடையவன்; சாமர்த்தியம் மிக்கவன்; வித்தையில் சிறந்தவன். தர்ம சிந்தனை உடையவன்; இவ்வுலகில் செல்வம் மிக்கவனாகத் திகழ்பவன்.

**ஒன்பதாம் பாவத்தில் குரு நின்ற பலன்**

பூட்டியபாக் கியமதனிற் குருவிருக்கிற் றூயமந்திரி
புகழும் ஞானத்
தாட்டிகன் மன்னவர்சேவை ராசசமா னன்சீலன்
சபைக்குள் வல்லோன்

*நாட்டியபாக் கியமுடையன் வேதியரால் மன்னவரால்*
*நயந்த இலாபம்*
*கூட்டியசம புருடனா சாரியெனன் றுரைத்திடுவர்*
*குறிப்பு ளோரே. (421)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாமிடத்தில குரு இருக்க, இச்சாதகன் மந்திரியாக விளங்குவான்; அனைவராலும் புகழப்படும் ஞானம் மிக்கவன்; அரசனிடம் சேவை செய்பவன்; மன்னனுக்கு நிகரான புகழ் உடையவன்; அனைத்துப் பாக்கியங்களையும் பெற்றவன்; அந்தணர் களாலும் மன்னராலும் பொருள் வருமானம் உடையவன்; ஆசாரியனாக விளங்குவான்.

**ஒன்பதாம் பாவத்தில் சுக்கிரன் நின்ற பலன்**

*வீசியபாக் கியமதனில் வெள்ளிநிற்க தீர்க்காயுள்*
*வித்தை ரூப*
*பாசில்களத் திரத்திரியால் அதிகபாக் கியவான்*
*தருமவான் சிந்தை*
*பேசியசொற் சோராதான் தெய்வகா ரியபத்தி*
*பேருண் டானோன்*
*மாசில்சனக் கூட்டுறவு உபாயமுதா ரம்புதல்வர்*
*வாய்ப்புள் ளோனே. (422)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாம் இடத்தில் சுக்கிரன் இருக்க, இச்சாதகனுக்குத் தீர்க்காயுள். வித்தைகளை நன்கு அறிந்தவன்; அழகன்; மனைவியால் அதிக பாக்கியங் களைப் பெறுபவன்; சொன்னசொல் மாறாதவன்; தெய்வ காரியங்களைச் செய்பவன்; நல்ல பெயர் உடையவன். குற்றமற்ற சனங்களிடம் நட்புறவு கொள்பவன். நல்ல வழிகளை அறிந்தவன். தாராள மனம் கொண்டவன். புதல்வர்களைப் பெற்றவன்.

### ஒன்பதாம் பாவத்தில் சனி நின்ற பலன்

மன்னியபாக் கியந்தனிலே சனியனே இருக்கில்
விரும்பிதுர்ப்பாக் கியம்தனக்குத் தோடமே உண்டாம்
அன்னியரால் நீசரால் ஆளடிமை செல்வம்
அலைச்சலாம் பிரசித்தன் கலகிதரித் திரனாம்
தன்னிகர்புத் திரவீனன் பந்துசன வீனன்
சனத்துரோகி சகலசனத் துவேசிதுக்கம் உள்ளோன்
பன்னியசோ தரவீனன் சனநிந்தை உடையன்
பாவசிந்தை உளன்கிரக விரோதனெனப்
பகர்வார். *(423)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாம் இடத்தில் சனி இருக்க, இச்சாதகன் தந்தை பாக்கியம் உடையவன். தனக்குத் தோஷம் உடையவன். அந்நியரால், தீயோரால் துன்பம் உடையவன். அலைச்சலைப் பெற்றவன். பணியாட்களைக் கொண்டவன். செல்வன் கலகம் செய்பவன். வறுமையும் அடைவான்; புத்திரர்க்கு அழிவு உண்டு. உறவினர்களிடமும் உற்றாரிடமும் பகைமை பாராட்டுபவன். சகோதர தோஷம் உடையவன். துக்கம் உடையவன், உறவினர்களால் ஏசப்படுபவன். பாவசிந்தையைக் கொண்டவன். குடும்பப் பகைவன் என்று கூறுவர்.

### ஒன்பதாம் பாவத்தில் இராகு நின்ற பலன்

மிக்கபாக் கியமதனில் இராகு நிற்கின்
மாந்திரீக வித்தை தன்னாற்
தக்கதோர் விகட கவிப்பிர சங்கத்
தாலுமே தனமுண் டானோன்
பக்கமருங் கீர்த்தி பதவார்த்தை யிற்பிரியன்
செல்வன் தான் என்றே சொல்வான்
முக்கியமாம் செகமீதிற் பிதாகுரு துவேஷியென
மொழிய லாமே. *(424)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாம் இடத்தில் இராகு இருக்க, இச்சாதகன் மாந்திரீக வித்தை, விகடப் பிரசங்கம் ஆகியவற்றால் பொருள் வரவு உடையவன். புகழுடையவன்; பேசுவதில் வல்லவன்; செல்வன்; தந்தையையும், குருவையும் துவேஷிப்பவனாக இருப்பான்.

**ஒன்பதாம் பாவத்தில் கேது நின்ற பலன்**

*பிரியமுள்ள பாக்கியத்திற் கேதுநிற்கிற் களத்திரத்தைப்*
*பெற்றோனுக்கும்*
*சிறியதகப் பனுக்குந்தான் தோடம்வாச் சலகனாம்*
*தீரன் கோபி*
*நெறியிலாப் பாவபுத்தி சுரதவித்தை சோர*
*வித்தை நீசவித்தை*
*அறிவினால் தனமுடையன் பிதுர்பகைவன் ஆசாரன்*
*அலங்காரன் தானே.* *(425)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாமிடத்தில் கேது நின்றால், மனைவியைப் பெற்ற தந்தைக்கும் சிறிய தந்தைக்கும் தோஷமாகும். பேச்சில் வல்லவனாக இருப்பான். தைரியசாலி; கோபம் உடையவன்; பாவ எண்ணம் கொண்டவன். தீய செயல்கள், தரக்குறைவான செயல்கள் சுரதவித்தை போன்றவற்றால் செல்வம் பெறுவன்; தந்தைக்குப் பகைவனாக விளங்குவான்; ஆசாரங்களைப் பின்பற்றுபவன். அலங்காரப் பிரியன்.

**ஒன்பதாம் பாவத்தில் குளிகன் நின்ற பலன்**

படைத்தபாக் கியத்தில் குளிகனே நிற்கிற்
பாவிவஞ் சகனா சாரன்
தடைப்பாக் கியனாம் பிதுர்குரு துவேஷி
சொலுமாந் திபவனன் பாக்கியத்தில்

அடைத்திடில் பிதாவின் வழிதுக்கம் தோஷம்
ஆகுமொன்ப தனிலா றுடையோன்
தடைப்படா இரவியைக் கூடியே நிற்கில்
சாற்றுந் தாதாவெ னுஞ்சகமே. (426)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாமிடத்தில் குளிகன் இருக்க, இச்சாதகன், பாவங்களைச் செய்பவன்; வஞ்சகன், அனாசாரனாவான். பாக்கியவானாக விளங்குவான். தந்தையையும் குருவையும் இழிவுபடுத்துபவன். மாந்தி நிற்கும் வீட்டின் அதிபதி ஒன்பதாமிடத்தில் இருக்க, தந்தையின் வழியால் துக்கம் உண்டாகும். தோடம் உள்ளவன். ஒன்பதாமிடத்தில் ஆறாமிடத்திற்கு அதிபதி சூரியனைக் கூடி இருந்தால், தாதா என்று இவ்வுலகம் கூறும்.

**சகிதாதிய பலன்**

பன்னுமொன் பதனிற் சேய்புதன் நிற்கப்
பார்த்திடில் யாகமே செய்வன்
தன்னிகர் மதியும் புதனுமே நிற்கில்
தனமுளன் தருமசிந் தையனாம்
என்னுமொன் பதனில் அட்டமா திபனே
இருந்திடிற் பழையபாக் கியனாம்
கன்னுறு மிரண்டில் வெள்ளிதான் இருக்கில்
காரிய சமர்த்தனென் றுரைப்பர். (427)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாம் இடத்தில் செவ்வாய், புதன் நிற்க அல்லது ஒன்பதாமிடத்தைப் பார்க்க, இச்சாதகன் யாகம் செய்வான். ஒன்பதாமிடத்தில் சந்திரனும் புதனும் இருக்க, இச்சாதகன் செல்வன், தரும சிந்தனை உடையவன். ஒன்பதாமிடத்தில் எட்டாமிடத்திற்கு அதிபதி இருக்க, இச்சாதகன் பாக்கியங்களை உடையவனாக இருப்பான். இரண்டாமிடத்தில் சுக்கிரன் இருந்தால், இச்சாதகன் செயல்களை நிறைவேற்றுவதில் திறமை உடையவன் என்று சொல்வார்கள்.

## இதுவுமது

சிங்கமதிற் சந்திரனேனுங் குருபார்க்கு மேனும்
செய்யகன்னி அம்புலியைப் புகர்நோக்கி னாலும்
பங்கமிலே ழாமிடத்திற் கிரகங்கள் ஏழும்
பரிந்துடனின் றாலும்மதி இரவியைக்கூ டிடினும்
துங்கமகி குசன்வெள்ளி இரவிகூ டிடினும்
சூரியனம் புலிசேய்பொன் தொடர்ந்துகூ டிடினும்
பொங்கமிகு சமர்த்தனென்பர் சுங்கன்மதி சேயைப்
பொன்பார்க்கிற் சதுர்த்தனெனப் புகலுவர்பொற்
கொடியே. *(428)*

(இ-ள்.) பொற்கொடி போன்று விளங்கும் பெண்ணே! சிம்ம இராசியில் உள்ள சந்திரனைக் குரு பார்த்தாலும், கன்னி இராசியில் உள்ள சந்திரனைச் சுக்கிரன் பார்த்தாலும், ஏழு கோள்களும் இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் இருந்தாலும், சந்திரன், சூரியனோடு கூடி இருந்தாலும், சந்திரன், செவ்வாய், குரு ஆகிய நான்கு கோள்களும் கூடி இருந்தாலும், இச்சாதகன் திறமை மிக்கவன். சுக்கிரன், சந்திரன், செவ்வாயைக் குரு பார்க்க இச்சாதகன், திறமையானவன் என்று கூறுவார்கள்.

## இதுவுமது

சொரிகதிர்சந் திரன்செவ்வாய் புதன்கூடி நின்றாற்
சொற்சுபகா ரியச்சமர்த்தன் சுங்கன்மதி செய்யோன்
அரிதெனவே கூடிநிற்கில் பாவகன்மன் சமர்த்தன்
ஆனகம னத்தானம் அம்புலிதான் நிற்கில்
பரிவுடனே தான்தொடுத்த காரியம்வி டாமற்
பண்பாக நிறைவேற்றுஞ் சமர்த்தனெனப் பகர்வார்
சரியுறுபாக் கியந்தனிலே அருக்கனே இருக்கிற்
தான்கொடுத்த நிறைவேறச் செய்குவன்தாழ்
குழலே. *(429)*

(இ-ள்.) நீண்ட கூந்தலை உடைய பெண்ணே! சூரியன், சந்திரன், செவ்வாய், புதன் ஆகிய நான்கு கோள்களும் கூடி இருந்தால், இச்சாதகன் சுபகாரியங்களைச் செய்வதில் திறமை உடையவன் சுக்கிரன், சந்திரன், செவ்வாய் ஆகிய மூன்று கோள்களும் ஒன்றுகூடி இருந்தால் இச்சாதகன் பாவ காரியங்களைச் செய்பவன்; திறமை கொண்டவன். ஏழாமிடத்தில் சந்திரன் நிற்க, தான் தொடங்கிய காரியத்தை நிறைவேற்றும் திறமை உடையவன்; ஒன்பதாமிடத்தில் சூரியன் இருக்க, இச்சாதகன் தான் நினைத்த காரியத்தை நிறைவேற்றக் கூடியவன்.

**ஒன்பதாம் பாவம் முற்றிற்று.**



# பத்தாம் பாவம்

## யாத்திரை

*சீரான ஒன்றேழில் இராகுவிருந் தாலும்*
*செய்யபத்தில் புதனிருக்க வியமதியுற் றாலும்*
*நேரான சாமிக்கு வியத்தோன்துர்ப் பலமாய்*
*நின்றாலும் இரவிமதி சனிகூடி னாலும்*
*தாரான இலக்கனமும் உதயநா யகனும்*
*சாற்றுமங்கி சாதிபரும் சரத்திலிருந் தாலும்*
*பேரான சரத்துடையோன் சுவாமிக்கே நட்பாய்*
*பேசுதயம் நின்றாலும் பரதேசவாசம். (430)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனம் அல்லது ஏழாமிடத்தில் இராகு இருந்தாலும், சென்ம இலக்கனத்திற்குப் பத்தாமிடத்தில் புதன் இருக்க, பன்னிரண்டாமிடத்தில் சந்திரன் இருந்தாலும், இலக்கனாதிபதிக்குப் பன்னிரண்டாம் இடத்தோன் துர்ப்பலமாக இருந்தாலும், சந்திரன், சூரியனுடன் சனி கூடி இருந்தாலும், இலக்கனமும், இலக்கனாதிபதியும், அங்கிசாதிபதியும் சர இராசியில் இருந்தாலும், சர இராசியாதிபதி இலக்கனாதிபதிக்கு நட்புடன் இருந்தாலும் இச்சாதகன் வேறு நாட்டிற்குச் செல்வான்.

## இதுவுமது

*சோதிபூ ராடமசு வினியிலிரா கிருக்கச்*
*சொல்லுமகம் பூசமதில் சனியிருக்கு மேனும்*
*மேதில்பூ ரட்டாதி ஆயிலியம் அதனில்*
*இராகுநிற்கச் சித்திரையில் சனியிருந்திட் டாலும்*
*மோதியபத் துடையோனும் அங்கிசத்து ளோனும்*
*ஓங்குசர ராசிதனில் உகந்திருக்கு மேனும்*
*கோதிலாச் சரராசி வியத்தில்பல மின்றி*
*கொடும்பகைஞ ருடன்சாமி கூடில்பர தேசம். (431)*

(இ-ள்.) சுவாதி, பூராடம், அசுவனி நட்சத்திரக் கால்களில் இராகு இருக்க, மகம், பூச நட்சத்திரக் கால்களில் சனி இருந்தாலும் பூரட்டாதி, ஆயிலிய நட்சத்திரக் கால்களில் இராகு இருக்க, சித்திரை நட்சத்திரக்காலில் சனி இருந்தாலும், பத்தாமிடத்திற்கு அதிபதியும் அவன் அங்கிசத்தில் இருப்பவனும் சர இராசியில் இருந்தாலும் சர இராசி அல்லது பன்னிரண்டாமிடத்தில் பலமின்றி பாவக்கோளுடன் இலக்கனாதிபதி கூடி இருந்தாலும் வேறு நாட்டிற்குச் செல்வான்.

## இதுவுமது

*சதிராய் ஏழு கிரகமுந்தான்*
*சரரா சியினில் இருந்திடினும்*
*எதிராய்ப் பத்தாம் இடந்தனிலே*
*ஏழு கோளும் இருந்தாலும்*
*பதியாய் வியத்தோன் சரத்தினிற்கப்*
*பரிவே டம் சூழ் மதிபார்க்கில்*
*நிதிதான் வேண்டி வெகுதூரம்*
*நெடுநாட் டிரிவனே நேரிழையே! (432)*

(இ-ள்.) நேரிய இழைகளாலான ஆபரணங்களை அணிந்த பெண்ணே! இராகு, கேதுக்களைத் தவிர ஏழு கோள்களும் சர இராசிகளான மேடம், கடகம், துலாம், மகரம் ஆகிய இராசிகளில் இருந்தாலும், சென்ம இலக்கனத்திற்குப் பத்தாம் இடத்தில் ஏழுகோள்களும் இருந்தாலும், பன்னிரண்டாம் இடத்திற்கு அதிபதி சர இராசியில் நிற்க, பரிவேடம் சூழ்ந்த சந்திரன் பார்க்க, பொருள் சம்பாதிப் பதற்காக, இச்சாதகன் நீண்ட தூரம் செல்வான்.

## இதுவுமது

*பரிவாம் வியத்தில் இராகுறினும்*
*பத்து நாலும் சரமாக*
*விரிவாய்ச் சனியன் இருந்திடினும்*
*வெள்ளி மதியி னுடன்கூடி*

அரிய கருமம் வியத்துரினும்
ஆன ராகு சனிநாலிற்
செரிய வரினும் குருவியத்திற்
சேரிற் தேசாந் திரமென்பார். (433)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டாம் இடத்தில் இராகு இருந்தாலும், பத்தாம் இடமும் நான்காம் இடமும் சர இராசியாக இருக்க, அதில் சனி இருந்தாலும், சுக்கிரன், சந்திரனுடன் கூடி பத்தாமிடம், பனிரண்டாம் இடத்தில் இருந்தாலும், இராகுவும் சனியும் நாலில் இருக்க, பனிரண்டாமிடத்தில் குரு இருக்க இச்சாதகன் நீண்ட தூரம் செல்வான்.

## இதுவுமது

கடகம் உதிப்ப ஆயிலியம்
கலந்த ராகு குருவிருக்கப்
படரும் ஐந்தில் ஒரெட்டில்
பானு இருக்கிற் தேசாந்திரி
அடரும் ஐந்தில் இராகிருக்க
வருண்மூர்த் திக்கு வியத்துடையோன்
தொடரும் பலமுற் றிடின்கரந்
துய்ய பரசஞ் சாரியனே. (434)

(இ-ள்.) சென்ம இலக்கனம் கடகமாக, ஆயிலிய நட்சத்திரக்காலில் இராகு, குரு இருக்க, ஐந்தாமிடம், எட்டா மிடம் இவற்றில் ஒன்றில் சூரியன் இருக்க, இவன் நாடு நாடாகச் செல்பவனாக இருப்பான். ஐந்தாம் இடத்தில் இராகு இருக்க, இலக்கனாதிபதியும், பனிரண்டாமிடம் இடத்திற்கு அதிபதியும் பலத்துடன் விளங்க, இச்சாதகன் மறைவாக வாழ்வதற்காக நாடு நாடாக அலைபவனாக இருப்பான்.

## தீர்த்த யாத்திரை செல்பவன்

வருமோர் பத்திற் சனியொழிய
மற்றோர் கூடி இருந்தாலும்
தருமா மதியும் புதன்வெள்ளி
சனிபொன் கூடி இருந்தாலும்
குருவெண் மதிசல் லியனருக்கன்
கூடு மேனும் குருமதியும்
ஒருமித் துறினும் இராசிரவி
உறினும் தீர்த்த யாத்திரையே. *(435)*

*(இ-ள்.)* ஜென்ம இலக்கனத்திற்குப் பத்தாம் இடத்தில், சனியைத்தவிர மற்றுள்ள சந்திரன், சூரியன், செவ்வாய், புதன், குரு, சுக்கிரன் ஆகிய ஆறு கோள்களும் இருந்தாலும், சந்திரன், புதன், சுக்கிரன், சனி, குரு ஆகிய ஐந்து கோள்களும் இருந்தாலும், குரு, வளர்பிறைச் சந்திரன், சுக்கிரன், சூரியன் ஆகிய நான்கு கோள்களும் ஒன்றுகூடி இருந்தாலும், குருவும் சந்திரனும் ஒன்றுகூடி இருந்தாலும், சந்திர இராசியில் சூரியன் இருந்தாலும் இச்சாதகன் புனித யாத்திரையை மேற் கொள்வான்.

## சுமைகளைச் சுமப்பவன்

பாரிய ஒன்று நாலிற்
பானுவே இருக்க ஏழிற்
காரியும் மகிழ்ந்து நிற்கக்
கருமத்தோன் பார்ப்பா னாகில்
வீரியம் பேசிக் கொண்டே
மிகுசுமை சுமப்பன் கண்டாய்
கூரிய வேற்கண் செம்பொற்
குடநிகர் தனத்தி னாளே! *(436)*

*(இ-ள்.)* வேல் போன்ற கூரிய கண்களையும் செம் பொன்னால் செய்யப்பட்ட செம்பொன்னாலாகிய குடத்தைப் போன்ற தனங்களையும் கொண்ட பெண்ணே!

சென்ம இலக்கனத்தில், நாலாமிடத்தில் சூரியனே இருக்க, ஏழாமிடத்தில் சனி இருக்க, இவனைப் பத்தாம் இடத்திற்கு அதிபதி பார்ப்பானாகில், இவன் மிகுந்த சுமைகளை சுமக்கக் கூடியவனாக விளங்குவான்.

## காடு, மலைகளில் அலைபவன்

மதிகுரு பானு வெள்ளி
மகிழ்ந்தொன்றாய்க் கூடி னாலும்
துதிசனி தவிர மற்றோர்
சுத்தமாய்க் கூடுற் றாலும்
எதிர்மாந்தி பவன னாலுற்
றிடவைந்தில் இராகுற் றாலும்
மதிர்காடு மலைவ னங்கள்
அதனிற்சஞ் சார னாமே. *(437)*

*(இ-ள்.)* சந்திரன், குரு, சூரியன், சுக்கிரன் ஆகிய நான்கு கோள்களும் ஒன்றாகக் கூடி இருந்தாலும், சனியைத் தவிர மற்ற ஆறு கோள்களும் (இராகு, கேதுக்களைத் தவிர) ஒன்றாகக் கூடி இருந்தாலும், மாந்தி பவனன் நான்காமிடத்தில் இருக்க ஐந்தாமிடத்தில் இராகு இருந்தாலும், காடுகள், மலைகள் என பல்வேறு இடங்களிலும் இச்சாதகன் அலைந்து திரிவான்.

## இதுவுமது

கூறு திங்கள் குருசனி கூடினும்
வீறு சந்திரன் வெள்ளியும் கூடினும்
சீறு பொன்புதன் சேய்கதிர் கூடினும்
நாறு தண்பொன் நகரில்சஞ் சாரனே. *(438)*

*(இ-ள்.)* சந்திரன், குரு, சனி ஆகிய மூன்று கோள்களும் ஒன்றாகக் கூடி இருந்தாலும் சந்திரனும் சுக்கிரனும் ஒன்று கூடி இருந்தாலும் குரு, புதன், செவ்வாய், சூரியன் ஒன்றுகூடி இருந்தாலும் இச்சாதகன், குளிர்ந்த பொன்போல் பொலிகின்ற நகரில் சஞ்சாரம் செய்பவனாக விளங்குவான்.

## இதுவுமது

*ஆழு மூன்றில் அருக்கன் இருந்திட*
*வாழும் ஐந்தினில் வக்கிரன் தானுறச்*
*சூழும் ஏழினிற தூய்புதன் நிற்கினும்*
*நாழும் சொந்த நகரில்சஞ் சாரனே. (439)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில் சூரியன் இருக்க, ஐந்தாமிடத்தில் செவ்வாய் இருக்க, ஏழாமிடத்தில் புதன் நின்றாலும், இச்சாதகன் தன் சொந்த நகரிலேயே ஓரிடத்தில் நிலையாக இல்லாமல் சுற்றிக் கொண்டு இருப்பான்.

## இதுவுமது

*வெய்ய கருமந் தனிலேநல்*
*வெள்ளி செவ்வாய் கூடிடினும்*
*மைய மிலாத ஒன்றேழில்*
*ஆதித் தன்தான் நின்றிடவே*
*துய்ய பத்து ளோன்பார்க்கில்*
*சுயமா நகரில் சஞ்சாரம்*
*வெய்ய இரவி யதுகூடின்*
*மிகுசஞ் சாரம் எனும்உலகே. (440)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பத்தாம் இடத்தில் சுக்கிரன், செவ்வாய் ஆகிய இருகோள்களும் ஒன்றுகூடி நின்றாலும் இலக்கனம், ஏழாமிடத்தில் சூரியன் நிற்க, அவனைப் பத்தாம் இடத்திற்கு அதிபதி பார்த்தாலும், தான் வாழும் நகரில் அலைவான். சூரியனுடன் கூடி இருந்தால், அதிகமாக இச்சாதகன் அலைவான்.

## கர்மம்

*பேசிய கருமத்தோன் பலம்கு றைந்திட*
*வீசிய பாவர்கள் வெகுண்டு பார்ப்பரேல்*
*மூசிய கருமங்கள் முடிக்கில் விக்கினம்*
*தூசிய லல்குலாய் தொகுத்த வாறிதே. (441)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்குப் பத்தாம் இடத்திற்கு அதிபதி பலம் குன்றி இருக்க, பாவக்கோள்கள் அவனைப் பார்க்கில், செய்கின்ற செயல்கள் அனைத்தும் முழுமை யடையாமல் குறையுடன் விளங்கும்.

### யாகங்கள் செய்பவன்

*கரும நாதன் புதன்குருவாய்க்*
*கதித்த கேந்திர கோணத்தின்*
*மருவும் பலம்பெற் றிருந்தக்கால்*
*மகிழ்ந்தே யாக மதுசெய்வன்*
*பொருவின் றிவர்கள் சுபகேந்திரம்*
*பொருந்தி இருக்கச் சுபர்பார்த்தால்*
*இருந்திட் டரசர் குடைநிழற்ற*
*மிகுந்த யாகம் செய்குவனே.* *(442)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்குப் பத்தாம் இடத்திற்கு அதிபதி புதனாகவோ குருவாகவோ இருந்து கேந்திர கோணங் களில் பலம் பெற்று இருப்பின், இச்சாதகன், யாகங்கள் செய்வான். இவர்கள் சுபகேந்திரங்களில் பொருந்தி இருக்க, இவர்களைச் சுபக்கோள்கள் பார்க்க, அரசனின் ஆதரவுடன் மிகுந்த யாகங்களை இச்சாதகன் செய்வான்.

### மடங்கள், நீர்நிலைகளை உருவாக்குபவன்

*கொந்தலர் கரும நாதன்*
*கோபுராங் கிசமே யாகப்*
*பந்தமாம் சுபரே பார்க்கப்*
*பரிவுடன் கூட அல்லால்*
*தந்தபாக் கியன்பார்த் தாலும்*
*சவுக்கியம் மடம்த டாகம்*
*கந்தமாம் வழியின் மீதிற்*
*கட்டிவைத் திடுவன் மின்னே!* *(443)*

(இ-ள்.) கொத்தான மலர்களைச் சூடியுள்ள பெண்ணே! சென்ம இலக்கனத்திற்குப் பத்தாம் இடத்திற்கு அதிபதி கோபுராங்கிசம் ஏறி இருக்க, இவரைச் சுபக்கோள் பார்க்க, அல்லது இவருடன் சுபக்கோள் கூட அல்லது ஒன்பதாமிடத்திற்கு அதிபதி பார்த்தாலும் இச்சாதகன் அனைத்துச் சுகங்களையும் பெற்றவனாக இருப்பான். ஏழைகள் வந்து தங்குவதற்கான மடங்கள், நீர்நிலைகள் முதலானவற்றை புனிதயாத்திரை மேற்கொள்ளும் வழிகளில் கட்டிவைத்திடுவான்.

## புகழ்மிக்கவன்

*கன்மநா யகன்மா லாகிக்*
*கனருச்ச கேந்திர நிற்கத்*
*தன்மநா யகனே கூடித்*
*தான்பார்க்க யாகம் செய்வன்*
*பொன்மரு மகரச் செவ்வாய்*
*புகரங்ச மாகத் தோன்ற*
*மின்னரும் பொன்னு திக்கில்*
*வெகுகீர்த்தி உடையோ னாமே.* (444)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பத்தாம் இடத்திற்கு அதிபதி புதனாகி உச்ச, கேந்திரங்களில் நிற்க, ஒன்பதாம் இடத்திற்கு அதிபதி கூடி இருக்க அல்லது பார்க்க, இச்சாதகன் யாகங்கள் செய்வான். மகர இராசியில் இருக்கக் கூடிய செவ்வாய் புதன் அங்கிசமாக, இலக்கனத்தில் குரு இருக்க, இச்சாதகன் மிகுந்த புகழை உடையவனாக விளங்குவான்.

## யாகங்கள் செய்பவன், புகழ் உடையவன்

*அரியபுதன் உச்சத்தி லேஇருக்க அல்லால்*
*ஆனபுதன் இருந்தரா சிக்கதிபன் உச்சந்*
*தெரியநிற்க அலதுபுதன் ஏழுதனில் நிற்கச்*
*சிறந்தபாக் கியன்கருமத் துடையவர்க ளாலே*

துரிதமிலாச் சுபவர்க்க மாகியது பார்க்கிற்
சொல்லரிய யாகங்கள் சுந்தரமாய்ச் செய்வன்
புரியுமிடத் திரவில்லில் வளர்மதிபொன் நிற்கப்
புகரேழிற் சுபர்பார்க்கில் எங்கினும்கீர்த் தியனே. (445)

(இ-ள்.) புதன் தன் உச்சவீட்டில் இருக்க, புதன் இருந்த இராசிக்கதிபன் உச்சத்தில் நிற்க அல்லது புதன் ஏழாமிடத்தில் நிற்க, ஒன்பதாமிடத்ததிபதி, பத்தாமிடத்திற்கதிபதி இவர்களால் சுபவர்க்கம் பெற அல்லது பார்க்கில், இச்சாதகன் யாகங்கள் பலவற்றையும் செய்வான். இடப இராசியில், தனுசு இராசியில் வளர்பிறைச் சந்திரன் ஆகியோர் கூடி இருக்க, ஏழாமிடத்தில் நிற்கும் சுக்கிரனைச் சுபக்கோள்கள் பார்த்தாலும் இச்சாதகன் பெரும்புகழ் உடையவனாகத் திகழ்வான்.

## புகழ் உடையவன்

தூய நாலு கேந்திரத்தில்
சுபரே இருக்கில் கீர்த்தியுளான்
ஆய மதிசொட் சேத்திரந்தான்
அதிக உச்சத் திருந்தாலும்
ஞாய மதியைப் பொன்வெள்ளி
நாட்டின் எதிரே பார்த்தாலும்
காயம் எடுத்த நாள்முதலாய்க்
கருதும் கீர்த்தி மானவனே. (446)

(இ-ள்.) நான்கு கேந்திரங்களிலும் சுபக்கோள்கள் இருக்க, இச்சாதகன் மிகுந்த புகழ் உடையவன். சந்திரன் தன் ஆட்சி வீட்டில் அல்லது உச்ச வீட்டில் இருந்தாலும், சந்திரனை, குரு, சுக்கிரன் ஆகிய கோள்கள் நட்போடு பார்த்தாலும், பிறந்தது முதல் இச்சாதகன் புகழ் உடையவனாக விளங்குவான்.

## இதுவுமது

ஆனகுரு வெள்ளிசனி ஆட்சியுச்ச கேந்திரத்
தானமுற நின்றிடினும் சாற்றியசெவ் வாயும்
மானமுறு கேந்திரமுச்ச மன்னியநட் பாட்சி
ஊனமுற நிற்கின்வரும் ஓங்குபுகழ் தானே. *(447)*

*(இ-ள்.)* குரு, சுக்கிரன், சனி ஆகிய கோள்கள் ஆட்சி, உச்ச, கேந்திர வீடுகளில் இருந்தாலும் செவ்வாயும் கேந்திரம், உச்சம், நட்பாட்சி வீடுகளில் குற்றமற இருப்பினும், இச்சாதகன், புகழுடையவனாக விளங்குவான்.

## நல்லவன்

மேடம் தனுசு மீனத்தில்
வெய்யோன் இருக்கிற் கீர்த்தியுளான்
நாட அரிய சனிகுருமால்
நயந்த கதிரும் கூடிடினும்
கூடற் கரிய புகரிரவி
கூடச் சனிபா ராதிருக்க
ஆடற் புகர்க்கேழ் இரவிநிற்கில்
அபிமா னத்தன் ஆகுவனே. *(448)*

*(இ-ள்.)* மேட இராசி, தனுசு இராசி, மீன இராசி இவற்றுள் ஒன்றில் சூரியன் இருக்க, இச்சாதகன் புகழை உடையவனாக இருப்பான். சனி, குரு, புதன், சூரியன் ஆகிய நான்கு கோள்களும் ஒன்றுகூடி இருந்தாலும், சுக்கிரன், சூரியன் ஒன்றுகூட இவர்களைச் சனி பார்க்காமல் இருக்க, புதனுக்கு ஏழாமிடத்தில் சூரியன் இருக்க, இவன் எல்லோருடைய நம்பிக்கைக்கும் பாத்திரமானவனாக விளங்குவான்.

## சிவார்ச்சனை செய்பவன்

இடப மதியை இரவிபார்க்கில்
ஒன்று நல்ல கன்மியனாம்
அடரும் மதிசேய் சனிவெள்ளி
அருக்கன் இவர்கள் கூடிநின்றால்
தடமாம் புவிமேல் ஆசாரம்
தயவு தன்மம் சந்தானந்
திடமாய் நிதமும் சிவார்ச்சனையே
செய்வன் செழுந்தா மரைத்திருவே. *(449)*

*(இ-ள்.)* செழுமையான செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளை ஒத்தவளே! இடப இராசியில் உள்ள சந்திரனைச் சூரியன் பார்க்கில், இச்சாதகன் நல்ல காரியங் களைச் செய்பவனாக இருப்பான். சந்திரன், செவ்வாய், சனி, சுக்கிரன், சூரியன் ஆகிய ஐந்து கோள்களும் ஒன்றுகூடி இருந்தால், இச்சாதகன், ஆசாரம் உடையவனாகவும் கருணை உள்ளத்துடன் தர்மங்கள் செய்பவனாகவும், புத்திரர்களைப் பெற்றவனாகவும் இருப்பான். சிவ அர்ச்சனை செய்பவனாக விளங்குவான்.

## இதுவுமது

ஏழுக் குடையோன் இலக்கனத்தில்
இராகு உடனே இருந்தாலும்
வாழும் மதிமால் குருகூடி
வளர்பாக்கியத்தில் இருந்தாலும்
சூழும் கருமம் தருமத்தோன்
சொட்சேத் திரத்தில் இருந்திடினும்
மீளும் பிறவித் துயர்நீங்க
வேண்டிச் சிவனை அர்ச்சிப்பன். *(450)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்தில ஏழாமிடத்திற்கு அதிபதி நிற்க, இராகு அதனுடன் கூடி இருந்தாலும், சந்திரன், புதன், குரு ஆகிய மூன்று கோள்களும் பத்தாமிடத்தில் கூடி

இருந்தாலும், பத்தாமிடத்திற்கு அதிபதி, ஒன்பதாமிடத்திற்கு அதிபதி சொந்த வீடுகளில் இருந்தாலும் இச்சாதகன், பிறவித் துயரம் நீங்க வேண்டி, சிவார்ச்சனை செய்வான்.

## இதுவுமது

உகந்திடும் உதயத்தை உதய நாதனை
பகர்ந்த செவ்வாய் எதிர்பார்க் கவேகுரு
வகம்பெறு வர்க்கத்தை அடைந்து நிற்பரே
இகஞ்சி வார்ச்சனை செய்ய விச்சையே. *(451)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்தை, இலக்கனாதிபதியைச் செவ்வாய் பார்க்க, குரு சுபவர்க்கத்தை அடைந்து இருப்பின், இச்சாதகன், சிவார்ச்சனை செய்பவனாக இருப்பான்.

## இதுவுமது

குருபுதன் வெள்ளி கூடி
குலவும்ஒன் பதிலுற் றாலும்
பெருகுபாக் கியன்நற் கோளாய்
பேசிய கேந்திர கோணம்
இருந்துறச் சுபவர்க் கத்தை
எய்திடில் எந்நா ளும்தான்
திருந்துறும் பிறவி நீங்கச்
சிவார்ச்சனை செய்வன் தானே. *(452)*

*(இ-ள்.)* குரு, புதன், சுக்கிரன் ஆகிய மூன்று கோள்களும் ஒன்றுகூடி சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாம் இடத்தில் இருந்தாலும், ஒன்பதாம் இடத்திற்கு அதிபதி சுபக்கோளாய், கேந்திர கோணங்களில் இருந்து சுபவர்க்கத்தைச் சாரில், இச்சாதகன் பிறவி நீங்கும் பொருட்டு சிவார்ச்சனை செய்வான்.

### புண்ணியச் செயல்களைச் செய்பவன்

ஒன்பது பத்துக் குள்ளோன்
உயர்சுப மத்தி யத்தில்
இன்பமாய்ச் சுபவர்க் கத்தை
எய்திடிற் சிவனைப் போற்றும்
தன்புறு கன்மம் தன்மத்
தாதிபர் கூடி கேந்திரம்
வன்பில்கோ ணத்தி ருக்கின்
மகிழ்புண்ய கன்மம் செய்வன். *(453)*

*(இ-ள்.)* ஜென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாமிடம் பத்தாமிடம் இவற்றிற்கு அதிபதிகள் சுபக்கோள்களுக்கு இடையில் சுபவர்க்கத்தை அடைந்து இருந்தால், இச்சாதகன், சிவார்ச்சனை செய்பவனாக இருப்பான். பத்தாமிடம், ஒன்பதாமிடம் இவற்றுக்கு அதிபர்கள் ஒன்றுகூடி, கேந்திர திரிகோணங்களில் இருந்தால், இச்சாதகன், புண்ணிய கர்மங்களைச் செய்பவனாக இருப்பான்.

### இதுவுமது

ஏரார் உதயம் ஐந்தேழிற்
இயல்பாக் கியத்திற் கருமத்திலும்
ஓரார் குருவுற் றிடிலதனுக்
குடையோர் சுபவர்க்கம் ஏறுகினும்
காரார் புகர்பொன் நிறைமதியும்
கலந்து கூடிற் பத்திலுறிற்
சீரா கியபுண் ணியகரு்மம்
செய்வன் கமலச் செழுந்தேனே. *(455)*

*(இ-ள்.)* செந்தாமரையில் உள்ள நிறைந்த தேன்போன்று இனிமை மிக்க பெண்ணே! ஜென்ம இலக்கனம், ஐந்தாமிடம், ஏழாமிடம், ஒன்பதாம் இடம், பத்தாமிடம் ஆகியவற்றில் ஒன்றில் குரு இருக்க, ஒன்பதாமிடத்திற்கு உரியவன் சுபவர்க்கம் பெற்று இருந்தாலும் சுக்கிரன், குரு, பூரணச்

சந்திரன் ஆகிய மூன்று கோள்களும் ஒன்றாகக்கூடி பத்தாம் இடத்தில் இருந்தாலும் இச்சாதகன் புண்ணிய கர்மங்களைச் செய்பவனாக விளங்குவான்.

## இதுவுமது

அதிக இலாபம் புதன்வர்க்க
மாகி னாலும் பாக்கியத்திற்
சதிராய் இரவி சனிகுருவுந்
தானே கூடிப் பார்க்கவல்லால்
புதிதாம் அருக்கன் உடன்சாமி
பொருந்திக் கூடிப் பார்த்தாலும்
கதிசேர் புவிமேற் புண்ணியமாம்
கருமஞ் செய்வன் கண்ணுதலே. *(455)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்குப் பதினோராமிடம் புதன் வர்க்கமாக இருந்தாலும், சூரியன், சனி, குரு ஆகியோர் ஒன்பதாமிடத்தில் கூடி இருந்தாலும் அல்லது ஒன்பதா மிடத்தைப் பார்த்தாலும், சூரியனுடன் இலக்கனாதிபதி ஒன்றுகூடி இருந்தாலும் பார்த்தாலும், இச்சாதகன் இப்புவியில் புண்ணியமான பல செயல்களைச் செய்வான்.

பத்து மூன்றிற் கோளுறினும்
பத்துக் கிறையை புதன்குருவும்
ஒத்துக் கூடி இருந்தாலும்
உரைக்கும் ஆறுக் குடையவனே
வைத்த கேந்திர கோணத்தின்
மகிழ்ந்தே இருக்கக் கன்மத்தோன்
சித்தம் மகிழ்ந்து பார்த்தக்காற்
செகமேன் மிகுந்த புண்ணியவான். *(456)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்குப் பத்தாமிடம் மூன்றாமிடம் இவற்றில் கோள்கள் இருந்தாலும் பத்தா மிடத்திற்கு அதிபதியுடன் புதனும் குருவும் ஒன்றுகூடி இருந்தாலும், ஆறாம் இடத்திற்கு அதிபதி கேந்திர

திரிகோணங்களில் இருக்க, அதனை பத்தாம் இடத்திற்கு அதிபதி பார்க்க, இச்சாதகன் புண்ணியவானாகத் திகழ்வான்.

## இதுவுமது

கண்ட கருமம் தனிற்புதனே
கவந்து நிற்கக் கருமத்தோன்
கொண்ட சனிசுக் கிரன்தன்னைக்
கூடி னாலும் கொடும்பாவர்
அண்ட புகரும் சுபவர்க்கம்
ஆகி னாலும் புண்ணியவான்
வண்டு படியும் மலர்க்கூந்தல்
மயிலே களப முலையணங்கே! (457)

(இ-ள்.) தேனைப் பருக வண்டுகள் மொய்க்கின்ற மலர்களைச் சூடியுள்ள கூந்தலையும் மயிலைப் போன்ற சாயலையும், சந்தனம் பூசப்பட்ட தனங்களையும் உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்குப் பத்தாமிடத்தில் புதன் இருக்க, பத்தாமிடத்திற்கு அதிபதி சனி, சுக்கிரன் ஆகிய கோள்களைக் கூடி இருந்தாலும், கொடிய பாவக்கோள் களுடன் சுக்கிரன் சுபவர்க்கம் பெற்றிருந்தாலும் இச்சாதகன் புண்ணியவானாக விளங்குவான்.

## தர்ம காரியங்களைச் செய்பவன்

நாலுமூன் றைந்து தன்னில்
நாலினுக் கிறைவன் தன்னை
மாலுடன் கூடி நிற்கின்
மந்திரி மகிழ்ந்து பார்க்கிற்
சாலுமுற் பழைய தன்மம்
தன்னையும் எடுத்துச் செய்வன்
பாலும்செந் தேனும் மிக்கப்
பசுங்கிளி மொழியி னாளே. (458)

(இ-ள்.) பாலையும், சிவந்த தேனையும் போன்று இனிமையான பச்சைக்கிளியின் மொழியைப் போன்று இனியமொழி பேசும் பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடம், மூன்றாமிடம், ஐந்தாமிடம் இவற்றில் ஒன்றில் நான்காமிடத்திற்கு அதிபதி புதனுடன் சேர்ந்து இருக்கில், குரு இவர்களை பார்க்க, இச்சாதகன் முன்னோர் செய்த தர்ம காரியங்களைப் புதுப்பித்துச் செய்வான்.

## இதுவுமது

*பத்தியதாம் பாக்கியத்திற் புதனிருக்கப் பாம்பிரண்டும்*
*பாரா தேனும்*
*முத்தியதாம் ஒன்றுடனே மூன்றின்மதி சுபவர்க்க*
*முறநின் றாலும்*
*குத்திரத்தீ ரொன்பதொன்றுக் குடையவர்கள் புதனுடனே*
*கூடி னாலும்*
*எத்திசையும் பழையதன்மம் தனைப்பரிபா லனஞ்செய்வன்*
*இசைந்து தானே.* *(459)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாம் வீட்டில் புதன் இருக்க, இராகு கேது ஆகியவை இதனைப் பார்க்காமல் இருந்தாலும், இலக்கனம், மூன்றாமிடம் ஆகியவற்றில் ஒன்றில் சந்திரன் சுபவர்க்கமுற்று நின்றாலும், இரண்டா மிடம், இலக்கனம் ஆகியவற்றிற்கு அதிபதிகள் புதனுடன் கூடி இருந்தாலும் இச்சாதகன் பலவிடங்களுக்கும் சென்று தான தர்மங்களைச் செய்வான்.

## யாகங்களைச் செய்பவன்

*அரியபத்தோன் மதன்குருவை கூடிடினும் ஒன்றுபத்துக்*
*கதிப ரானோர்*
*தெரியவரு மித்திரராய்க் கேந்திரகோ ணந்தனிலே*
*சேருற் றாலும்*

பரிவுடைய தன்மகன்மம் இரண்டுக்கு மோருறவாய்ப்
பத்துற் றாலும்
துரிதமிலாச் சுபர்கூடிப் பத்துறினும் யாகமே
துலங்கச் செய்வான். (460)

(இ-ள்.) சென்ம இலக்கனாதிபதிக்குப் பத்தாமிடத்திற்கு அதிபதி புதன், குருவைக் கூடினாலும் இலக்கனாதிபதி, பத்தாமிடத்திற்கு அதிபதி ஆகிய இருவரும் நண்பர்களாய்க் கேந்திர திரிகோணங்களில் இருந்தாலும் இச்சாதகன், தர்ம கர்மங்களைச் செய்யக்கூடியவனாக இருப்பான். இலக்கனாதிபதி, பத்தாமிடத்திற்கு அதிபதி ஆகிய இருவரும் பத்தாமிடத்தில் இருக்க, சுபக்கோள்கள் கூடி இருந்தாலும் இச்சாதகன் யாகம் செய்வான்.

## இதுவுமது

வாக்கு முதலாய் ஒருநான்கு
வரையி லேழு கோளிருக்கிற்
தக்க தாக வேள்விசெய்வன்
தகும்ஒன் பானிற் குருவிருக்கில்
வாக்கும் புதன்சே யுடன்கூடி
வன்மில் யெதிரே பார்த்தக்கால்
நோக்கிய சூத்தி ரர்பொருளாற்
உகந்து செய்வன் வேள்விதனை. (461)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடம் முதல் நான்காமிடம் வரையில் இராகு, கேதுக்களைத் தவிர ஏழு கோள்களும் இருப்பின், இச்சாதகன் யாகங்களைச் செய்வான். சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாமிடத்தில் குரு இருக்க, புதன் செவ்வாயுடன் கூடி பார்க்க, இச்சாதகன் சூத்திரர்களிடம் பொருள் பெற்று யாகத்தைச் செய்வான்.

## இதுவுமது

அம்பு லிக்குக் கருமத்தில்
ஆன சுபர்தான் நின்றாலும்
ரம்பு பத்திற் சேயிருக்க
நல்ல வெள்ளி பார்த்தாலும்
செம்பு செய்யும் பத்தினில்மால்
சுங்கன் தானும் பெலத்தாலும்
கும்புறு சூத்தி ரர்பொருளாற்
கூற வேள்வி செய்திடுவன். (462)

(இ-ள்.) சந்திரனுக்குப் பத்தாமிடத்தில் சுபக்கோள் இருந்தாலும் பத்தாம் இடத்தில் செவ்வாய் இருக்க, அதனைச் சுக்கிரன் பார்த்தாலும் பத்தாம் இடத்தில் புதன், சுக்கிரன் ஆகிய இருகோள்களும் பலம்பெற்று இருக்க, இச்சாதகன் சூத்திரர் களிடமிருந்து பொருள் பெற்று யாகம் நடத்துவான்.

## இதுவுமது

ஓங்குமுதயப் பத்துடையோன் ஒண்கதிரைக் கூடிடினும்
வாங்குதரனை மற்றவர்கள் வரிசையாகப் பார்த்திடினும்
பாங்குடைய பாக்கியனைப் பருதிமகன் கூடிடினும்
தாங்குசூத் திரர்பொருளாற் தான்செய்வன் வேள்விதனை. (463)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு பத்தாமிடத்திற்கு உடையவன், சுக்கிரனைக் கூடினாலும் செவ்வாய் மற்றவர்கள் பார்த்திடினும், ஒன்பதாம் இடத்திற்கு அதிபதி சனியைக் கூடி இருந்தாலும், இச்சாதகன் சூத்திரர்களிடமிருந்து பொருள் பெற்று யாகம் நடத்துவான்.

## இதுவுமது

இந்துலக்க னாதிபனை ஏற்றசுபர் பார்த்தாலும்
சொந்தலக்க னஞ்சுபமாய்ச் சுபர்பார்க்கச் சுபருறினும்
முந்துதய நாயகனை மூடனெதிர் பார்த்தாலும்
உந்துசில யாகங்கள் உண்மையாய்ச் செய்திடுவன். (464)

(இ-ள்.) சென்ம இலக்கனாதிபனைச் சுபக்கோள் பார்த்தாலும், இலக்கனம் சுபமாகச் சுபக்கோள்கள் பார்க்க, அங்கு சுபக்கோள்கள் இருந்தாலும், இலக்கனாதிபதியைச் சனி பார்த்தாலும், இச்சாதகன் யாகங்களைச் செய்பவனாக இருப்பான்.

## இதுவுமது

*வருமுதயம் சுபரிருக்க வளருமதி பார்த்தாலும்*
*தருஞ்சனிசேய் வர்க்கமதித் தனைநீலன் பார்த்தாலும்*
*முருகுலவும் கருமத்தில் மூன்றுநா லைந்துகோள்*
*உருமையற நின்றக்கால் ஓங்கியதோர் வேள்விசெய்வன். (465)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்தில் சுபக்கோள் இருக்க, அதனைச் சந்திரன் பார்த்தாலும், சனி, செவ்வாய் வர்க்கத்தில் இருக்க, சந்திரனைச் சனி பார்த்தாலும், பத்தாமிடத்தில் மூன்று, நான்கு, ஐந்தாமிடங்களின் அதிபதிகள் நின்றால், இச்சாதகன் யாகங்கள் செய்பவனாக விளங்குவான்.

## இதுவுமது

*ஒன்பதாம் இடத்துடையோன் உச்சத்தில் உச்சாங்கம்*
*தன்பாலி நின்றிடினும் சனிதிரே காணமதின்*
*பின்பரவும் மதியிருக்க வெய்யசனி பார்த்தாலும்*
*அன்புடனே வேள்விசெய்வன் அம்புயப்பூஞ்*
*செந்திருவே. (466)*

(இ-ள்.) செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளை ஒத்த அழகையுடைய பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாம் இடத்திற்கு அதிபதி உச்சத்தில் உச்சாங்கிசம் பெற்று நின்றாலும், சனி திரேகாணத்தில் சந்திரன் இருக்க, அதனைச் சனி பார்த்தாலும் இச்சாதகன் யாகங்களைச் செய்வான்.

## புண்ணிய நீராடுபவன்

*இரவியொடு ராகுபத்தில் இன்புற்றி ருந்தாலும்*
*வரமீனம் பத்தாகி மந்திரிதா னுற்றிடினும்*
*இரவு கரு மந்தனிலே வெண்மதிதான் நின்றிடினும்*
*பரவியபுண் ணியதீர்த்தம் பலித்திடுங்கங் காஸ்நானம். (467)*

(இ-ள்.) சூரியனோடு இராகுவும் சேர்ந்து சென்ம இலக்கனத்திற்குப் பத்தாமிடத்தில் இருந்தாலும், சென்ம இலக்கனத்திற்கு மீன இராசி பத்தாமிடமாகி அதில் குரு இருந்தாலும், பத்தாமிடத்தில் வளர்பிறைச் சந்திரன் நின்றாலும் இச்சாதகன் கங்கைக்குச் சென்று புனித நீராடுவான்.

## ஆசாரவான்

*துய்யகரு மத்துடையோன் சுக்கிரனைத் தான்கூடிப்*
*பையவே நாலேழு பதினொன்றில் நின்றிடினும்*
*மெய்யுறுபுண் ணியதீர்த்தம் மேன்மையுடன் ஆடிடுவன்*
*துய்யமதி சேய்சனியும் ஒன்பதுறில் ஆசாரன். (468)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பத்தாம் இடத்திற்கு அதிபதி சுக்கிரனோடு சேர்ந்து நான்காமிடம், ஏழாமிடம், பதினோராமிடம் ஆகிய இவ்விடங்களில் ஒன்றில் இருந்தாலும், இச்சாதகன் புண்ணிய தீர்த்தம் ஆடுபவனாக விளங்குவான். சந்திரனும் செவ்வாயும் சனியும் சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாம் இடத்தில் இருக்க, இச்சாதகன் ஆசாரவானாக இருப்பான்.

## இதுவுமது

*பாசமிகு செங்கதிரும் பாவர்களும் தான்கூடி*
*நேசமுடன் முடமெய்தி நின்றாலும் ஓரைந்தில்*
*வாசமுடன் மாந்திநிற்க வாய்த்தவியம் மூன்றெட்டில்*
*நேசமுடன் குருவிருக்க நித்யனா சாரனென்பர். (469)*

(இ-ள்.) சூரியனும் பாவக்கோள்களும் ஒன்றுகூடி அஸ்தமனமாகி இருந்தாலும், ஐந்தாமிடத்தில் மாந்தி நிற்க, பன்னிரண்டாமிடம், மூன்றாமிடம், எட்டாமிடம் ஆகிய இடங்களில் ஒன்றில் குரு இருந்தாலும், இச்சாதகன் ஆசாரனாக இருப்பான்.

**அனாசாரன்**

*செவ்வாயி ரவிபுதன் செய்யபத்திற் கூடிடினும்*
*ஒவ்வாவெண் மதிவெள்ளி ஓங்குபுதன் கூடிடினும்*
*தவ்வார் பிறைமால்பொன் சனிகூடி நின்றாலும்*
*கவ்வார் வியத்தில்ரவி காரிநிற்கில் அனாசாரன். (470)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பத்தாம் இடத்தில் செவ்வாய், சூரியன், புதன் ஆகிய மூன்று கோள்களும் ஒன்று கூடி இருந்தாலும், பூரணச்சந்திரன், சுக்கிரன், புதன் ஆகிய மூன்று கோள்களும் ஒன்றுகூடி இருந்தாலும், வளர்பிறைச் சந்திரன், புதன், குரு, சனி ஆகிய நான்கு கோள்களும் ஒன்றுகூடி இருந்தாலும் பன்னிரண்டாமிடத்தில் சூரியன், சனி ஆகிய இருகோள்களும் ஒன்றுகூடி இருந்தாலும் இச்சாதகன் அனாசாரனாக இருப்பான்.

**இதுவுமது**

*தக்கபுதன் செவ்வாயுந் தான்கூடிப் பத்துறினும்*
*வக்கிரன்பா னுச்சமுற வந்தொன்றாக் கூடிடினும்*
*சொக்கவக் கிரனாறில் சுக்கிரன்தான் நின்றாலும்*
*இக்குவல யந்தன்னில் என்றுமனா சாரனென்பார். (471)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பத்தாமிடத்தில் புதனும் செவ்வாயும் ஒன்றுகூடி இருந்தாலும் செவ்வாயும், உச்சம்பெற்ற சூரியனும் ஒன்றாகக் கூடி இருந்தாலும் செவ்வாயும் சுக்கிரனும் ஒன்றுகூடி இருந்தாலும் இச்சாதகன் அனாசாரனாக இருப்பான்.

### பாவச்செயல்களைச் செய்பவன்

*சந்திரன் இரவி பற்றி*
*சல்லியன் செவ்வாய் தானும்*
*வந்துதான் கருமந் தன்னின்*
*மலிவொடு கூடிற் றாலும்*
*உந்துமூன் றிடத்திற் சேயும்*
*போராறிற் சனியும் ஏழிற்*
*றொந்தரா குவுமி ருக்கிற்*
*றூர்க்கன்மி பாவன் என்பார்.* *(472)*

(இ-ள்.) சந்திரன், சூரியன், புதன், சுக்கிரன், செவ்வாய் ஆகிய ஐந்து கோள்களும் சென்ம இலக்கனத்திற்குப் பத்தாம் இடத்தில் ஒன்றாகக் கூடி இருந்தாலும் மூன்றாமிடத்தில் செவ்வாயும், ஆறாமிடத்தில் சனியும், ஏழாமிடத்தில் இராகுவும் இருந்தால், இச்சாதகன், தீயதொழிலைச் செய்பவனாகவும், பாவகாரியங்களைச் செய்பவனாகவும் இருப்பான்.

### இதுவுமது

*கதிரவன் சனிசேய் வெள்ளி*
*கருமத்திற் கூடிற் றாலும்*
*மதிவெள்ளி புதனும் கூடி*
*மகிழ்ச்சியாய் இருக்கு மேனும்*
*சதிருடன் குருசேய் காரி*
*தான்கூடி இருக்கு மேனும்*
*துதிகதிர் சனியும் கூடிற்*
*றூர்க்கன்மி யாவன் என்பார்.* *(473)*

(இ-ள்.) சூரியன், சனி, செவ்வாய், சுக்கிரன் ஆகிய நான்கு கோள்களும் பத்தாமிடத்தில் ஒன்றுகூடி இருந்தாலும், சந்திரன், வெள்ளி, புதன் ஆகிய மூன்று கோள்களும் ஒன்றாகக் கூடி இருந்தாலும், குரு, செவ்வாய், சனி ஆகிய மூன்று கோள்களும் ஒன்றாகக் கூடி இருந்தாலும் சூரியனும் சனியும் கூடி இருந்தாலும் இச்சாதகன், தீய செயல்களைச் செய்பவனாக விளங்குவான்.

## இதுவுமது

மேவுபாக் கியத்திற் கேது
வியத்தினிற் சனியும் நிற்கத்
தாவுசத் துருத்தா னத்திற்
சாமனே இருக்கு மேனும்
பாவுறும் அட்ட மத்திற்
பாக்கியம் தன்னிற் பத்தில்
வேவுறு வியத்திற் கேது
இருக்கிற்துர்க் கன்மி யாமே. (474)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாம் இடத்தில் கேதுவும் பன்னிரண்டாம் இடத்தில் சனியும் நிற்க, ஆறாம் இடத்தில் புதன் இருந்தாலும், எட்டாமிடத்தில், ஒன்பதா மிடத்தில், பத்தாமிடத்தில் பன்னிரண்டாமிடத்தில் கேது இருந்தாலும் இச்சாதகன் தீய செயல்களைச் செய்பவனாக இருப்பான்.

## இதுவுமது

நிலவுமால் புகருங் கூடி
நீடுகேந் திரத்தி லாகச்
சொலுமிரா குதய மாகத்
தோன்றிடப் பிறக்கு மேனும்
இலகிய நீச மூடம்
எய்திய குருவை நல்லோர்
பலமுற நோக்கா ராகிற்
பவநீசக் கன்மி யாமே. (475)

(இ-ள்.) சந்திரன், புதன், சுக்கிரன் ஆகிய மூன்று கோள்களும் கேந்திரத்தில் இருக்க, சென்ம இலக்கனத்தில் இராகு நிற்க, குரு நீசம், அஸ்தமனம் அடைய, அதனைச் சுபக்கோள்கள் பலத்தோடு நோக்காவிடில், இச்சாதகன், பாவமான தீயத்தொழில்களைச் செய்பவனாக இருப்பான்.

## இதுவுமது

உரம்பெறு குருவே பாவ
 ருடன்கூடிப் பத்தில் நிற்கக்
கரம்பெறும் இரவி காரி
 கருமத்தோன் உடனே கூடி
இரந்தனில் நீசகன்மி
 இராகுவும் சனியும் கூடித்
திரம்பெறும் நீச கன்மம்
 செய்குவன் சேல்கண் ணாளே! (476)

(இ-ள்.) கெண்டைமீன் போன்ற கண்களை உடைய பெண்ணே ! குரு பாவக்கோளுடன் ஒன்றுகூடி சென்ம இலக்கனத்திற்குப் பத்தில் நிற்க, சூரியன், சனி, பத்தாமிடத்திற்கு அதிபதி ஒன்றுகூடி இருந்தால் இச்சாதகன், கீழான தொழிலைச் செய்பவனாக இருப்பான். இராகுவும் சனியும் ஒன்றுகூடி இருக்க, இச்சாதகன் கீழான தொழிலைச் செய்வன்.

## இதுவுமது

ஆக்கிய மூன்றிற் காரி
 ஐந்தில்சேய் இருக்கு மேனும்
பாக்கியக் கருமம் இலாபம்
 பனிரெண்டிற் கிரகம் ஏழும்
தாக்கிடு மேனும் காமம்
 தரும்அட்ட மத்திற் பத்தில்
வீக்கிய ஏழு கோளும்
 மேவினும் நீசகன்மி. (477)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில் சனியும், ஐந்தாமிடத்தில் செவ்வாயும் இருந்தாலும் ஒன்பதாமிடம், பத்தாமிடம், பதினோராமிடம், பன்னிரண்டாமிடம் ஆகிய நான்கு இடங்களில் இராகு, கேதுக்களைத் தவிர மற்ற ஏழு கோள்களும் நின்றாலும் ஏழாமிடம், எட்டாமிடம், பத்தாமிடம் ஆகிய மூன்று இடங்களில் இராகு கேதுக்களைத்

தவிர மற்ற ஏழு கோள்களும் நின்றாலும் இச்சாதகன் கீழானத் தொழிலைச் செய்பவனாக இருப்பான்.

## இதுவுமது

*இந்து மந்தன் இரவி குருபுதன்*
*வந்து பத்திற் மற்றிடம் கூடினும்*
*உந்து பத்தெட்டுக் குள்ளவர் கூடினும்*
*மைந்தரி லவமா னஞ்செய் கன்மியே.* *(478)*

*(இ-ள்.)* சந்திரன், சனி, சூரியன், குரு, புதன் ஆகிய ஐந்து கோள்களும் சென்ம இலக்கனத்திற்குப் பத்தாமிடத்தில் கூடி இருந்தாலும், வேறு இடத்தில் கூடி இருந்தாலும், பத்தாமிடம், எட்டாமிடம் இவற்றிற்கு அதிபதிகள் ஒன்று கூடி இருந்தாலும், இச்சாதகன் அவமானம் உண்டாகும் காரியங்களைச் செய்பவனாக இருப்பான்.

## இதுவுமது

*வெள்ளிபொன் இரவி புந்தி*
*மெலியினுந் துர்த்தா னத்திற்*
*தள்ளுறா இருக்கு மேனும்*
*தனத்தினில் ஆறில் காரி*
*விள்ளுறா திருக்கில் மூன்றில்*
*மிகுசெவ்வாய் இருக்கு மேனும்*
*தள்ளுறா பாவ கன்மம்*
*தனைச்செய்வன் தடங்கண் மாதே!* *(479)*

*(இ-ள்.)* பெரிய அழகான கண்களையுடைய பெண்ணே! சுக்கிரன், குரு, சூரியன், புதன் ஆகிய நான்கு கோள்களும் வலிமையற்று இருந்தாலும் ஆறு, எட்டு, பன்னிரண்டு ஆகிய இடங்களில் இருந்தாலும், இரண்டாம் இடத்தில் ஆறாம் இடத்தில் சனி இருந்தாலும், மூன்றா மிடத்தில் செவ்வாய் இருந்தாலும் இச்சாதகன் பாவத் தொழிலைச் செய்வான்.

## இதுவுமது

ஈராறிற் சனிஇ ருக்க
எட்டினிற் பத்திற் கேது
வோராமல் இருக்கு மேனும்
உதயத்தின் மதியை மற்றோர்
நேராகப் பார்க்கப் பத்தில்
நிகர்செவ்வாய் இருக்கு மேனும்
வாரார்பூண் முலையாய் ! பாரின்
மாபாவ கன்மி யாமே. (480)

(இ-ள்.) வார்கொண்டு இழுத்துக் கட்டப்பட்ட அணிகளை அணிந்துள்ள தனங்களைக் கொண்ட பெண்ணே! பன்னிரண்டாமிடத்தில் சனி இருக்க, எட்டாமிடத்தில் அல்லது பத்தாமிடத்தில் கேது இருந்தாலும், சென்ம இலக்கனத்தில் உள்ள சூரியனைப் பாவக்கோள்கள் பார்க்க, பத்தாமிடத்தில் செவ்வாய் இருந்தாலும் இப்புவியில் பெரிய பாவத்தொழிலைச் செய்பவனாக இச்சாதகன் விளங்குவான்.

## இதுவுமது

அமரமதி உதயநிற்கப் பத்துடையோர் நீசம்
அஸ்தமனம் அடைந்தாலும் பகரருக்கன் கூடி
விபரமுடன் பாக்கியத்தின் மேவக்கோ லுதிப்ப
வெய்யவன்தான் இருந்தாலும் விருச்சிகமே தோன்ற
இபமெனமே சனிபாவ ருடன்கூடிப் பத்தில்
இருந்திடினும் இரண்டுமூன் றொன்பதில் இராகு
சுகமுறவே தானிருக்கச் சனிபார்க்கு மேனும்
சோர்ந்திடுமா பாவகன்மந் துணிந்துசெய்வன்
தோகாய் ! (481)

(இ-ள்.) மயில் தோகையினைப் போன்ற அழகான கூந்தலை உடைய பெண்ணே! சந்திரன் சென்ம இலக்கனத்தில் நிற்க, பத்தாம் இடத்திற்கு அதிபதி நீசம் அல்லது அஸ்தமனம் அடைந்தாலும் சூரியனும் கூடி பத்தாமிடத்தில் நின்றாலும், சென்ம இலக்கனம் துலாம்

இராசியாக அதில் சூரியன் இருந்தாலும் விருச்சிகம் இலக்கனமாகச் சனி, பாவக் கோளுடன் கூடி பத்தாம் இடத்தில் இருந்தாலும், இரண்டாமிடம், மூன்றாமிடம், ஒன்பதாமிடம் இவற்றில் ஒன்றில் இராகு இருக்க, இதனைச் சனி பார்த்தாலும் இச்சாதகன் பாவம் வரும் தொழில்களைச் செய்வாள்.

### சுபகர்மம் செய்பவன்

வருதனமி லாப மெட்டின்
வக்கிரன் இருக்க ஆறில்
பருவமாம் புதனுற் றாலும்
பத்தினில் கேதுற் றாலும்
ஒருபத்துக் குடையோன் எட்டில்
உகந்துதான் இருப்பா னாகில்
அருவுறா தன்ம கன்மம்
ஆகுவன் அமுத மானே! (482)

(இ-ள்.) இனியமொழி பேசும் மானையொத்த பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடம், பதினோராமிடம், எட்டாமிடம் இவற்றில் ஒன்றில் செவ்வாய் இருக்க, ஆறாம் இடத்தில் புதன் இருந்தாலும் பத்தாம் இடத்தில் கேது இருந்தாலும், பத்தாம் இடத்திற்கு அதிபதி எட்டாமிடத்தில் இருந்தாலும் இச்சாதகன் தர்மமானத் தான தர்மங்கள் செய்வான்.

### தர்மவான்

பண்ணிறை இரவி மதிபுதன் கூடிப்
பாக்கியத் தினிலிருந் தாலும்
எண்ணிய மதிபொன் சனிபுதன் கதிரோன்
இனிதுடன் கூடிநின் றாலும்
தண்ணிறை பத்துக் கதிபனங் கிசத்தோன்
சாற்றுந்தூ மாதிய ருடனே
நண்ணியே இருக்கிற் தன்மமாங் கன்மம்
நலமெனச் செய்வன் நண்ணுதலே! (483)

(இ-ள்.) அழகான நெற்றியையுடைய பெண்ணே ! ஜென்ம இலக்கனத்திற்குப் பத்தாமிடத்தில் சூரியன், சந்திரன், புதன் ஆகிய மூன்று கோள்களும் ஒன்றாகக் கூடி இருந்தாலும், இவ்விடத்தில் சந்திரன், குரு, சனி, புதன், சூரியன் ஆகிய ஐந்து கோள்களும் ஒன்றாகக் கூடி இருந்தாலும், பத்தாமிடத்திற்கு அதிபதியின் அங்கிசாதிபதி தூமாதிகளுடன் கூடி இருக்க, இச்சாதகன், தர்ம காரியங்களை மிகுதியாகச் செய்வான்.

## மந்திரியாக விளங்குபவன்

அஞ்சினுக் குடையோன் கோபு
ராங்சமேற பொன்னோன் தானும்
விஞ்சுலக் கனத்தின் மேவ
மிக்கஒன் றைந்துக் குள்ளோர்
தஞ்சமாய்ப் பார்க்க மாலோன்
தானின்ற ராசி நாதன்
வஞ்சமில் கேந்திரம் ஏறின்
மகராச மந்திரி யாவான். *(484)*

(இ-ள்.) ஜென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்திற்கு உரியவன் கோபுராங்கிசம் ஏற, குரு இலக்கனத்தில் இருக்க, இலக்கனாதிபதி, ஐந்தாமிடத்திற்கு அதிபதி பார்க்க, புதன் நின்ற இராசியாதிபதி கேந்திரம் ஏறி நிற்க, இச்சாதகன் மகாராஜாக்களுக்கு மந்திரியாக விளங்குவான்.

## இதுவுமது

குருவும் சுவாமியும் கூடிக் கேந்திரம்
மருவ வக்கிரன் வந்தெதிர் பார்க்கினும்
பொருது சேய்கதிர் பொன்னவர் கூடினும்
அருள்செய் மன்னர்க் கமைச்சனு மாவனே. *(485)*

(இ-ள்.) ஜென்ம இலக்கனாதிபதியும் குருவும் ஒன்று கேந்திரத்தில் கூடி இருக்க, செவ்வாய் பார்த்தாலும்,

செவ்வாய், சூரியன், குரு ஆகிய மூன்று கோள்களும் ஒன்றாகக் கூடி இருந்தாலும் இச்சாதகன் மன்னர்களுக்கு அமைச்சனாகப் பணிபுரிபவனாக விளங்குவான்.

## இதுவுமது

இரவிமதி குருவெள்ளி இனிதாகக் கூடிடினும்
நிரவிநின் றிடில்வெள்ளி நீசர்சுபர் பார்த்தாலும்
வரவிரண்டு முதலெட்டு வரையிலேழு கோளுறினும்
நரபதிக்கு மெய்ப்பாநன் மந்திரிதான் ஆகுவனே. *(486)*

*(இ-ள்.)* சூரியன், சந்திரன், குரு, சுக்கிரன் ஆகிய நான்கு கோள்களும் ஒன்றாகக் கூடி இருந்தாலும், வெவ்வேறு வீடுகளில் உள்ள இக்கோள்களைச் சுக்கிரன், பாவக்கோள், சுபக்கோள் பார்த்தாலும், இரண்டாமிடம் முதல் எட்டாமிடம் வரை உள்ள இவ்விடங்களில் இராகு கேதுக்களைத் தவிர ஏழுகோள்களும் இருந்தாலும் இச்சாதகன், மன்னர்களுக்கு அமைச்சனாகப் பணிபுரிபவனாக விளங்குவான்.

## இதுவுமது

புனர்பூசம் அசுவினியிற் சனியிருக்க மகஞ்சிரத்திற்
பொன்னோன் மேவத்
தனமான சித்திரையிற் பூசத்திற் புதனிருக்கத்
தருமகத்தின்
மனமேவும் வெள்ளிநிற்கப் பரணியுடன் சோதிநாள்
வந்து தோன்ற
குணமேவுஞ் செகராச மந்திரியென் றேயுரைப்பர்
குறித்துத் தானே. *(487)*

*(இ-ள்.)* புனர்பூசம், அசுவனி நட்சத்திரக் கால்களில் சனி இருக்க, மிருக சீரிட நட்சத்திரக்காலில் குரு இருக்க, சித்திரை, பூச நட்சத்திரக் கால்களில் புதன் இருக்க, மக நட்சத்திரக்காலில் சுக்கிரன் நிற்க பரணி, சுவாதி நாள் தோன்ற, இச்சாதகன் உலகையெல்லாம் ஆளும் மன்னனுக்கு மந்திரியாக இருப்பான்.

## இதுவுமது

வழிபடு கருமம் தன்னில்
வக்கிரன் இரவி நிற்க
மொழியுமூன் றிடத்திற் காரி
முந்துற நிற்கு மேனும்
பொழிவிலா பாக்கி யத்திற்
பொன்பத்திற் சேயும் நாலில்
அழிவிலாப் புகரே நிற்கில்
அரசர்மந் திரியாம் என்பர். (488)

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்குப் பத்தாம் இடத்தில் செவ்வாயும் சூரியனும் நிற்க, மூன்றாமிடத்தில் சனி இருந்தாலும், ஒன்பதாமிடத்தில் குருவும் பத்தாமிடத்தில் செவ்வாயும் நாலாமிடத்தில் சுக்கிரனும் இருக்க இச்சாதகன் அரசனுக்கு மந்திரியாக விளங்குவான்.

## இராஜ சமானன்

பன்னும் ஒன்பது பத்தில் இரவிசேய்
பொன்னும் கூடில் புவியில மைச்சனாம்
மன்னும் காரி மதிபுசர் கூடிடிற்
தன்னில் வேந்தர் சமானமு மாவனே. (489)

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாமிடத்தில் அல்லது பத்தாம் இடத்தில் சூரியன், செவ்வாய், குரு ஆகிய மூன்று கோள்கள் ஒன்றுகூடி இருந்தால், இச்சாதகன் அமைச்சனாக விளங்குவான். சனி, சந்திரன், சுக்கிரன் ஆகிய மூன்று கோள்களும் ஒன்றுகூடி அவ்விடங்களில் இருந்தால், இச்சாதகன் மன்னனுக்கு நிகரானச் சிறப்புகளைப் பெற்றவனாக விளங்குவான்.

## இதுவுமது

*பாவருப சயத்திருக்கச் சாமிபார்த் தாலும்*
*பனிமதிகேந் திரத்தையல்லான் மற்றிடத்தில் இருக்க*
*மேவருபொன் பார்த்தாலும் இரவிகுரு சனியும்*
*மிகுபலமாய்க் கேந்திரகோ ணத்திலிருந் தாலும்*
*தாவுகதிர் உச்சமுறச் சாமிநோக் கிடினும்*
*சசிகேந்திரம் விட்டிருக்க மந்திரிபார்த் தாலும்*
*ஏவருங்கோல் குடங்கேந்திர கோணமாய்ச் சனியன்*
*இருக்கவே குருபார்க்கின் மன்னவர்ச மானன். (490)*

(இ-ள்.) பாவக்கோள் உபசய வீடுகளான இலக்கனம், மூன்று, ஆறு, பத்து பதினொன்றுமாகிய வீடுகளில் இருக்க, அதனை இலக்கனாதிபதி பார்த்தாலும், வளர்பிறைச் சந்திரன் கேந்திரத்தைத் தவிர மற்ற இடங்களில் இருக்க குரு பார்த்தாலும், சூரியன், குரு, சனி ஆகிய மூன்று கோள்களும் பலம்பெற்று கேந்திர திரிகோணங்களில் இருந்தாலும், சூரியன் உச்சமுற்று இருக்க, இலக்கனாதிபதி அதனைப் பார்த்தாலும், சந்திரன் கேந்திரத்தைத் தவிர வேறு இடத்தில் இருக்க குரு பார்த்தாலும், துலாம், கும்பம் ஆகிய இராசிகள் கேந்திர திரிகோணமாக இருக்க, அதில் சனி இருந்தாலும் இச்சாதகன் மன்னனுக்கு நிகரான சிறப்புக்களை உடையவன்.

## இதுவுமது

*மேடமதி தனைச்செவ்வாய் தான்பார்க்கு மேனும்*
*மிக்ககன்னி மதியைஇரவி தான்பார்க்கு மேனும்*
*தேடரிய மிதுனமதி யைபுதன்பார்க்கி லேனும்*
*திகழிடபங் கர்க்கடகம் குருபார்க்கு மேனும்*
*நீடியசந் திரனிருக்கக் குருபார்க்கு மேனும்*
*நீடுகன்னி யாழுதிப்பப் புதன்பார்க்கு மேனும்*
*நாடியகோ லுறுமதியைப் புதன்பார்க்கு மேனும்*
*நரபதிச மானனென நவிலுவர்பைந் தொடியே! (491)*

(இ-ள்.) பசுமையான வளையல்களை அணிந்து நின்ற பெண்ணே! மேட இராசியில் சந்திரனைச் செவ்வாய் பார்த்தாலும், கன்னி இராசியில் நின்ற சந்திரனைச் சூரியன் பார்த்தாலும், மிதுன இராசியில் நின்ற சந்திரனைப் புதன் பார்த்தாலும், கடக இராசி, இடப இராசி இவற்றில் நின்ற சந்திரனை குரு பார்த்தாலும் அல்லது இவ்விரு இராசிகளைப் பார்த்தாலும், கன்னி, மிதுனம் இலக்கனமாக அவற்றை புதன் பார்த்தாலும், துலா இராசியில் நின்ற சந்திரனைப் புதன் பார்த்தாலும் இச்சாதகன் மன்னர்களுக்கு நிகரானவன் என்று சொல்லுவார்கள்.

## ஆசார கிருத்தியன்

இலக்கனத்தில் உச்சர்நிற்கச் சாமிகேந் திரமாய்
இருந்திடினும் தனுர்மதியைக் குருபார்க்கு மேனும்
துலங்குசிங்க மதியைவெள்ளி இரவிசேய் கூட
துண்ணெனவே பார்த்தாலும் விருச்சிகத்தம் புலியைக்
கலக்கமில்லாப் புதன்செவ்வாய் தான்பார்க்கு மேனும்
கருதுமூலத் திரவியுடன் உதயநிற்கு மேனும்
பலக்கமுத்தி ராடமுரோ கணிபூசம் தன்னிற்
பெருங்கதிருற் றிடவுதய முறிலாசா ரியனே. (492)

(இ-ள்.) சென்ம இலக்கனத்தில் உச்சக்கோள் நிற்க. இலக்கனாதிபதி கேந்திரத்தில் இருந்தாலும், தனுர் இராசியில் உள்ள சந்திரனைக் குரு பார்த்தாலும், சிம்ம இராசியில் உள்ள சந்திரனைச் சுக்கிரன், சூரியன், செவ்வாய் சேர்ந்திருந்தாலும் அல்லது பார்த்தாலும், விருச்சிக இராசியில் உள்ள சந்திரனைப் புதன், செவ்வாய் பார்த்தாலும் மூல நட்சத்திரக் காலில் நின்ற சூரியன் இலக்கனத்தில் இருந்தாலும், உத்திராடம், உரோகணி, பூசம் ஆகிய நட்சத்திரக் கால்களில் ஒன்றில் நின்ற சூரியன், இலக்கனத்தில் இருந்தாலும் இச்சாதகன் ஆசாரியனாக விளங்குவான்.

## புகழுடையவன்

பூரமுத் திரட்டாதி பூரட் டாதி
பொருந்தியே இரவிநிற்க இலக்கனமு மாகிற்
பாரரசர் நிகராவான் பகர்மூன்றிற் பத்திற்
பவராகு இருந்திடினும் பிரதாபி யாவன்
வீரமுள்ள விக்கிரமம் தனத்தின்மதி நிற்க
மிக்கபத்திற் சேயிருக்க புகர்கேந்திர மேனும்
நீரதனில் உதயத்தில் சாமிநிற்கப் பாவர்
நீடுமுப செயமுறினும் பிரதாப னாவன். (493)

(இ-ள்.) பூரம், உத்திரட்டாதி, பூரட்டாதி நட்சத்திரக் கால்களில் ஒன்றில் சூரியன் இலக்கனத்தில் நிற்க, இச்சாதகன் மன்னர்களுக்கு நிகரான பெருமையை உடையவனாக விளங்குவான். சென்ம இலக்கனாதிபதிக்கு மூன்றாமிடம், பத்தாமிடம் இவற்றில் இராகு இருந்தால், இச்சாதகன் பிரபலமானவனாக இருப்பான். மூன்றாமிடம் இரண்டாமிடம் இவற்றில் சந்திரன் இருக்க, பத்தாமிடத்தில் செவ்வாய் இருக்க, சுக்கிரன் கேந்திரத்தில் இருக்க, சென்ம இலக்கனத்தில் இலக்கனாதிபதி நிற்க பாவக்கோள்கள் ஒன்று, மூன்று, ஆறு, பத்து, பதினொன்று ஆகிய உபசெய வீடுகளில் இருக்க, இச்சாதகன் பிரபலமானவனாக இருப்பான்.

## மன்னன்

சிங்கமீன் இடபம்பெண் தண்டுதனுக் கும்பம்
சேர்க்குமிந்த ஏழினுமல் லதுமேடம் சிங்கம்
பொங்குகன்னி துலாங்கும்ப மிவ்வைந்தி லாமற்
போற்றுமீன் ஏறுதண்டு கோலிந்த நாலிற்
தங்கியகோள் ஏழுநிற்க மதியோரை உதிக்கிற்
தார்வேந்த னேயாவன் நாலுகேந் திரமும்
பங்கமிலாச் சுபரிருக்கச் சாமிபல மாகிற்
பார்த்திபனா குவன்இலைப் பழித்தசெங்கண்
மயிலே! (494)

*(இ-ள்.)* சிம்மம், மீனம், இடபம், கன்னி, மிதுனம், தனுசு, கும்பம் ஆகிய ஏழு இராசிகளிலும் அல்லது மேடம், சிங்கம், கன்னி, துலாம், கும்பம் இந்த ஐந்து இராசிகளிலும் அல்லது மீனம், இடபம், மிதுனம், துலாம் இந்த நான்கு இராசிகளிலும் ஏழு கோள்களும் இருக்க, சந்திர ஓரையில் பிறக்க, இச்சாதகன் மன்னனாக இருப்பான். நான்கு கேந்திரங் களிலும் சுபக்கோள் இருக்க, இலக்கனாதிபதி பலமாக இருந்தால், இச்சாதகன் மன்னவனாவான்.

## இதுவுமது

*கேந்தி ரத்திற் புதனிருக்கப் பாக்கியன்*
*கூடப் பார்க்க கீர்த்தி தன்னில்*
*ஆய்ந்த குருவி ருக்கின் மன்ன*
*னாமிலக் கனத்தி நீசரதனக் குள்ளான்*
*வாய்ந்த உச்ச இராசி மதியுடன்*
*கூடவே பார்க்க மருவு நாளில்*
*ஆய்ந்த கருமந் தன்னிற்கா மத்திற்*
*சுபரி ருக்கில் அரச னாமே.* *(495)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்குக் கேந்திரத்தில் புதன் இருக்க, ஒன்பதாமிடத்திற்கு அதிபதி ஒன்றுகூட அல்லது பார்க்க, சென்ம இலக்கனத்தில் குரு இருக்க, இச்சாதகன் மன்னனாக விளங்குவான். சென்ம இலக்கனத்தில் நீசக்கோள் நிற்க, இலக்கனாதிபதி உச்ச இராசியில் சந்திரனுடன் கூடி இருக்க அல்லது பார்க்க, பத்தாமிடத்தில், ஏழாமிடத்தில் சுபக்கோள் இருக்க, இச்சாதகன் மன்னனாவான்.

## ஆக்கினாதரன்

பகரிரவி சேய்மாலும் கூடிடினும் மதியிரவி
புந்தி வெள்ளி
நிகரிலொன்றிற் கூடிடினும் கருமேசன் சனியுடனே
நெருங்கிக் கூடி

பகருமட்ட மாதிபனே பார்த்தாலும் சாமிகுரு
பானு மந்தன்
தகமைபெற உபசெயத்திற் கூடிநிற்கில் ஆக்கினா
தரனே என்பார். (496)

(இ-ள்.) சூரியன், செவ்வாய், புதன் ஆகிய மூன்று கோள்களும் ஒன்றுகூடி இருந்தாலும் சந்திரன், சூரியன், புதன், வெள்ளி ஆகிய நான்கு கோள்களும் இலக்கனத்தில் கூடி இருந்தாலும், பத்தாமிடத்திற்கு அதிபதி, சனியுடன் கூடி இருக்க, அவனை எட்டாம் இடத்திற்கு அதிபதி பார்த்தாலும் இலக்கனாதிபதி, குரு, சூரியன், சனி ஆகிய நான்கு கோள் களும் இலக்கனம், மூன்று, ஆறு, பத்து, பதினொன்று ஆகிய வீடுகளில் ஒன்றில் கூடி இருந்தால், இச்சாதகன் ஆக்கினாதரனாக விளங்குவான்.

குறிப்பு: ஆக்கினாதரன் என்பதன் பொருள் விளங்கவில்லை.

## உசிதன்

ஆனபத்திற் சேயிருக்க அதற்குடையோன் உச்சமுற
அட்ட மத்தோன்
தானடுத்துப் பார்த்திடினும் இரவிமதி பொன்கூடித்
தருலா பத்திற்
ஈனமிலாப் பாக்கியத்தில் இருக்கத்தீ யோர்பார்வை
இல்லா தாகி
ஊனமில்லா வாக்கினால் உரந்தரனென் றுரைக்கவரும்
உசித னாமே. (497)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பத்தாம் இடத்தில் செவ்வாய் இருக்க, பத்தாம் இடத்திற்கு அதிபதி உச்ச வீட்டில் இருக்க, எட்டாம் வீட்டிற்கு அதிபதி அவனைப் பார்த்தாலும், சந்திரன், சூரியன், குரு ஆகிய மூன்று கோள்களும் ஒன்றுகூடி பதினோராமிடத்தில் அல்லது ஒன்பதாமிடத்தில் இருக்க, தீயக்கோள்களின் பார்வை இல்லாமல் இருக்க, இச்சாதகன் வாக்கினால் உரந்தரனென்று கூறவரும் உசிதனாக விளங்குவான்.

குறிப்பு: உரந்தரன் பொருள்விளங்கவில்லை.

## சொன்ன சொல் காப்பவன்

குறியுடன் இரண்டு மூன்று
கோளுச்ச மாகப் பாவர்
நெறியோடு கூடி நிற்க
நீடுஞ்சா மியும்ப லக்கில்
அறிவொடு நீதி தப்பா
வாக்கினஆ தரனாம் என்பர்
மறிகடல் அமுத நஞ்சை
மதனம்பை நிகர்கண் ணாளே ! (498)

(இ-ள்.) அலைகளையுடைய திருப்பாற்கடலில் கடைந்த அமுதத்தையும் விஷத்தையும் மன்மதனின் அம்பையும் ஒத்த கண்களையுடைய பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடம், மூன்றாமிடம் இவற்றிற்கு அதிபர்கள் உச்சமாக அவர்களோடு பாவக்கோள்கள் கூடி இருக்க, இலக்கனாதிபதி பலம்பெற்று விளங்க, இச்சாதகன் நீதி தவறாது சொன்ன சொல்லைக் காப்பவனாக விளங்குவான்.

## வீரனாக விளங்குபவன்

மற்றுதயம் இலக்கனாங் கிசஞ்சாமி அங்ச
மதிபொன்வர்க்கமுற் றோறுநண்டு தேள்மீன்
முற்றவர்க்கம் எய்திடப்பத் துடையோனைப் பார்க்க
உடன்கூட வலதுகரு மேசனின்ற வர்க்கம்
பெற்றிடச்சா மிக்குமித்திர மாய்க்கூடப் பார்க்கப்
பேசுமிரா சித்தன்னில் இரவிசேய் பொன்னன்
சொற்றவர்க்க முற்றறியும் வில்லினிய வர்க்கம்
தொடர்ந்திருக்கிற் சத்திரியன் தோகையிளங்
குயிலே! (499)

(இ-ள்.) மயிலின் தோகையை ஒத்த கூந்தலையும் இளமையான குயிலின் குரலையும் கொண்ட பெண்ணே! இலக்கனம், இலக்கனாங்கிசம், இலக்கனாதிபதி அங்கிசம்

சந்திரன் ஆகியவை குரு வர்க்கமுற, கடகம், விருச்சிகம், மீனம் இதே வர்க்கம் அடைய, பத்தாம் இடத்திற்கு அதிபதி இவர்களைப் பார்க்க அல்லது கூடி நிற்க, பத்தாம் இடத்திற்கு அதிபதி நின்ற வர்க்கம் இலக்கனாதிபதிக்கு நட்பாக ஒன்றுகூட அல்லது பார்க்க, இராசியில் சூரியன், செவ்வாய், குரு வர்க்கம் இருக்க, தனுசில் சுபக்கோள் வர்க்கம் வர இச்சாதகன் சத்திரியனாக விளங்குவான்.

## சாதகனின் குலம்

விளம்புமிவர் புதன்வர்க்க மிதுனதுலாக் கும்பம்
மேவிநிற்கில் வைசியனாம் இவர்கள்வெள்
ளிவர்க்காய்த்
துலங்குகன்னி மகரவர்க்க மாகிற்சூத் திரனும்
தொடுமிவர்கள் சனிவர்க்க முறிற்சங்ர சாதி
முழங்கியவர்கள் பாம்புவர்க்க முறில்நீசச் சாதி
முற்றிவர்சேய் வர்க்கமுறின் மிலேச்சரெனும் சாதி
வளம்பெறும்பங் கயப்பொகுட்டில் அரசிருக்கும் தேனே
கணிதநூல் வகுத்துரைத்த வாறே. *(500)*

*(இ-ள்.)* செழுமையான தாமரை பீடத்தில் வீற்றிருக்கும் இனிய திருமகளை ஒத்த பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்குப் பத்தாம் இடத்திற்கு அதிபதி புதன் வர்க்கமுற்று, மிதுனம், துலாம், கும்பம் ஆகிய இராசிகளில் ஒன்றில் இருக்க வைசியானவன். இவர்கள் வெள்ளிவர்க்கம் பெற்று கன்னியில் இருந்தாலும் மகரவர்க்கமாகினும் சூத்திரனாவான். இவர்கள் சனிவர்க்கமுற்றால், சங்கர சாதியாவான். இவர்கள் பாம்புவர்க்கமுற்றால், கீழ்ச்சாதியாவான். இவர்கள் செவ்வாய் வர்க்கமுற்றால் மிலேச்சனாவான். இதனை வடமொழியில் சோதிட நூல்களை ஆராய்ந்தறிந்த அறிஞர்கள் வகுத்துரைத்துள்ளார்கள்.

## தொழில்

*உரைக்குமிரா குடனேறு கோல்மகர வர்க்கம்*
*உற்றகுரு வர்க்கமொடு நீசமுடன் மூடன்*
*நிரைக்குளுறில் அந்தணர்கள் சுயத்தொழிலை விட்டே*
*நீடுசே வகவிர்த்தி நிச்சயமாய்ச் செய்வன்*
*தரைக்குளிவர் தாதுவர்க்க மாய்மூட நீசம்*
*சார்ந்திட்டாற் றாதுவர்க்கத் தொழிலுடையர் என்பார்*
*வரைக்குமிவர் மூலவர்க்கம் தனையடையின் மூல*
*வர்க்கத்தொழில் உடையரென வகுத்தனர்தெள்ளமுதே. (501)*

*(இ-ள்.)* இராகு, இடபம், துலாம், மகர வர்க்கம் பெற, குரு வர்க்கம் நீசம், அஸ்தமனம் பெற்று இருக்க, இச்சாதகன் அந்தணர்களின் சுயதொழிலை விட்டுப் பணியாளாகப் பணியாற்றுவான். தாதுவர்க்கமாய் நீசம், அஸ்தமனம் பெற்றால் தாதுவர்க்கத் தொழிலை உடையவன். மூல வர்க்கத்தை அடைந்து இருந்தால், இச்சாதகன் மூலவர்க்கத் தொழிலை உடையவனாக விளங்குவான்.

குறிப்பு: தாதுக்கோள்கள் - சனி, செவ்வாய், இராகு கேது.
மூலக்கோள்கள் - சுக்கிரன், சூரியன்.

## இதுவுமது

*சொல்லுமிவர் சீவவர்க்கம் தனையடைய நிற்கிற்*
*தொகுப்புடைய சீவவர்க்கத் தொழிலுடையர் என்பர்*
*வல்லமையில் இவர்கடான் மிருகவர்க்கமடையின்*
*வனமிருக வர்க்கமதன் தொழிலுடையர் என்பர்*
*புல்லும்உல கந்தனிலே மற்றுமுள்ள வர்க்கம்*
*பொருந்திநிற்கில் அந்தந்தத் தொழிலுடையர் என்பர்*
*கொல்லுலைவேற் கண்ணுடையாய் ! குருவருளி னாலே*
*குறித்துரைப்பாய் கோள்வலிமை குணம்குறியும்*
*கொண்டே. (502)*

*(இ-ள்.)* கொல்லனுலையில் உள்ள வேலையொத்த கண்களை உடைய பெண்ணே ! பத்தாமிடத்திற்கு அதிபதி சீவவர்க்கத்தை அடைந்து நின்றால், இச்சாதகன் சீவவர்க்கத்

தொழிலையுடையவனாக இருப்பான். இவர் மிருக வர்க்கத்தை அடைந்தால், காட்டு மிருகங்கள் தொடர்பான தொழிலை உடையவனாக இச்சாதகன் இருப்பான். உலகத்தில் மற்ற வர்க்கங்களைச் சார்ந்து நின்றால் அந்தந்தத் தொழிலையுடையவர் என்பதை குருவின் அருளால் கோள்களின் வலிமை, குணம், குறி முதலானவற்றைக் கொண்டு பலன்களைக் குறித்துரைப்பாயாக.

குறிப்பு : சீவக்கோள்கள் - சந்திரன், புதன், குரு

## இதுவுமது

இரண்டுநா லேழுபத்தோ டொன்பதுபன் னொன்றில்
இரவிநிற்க இதற்குடையோன் எதிர்பார்க்கு மேனும்
திரண்டுகதி ருடன்கருமத் தோன்கூடி முன்னம்
செப்புமத்தா னத்திலங்சஞ் செய்திடினும் சூதால்
முரண்டுசுமை எடுத்தல்பயிர் செலவுமாந்த் ரீகம்
முந்துபரி காரம்புல் லறுத்தல்பஞ்ச லோகம்
நிரம்புகா லுள்ளமரம் கொம்புள்ள மிருகம்
நீடுமற்ற வினங்களாற் சீவனமென் றுரையே. *(503)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டு, நான்கு, ஏழு, ஒன்பது, பதினொன்று ஆகிய இடங்களில் ஒன்றில் சூரியன் நிற்க, அந்த இடத்திற்கு அதிபதி சூரியனைப் பார்த்தாலும், சூரியனுடன் பத்தாம் இடத்திற்கு அதிபதி கூடி அந்தத் தானத்தில் அங்கிசம் பெற்றிடினும் இச்சாதகன் சூது, சுமை தூக்குதல், பயிர்த்தொழில், மாந்திரீகம், பரிகாரம், பஞ்சலோகம் பொருட்கள், புல்லறுத்தல், காலுள்ள மரம், கொம்புள்ள மிருகம் போன்றவை தொடர்பான தொழில் களால் பொருள் சம்பாதிப்பான்.

## இதுவுமது

சந்திரனிப் படியிருக்கில் வாணிபம்வே ளாண்மை
சாடியே சொல்லுவதால் சவுளிவகை தன்னால்
உந்தியவெண் கலத்தினால் மாங்கிசத்தால் பொன்னால்
உயர்மறையோர் மாதவரால் வேந்தர்மின்னார் தன்னால்

*வந்திடும்சீ வனமென்பார் புதனிவ்வா றுற்றால்*
*வாத்திமைமாந் திரிகம்புரோ கிதம்சிற்பம் கதைகள்*
*முந்துமெழுத் தறிசமைய மன்னர்நட்புத் தமிழால்*
*மொழிநாட் டியமிந்து வேலையாற்சீ வனமே. (504)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டு, நான்கு, ஏழு, ஒன்பது, பதினொன்று ஆகிய இடங்களில் ஒன்றில் சந்திரன் நிற்க, அந்த இடத்திற்கு அதிபதி சந்திரனைப் பார்த்தாலும் சந்திரனுடன் பத்தாம் இடத்திற்கு அதிபதி கூடி, அந்தத் தானத்தின் அங்கிசம் பெற்றாலும், இச்சாதகன், வாணிபம், வேளாண்மை, ஆடைகள், வெண்கலம், மாமிசம், பொன் போன்றவற்றாலும் அந்தணர், மாதவர், மன்னவர், பெண்கள் போன்றோராலும் பொருள் வருவாய் உடையவனாக இருப்பான். புதன் இவ்வாறு இருந்தால், பாடங்களைச் சொல்லித்தருதல், மாந்திரிகம் முதலானவற்றாலும் புரோகிதம் செய்தல், சிற்பம் செய்தல், கதைகள் கூறுதல், எழுதுதல், தமிழ்மொழி, மன்னரின் நட்பு, நாட்டியம் போன்றவற்றால் இச்சாதகனுக்கு பொருள் வருவாய் கிடைக்கும்.

## இதுவுமது

*பனிபத்திற் மூன்றாறிற் பதினொன்றிற் செவ்வாய்*
*பரிந்துநிற்கில் அதற்குடையோர் பார்த்திடினும் அல்லால்*
*தனிவில்பத் தோன்தனைசெவ் வாய்கூடிய இராசி*
*தனிலங்சம் செய்யிலா சாரிகம்வே ளாண்மை*
*மனமுமா யுதப்பரீட்சை சிற்பரச வாதம்*
*மாந்தரீகம் செப்புமடைத் தொழிலினிற்செம் மணியாற்*
*குணமிலாக் கள்ளரால் சத்துருவால் வெட்டு*
*குத்துக்கு நிற்பதனாற் கூறுவர்சீ வனமே. (505)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு பத்தாமிடம், மூன்றாமிடம், ஆறாமிடம், பதினோராமிடம் இவற்றில் ஒன்றில் செவ்வாய் நின்று, அதற்கு அதிபதி பார்த்தாலும் அல்லது பத்தாம் இடத்திற்கு அதிபதியைச் செவ்வாய் கூடிய

இராசியின் அங்கிசம் பெற்று இருக்க, இச்சாதகனுக்கு ஆசாரியம், வேளாண்மை, ஆயுதப்பயிற்சி, சிற்பம், இரசவாதம், மாந்திரீகம், சமையல்தொழில், சிவந்தமணிகள், திருடரால், பகைவரால், வெட்டு குத்து போன்ற செயல்களால் பொருள் வருவாய் கிட்டும் என்று கூறவேண்டும்.

## இதுவுமது

*பொன்னவனிவ் வண்ணநிற்கில் குருமறையோர் மன்னர்*
*புத்திரரால் உபதேசம் பொன்வாணி பத்தால்*
*சொன்னகன்ம காரியத்தாற் புண்யகதை அதனாற்*
*சுருதிமொழி அதனாற்சீ வனம்வெள்ளி தனக்கே*
*மன்னுகன்று காலிநெய்பாற் றயிரன்னக் கிரையம்*
*வாகனம்வெண் கலமுத்து வெள்ளிவா ணிபத்தால்*
*உன்னுசேய் வர்க்கமுடன் பரியாசந் தூது*
*உயர்நடன சங்கீத விநோதசீ வனமே.* *(506)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு இரண்டு, நான்கு, ஏழு, ஒன்பது, பதினொன்று ஆகிய இடங்களில் ஒன்றில் குரு இருந்தாலும், அந்த இடத்திற்கு அதிபதி குருவைப் பார்த்தாலும், குருவுடன் பத்தாம் இடத்திற்கு அதிபதி கூடி, அந்தத் தானத்தின் அங்கிசத்தைப் பெற்றாலும் இச்சாதகன், குரு, அந்தணர், மன்னர், புத்திரர்கள், உபதேசம், பொன் வாணிபம், கர்மகாரியம், புண்யகதை, வேதங்கள் போன்ற வற்றால் பொருள் வருவாய் பெறுவான். சுக்கிரன் இவ்வாறு இருந்தால், கால்நடைகள், நெய், பால், உணவு வியாபாரம், வாகனம், வெண்கலம், முத்து, வெள்ளி வாணிபம் குழந்தைகளிடம் பரிகாசம், தூது, நடனம், சங்கீதம், விநோத வித்தை போன்றவற்றால் பொருள் வருவாய் பெறுவான்.

## இதுவுமது

*சனியனுக்குச் சேவகமெள் ளுபருத்தி யல்லால்*
*தாதுறுவா தங்கள்சிறு தான்யம்சிற் பத்தில்*
*அனியாயம் உயிர்வதைத்தல் சுமையெடுத்தல் சோரர்*
*அடித்துப்பறிப் பதிற்றிசையிற் கூலிவே லையினாற்*

கனியாத மாவேறி இரும்புகொண்டு விற்றல்
கருநீல மணிக்கிரயம் கலத்தினால் உண்ணற்
றொனியான புவிமீதிற் சீவனமே செய்வன்
சூதைவருத் துங்களபத் துணைமுலையி னாளே !(507)

(இ-ள்.) சூதாட்டக் காய்களைக் காட்டிலும் உயர்ந்த சந்தனம் பூசப்பட்ட இரு தனங்களை உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு இரண்டு, நான்கு, ஏழு, ஒன்பது , பதினொன்று ஆகிய இடங்களில் ஒன்றில் சனி இருந்தாலும், அந்த இடத்திற்கு அதிபதி சனியைப் பார்த்தாலும், சனியுடன் பத்தாம் இடத்திற்கு அதிபதி கூடி, அந்தத் தானத்தின் அங்கிசத்தைப் பெற்றாலும் இச்சாதகன், சேவகம், எள், பருத்தி, தாது, வாதங்கள், தானியம், சிற்பம், உயிர்வதை, சுமை தூக்குதல், திருட்டு, அடித்துப்பறித்தல், கூலிவேலை செய்தல், விலங்குளில் ஏறிச்செல்லுதல், இரும்பு விற்றல், நீலமணிகள் விற்றல், கலம், உண்ணல் போன்றவற்றால் பொருள் வருமானம் பெறுவான்.

## இதுவுமது

மொழியுமொன்று நாலொன்பான் இராகுநிற்க அல்லால்
முன்சொன்ன படியங்ச முறிற்சோரத் தாலும்
ஒழியும்வா யடித்தல்விட வித்தைபல வேடம்
உயர்கலக வேலையினாற் நீசரிற்சீ வனமே
பழிசையுங்கே துவுக்குத்தான் தரகுவா ணிபத்தாற்
பதிவியத்தால் வஞ்சனையாற் பகர்மந்தி ரத்தால்
அழிவுசெய்யும் நீசவிர்த்தி யாலும்சீ வனமாம்.
அறுபதங்கள் இடைவிடா மணிமலர்ப்பூங்
குடிலே! (508)

(இ-ள்.) வண்டுகள் இடைவிடாது பொய்க்கின்ற தேன்நிறைந்த அழகான மலர்களைச் சூடியுள்ள கூந்தலை யுடைய பெண்ணே ! சென்ம இலக்கனம், நான்காமிடம், ஒன்பதாமிடம் இவற்றில் ஒன்றில் இராகு நிற்க, வீண் வார்த்தை பேசுவதாலும், விஷம் தொடர்பான வித்தை

களாலும், வேடமிடுவதாலும், கலக வேலைகள் செய்வத னாலும், தீயோரினாலும் பொருள் வருவாய் உடையவனாக இருப்பான். கேது இவ்விடங்களில் இருந்தால், தரகு வேலை செய்வதனாலும், வணிகத்தாலும் வஞ்சனையாலும், மந்திரம் செய்வதனாலும், தீயவர்களின் உதவியினாலும் பொருள் வருவாய் உடையவனாக இருப்பான்.

**இதுவுமது**

*அஞ்சினிற் குளிகன் மதியிருந் தாலும்*
*ஆகிய ரெண்டினில் இராகு*
*மிஞ்சிநின் றிடினும் மதிதனக் கிரண்டின்*
*மிக்கவே சுபரிருந் தாலும்*
*குஞ்சித மதிக்கு முன்சுபர் இருக்கிற்*
*கோதறத் தெளிந்தமாந்த் ரீகம்*
*நஞ்சிநிற் கருகி அமுதென வெளுத்து*
*நலம்பெறச் சிவந்தநன் னுதலே !* *(509)*

*(இ-ள்.)* நஞ்சினால் கருகியது போன்ற நீலநிற விழிகளையும் அமுதினை ஒத்த இனிய மொழியையும், வெளுத்த சிவந்த நல்ல நெற்றியினையும் உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாம் இடத்தில் குளிகன், சந்திரன் இருந்தாலும் இரண்டாமிடத்தில் இராகு நின்றாலும் சந்திரனுக்கு இரண்டாமிடத்தில் சுபக்கோள் இருந்தாலும், சந்திரனுக்கு முன்னே சுபக்கோள் இருந்தாலும் இச்சாதகன், மாந்திரீகம் செய்வான்.

**இதுவுமது**

*உதயத்தில் வியத்திற் கிரகங்கள் ஏழு*
*உண்மையாய் உறைந்திடி லேனும்*
*சிதைவற்ற கோட்கள் நான்கிரா சியினிற்*
*செருக்குற உறைந்துநின் றாலும்*
*இதயத்தால் உதயம் மூன்றிற்சேய் இருக்கில்*
*எய்திடும் பூமிலா பங்கள்*
*புதைவுற்ற பரிநாட் புதன்புகர் இருக்கில்*
*புகலுவர் கிரிசைலா பமுமே.* *(510)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்தில், பன்னிரண்டா மிடத்தில் இராகு, கேதுக்களைத் தவிர ஏழு கோள்களும் இருந்தாலும். பலம்பெற்ற கோள்கள் ஏதேனும் நான்கு இராசிகளில் உறைந்து நின்றாலும், சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில் செவ்வாய் இருக்க, இச்சாதகனுக்கு பூமியினால் இலாபங்கள் கிட்டும். அசுபதி நட்சத்திரத்தில் புதன், சுக்கிரன் இருக்க இச்சாதகனுக்குப் பொருள் வருவாய் கிட்டும்.

**இதுவுமது**

*மகசிரம்பூ ராடமுத் திரட்டாதி அவிட்டம்*
*மன்னுமா யிலியமொடு மருவுகார்த் திகையிற்*
*புகருறினும் திகழுமா திரையிற்சுன் இராகு*
*பூசத்தில் வெள்ளிசெவ்வாய் பொருந்தியுறைந் திடினும்*
*புகலும்விசா கத்தில்வெள்ளி புதன்சனிநின் றிடினும்*
*பூரமுத்ரம் சதயத்தில் கதிரவன்மே விடினும்*
*பகருமத்தத் தினில்வெள்ளி புந்தியிருந் தாலும்*
*பண்பான கிரிசைலா பங்கள்பலித் திடுமே. (511)*

(இ-ள்.) மிருகசீரிடம், பூராடம், உத்திரட்டாதி, அவிட்டம், ஆயிலியம், கார்த்திகை ஆகிய நட்சத்திரக் கால்களில் சுக்கிரன் இருந்தாலும் திருவாதிரை நட்சத்திரக் கால்களில் சனியும், இராகுவும் இருந்தாலும் பூச நட்சத்திரக் களில் சுக்கிரன், செவ்வாய் நின்றாலும், விசாக நட்சத்திரக் கால்களில் சுக்கிரன், சனி, புதன் நின்றாலும், பூரம், உத்திரம், சதய நட்சத்திரக் கால்களில் சூரியன் இருந்தாலும், அஸ்த நட்சத்திரக் கால்களில் சுக்கிரன், புதன் ஆகிய கோள்கள் இருந்தாலும் இச்சாதகனுக்குப் பயிர்த்தொழில் செய்வதால் பொருள் வருவாய் கிடைக்கும்.

**இதுவுமது**

*மாமிகு மேடம் தோன்ற*
*மன்னுசேய் இருக்கப் பார்க்கப்*
*பூமிலா பந்தான் உண்டாம்*
*பொருஞ்செவ்வாய் மறைந்து நிற்க*

தேவமிகு பூமி இலாபம்
மிதுனவெண் மதியைச் செவ்வாய்
சேமிப்பாய் பார்க்கின் மாதே
செப்புவா ணிபமென் றோதே. (512)

(இ-ள்.) சென்ம இலக்கனம் மேடஇராசியாக, அதில் செவ்வாய் இருக்க அல்லது செவ்வாய் மேட இராசியைப் பார்க்க, இச்சாதகனுக்கு பூமியால் வருமானம் கிட்டும். செவ்வாய் மறைந்து நின்றாலும் இச்சாதகனுக்கு பூமியினால் இலாபம் கிடைக்கும். மிதுன இராசியில் இருக்கும் சந்திரனைச் செவ்வாய்ப் பார்த்தால், இவன் செம்பினை வியாபாரம் செய்யக்கூடியவனாக விளங்குவான்.

## இதுவுமது

கடக மதியைச் சனிபார்க்கிற்
கருதும் இரும்பு வியாபாரம்
அடரும் இரவி தனக்குமுன்னே
அமைச்சன் தானே இருந்திடினும்
இடர்தீர் கதிர்கும் பச்செவ்வாய்
இருந்தால் மிகுந்த வியாபாரி
படரும் துலையில் மதியைப்பொன்
பார்க்கிற் செம்பொன் வியாபாரி. (513)

(இ-ள்.) கடக இராசியில் உள்ள சந்திரனைச் சனி பார்த்தால், இச்சாதகன் இரும்பு வியாபாரியாக இருப்பான். சூரியனுக்கு முன்னால் குரு இருந்தாலும் சூரியன், கும்ப இராசியில் செவ்வாயுடன் சேர்ந்திருக்க இச்சாதகன் மிகுந்த உலோகங்களை விற்கும் வணிகனாக இருப்பான். துலாம் இராசியில் இருந்த சந்திரனைக் குரு பார்க்க, இச்சாதகன், பொன்னை வியாபாரம் செய்யும் வணிகனாக இருப்பான்.

## இதுவுமது

தேளின் மதியைப் புகர்பார்க்கிற்
சிறக்கும் தாது வாணிபனாம்
சூளிற் பாரிற் புதனுக்கும்
சோதி இரவி புதனுக்கும்

வாளி தருரோ கணிசேய்க்கு
மன்னா திரையில் குருவுக்கு
மாளில் விசாகம் குருபுகர்க்கு
மலியும் வியாபா ரியனென்பார். (514)

(இ-ள்.) விருச்சிக இராசியில் உள்ள சந்திரனை சுக்கிரன் பார்க்கில், இச்சாதகன் தாதுப்பொருட்களை வியாபாரம் செய்யும் வணிகனாக இருப்பான். புதனுக்கும், சுவாதி நட்சத்திரக்காலில் உள்ள சூரியன், உரோகணி நட்சத்திரக் காலில் உள்ள செவ்வாய் திருவாதிரை நட்சத்திரக்காலில் உள்ள குரு, சுக்கிரன் ஆகியோர் உள்ள சாதகன் வணிகனாக இருப்பான்.

இதுவுமது

பூசம் சதயம் தனிற்சனிக்கும்
புகலா திரையிற் குருவுக்கும்
பேசும் பூரம் குருவுக்கும்
பேரா யிலியம் புதனுக்கும்
வாசந் தருமுத் திராடமுடன்
வரும்பூ ராட ரவிதனக்கும்
வீசும் மிருக சீரிடத்தில்
வேந்தன் தனக்கும் வியாபாரி. (515)

(இ-ள்.) பூசம், சதயம் ஆகிய நட்சத்திரக் கால்களில் ஒன்றில் சனி இருந்தாலும், திருவாதிரை, பூச நட்சத்திரக் கால்களிலொன்றில் குரு இருந்தாலும், ஆயிலிய நட்சத்திரக் கால்களிலொன்றில் புதன் இருந்தாலும், உத்திராடம், பூராடம், மிருக சீரிட நட்சத்திரக் கால்களிலொன்றில் சூரியன் இருந்தாலும் இச்சாதகன் வியாபாரியாக விளங்குவான்.

### வாணிகன்

மின்னிய மதிக்குப் பத்தில்
வெள்ளிசேய் சனிநின் றாலும்
அன்னிய தேசம் தன்னில்
அநேகவா ணிபங்கள் செய்வன்
மன்னிய கருமத் தோனும்
மாலுமித் திரரா னாலும்
துன்னிய துலாம் பிறக்கிற்
சொல்வர்வா ணிபம்மென் றேதான். *(516)*

(இ-ள்.) சந்திரனுக்குப் பத்தாமிடத்தில் சுக்கிரன், செவ்வாய், சனி ஆகிய மூன்று கோள்கள் நின்றால் இச்சாதகன், வெளிநாடுகளில் பல வாணிபங்கள் செய்து பொருளை ஈட்டுவான். சென்ம இலக்கனத்திற்குப் பத்தாம் இடத்திற்கு அதிபதியும் புதனும் நட்புறவுடன் துலா இராசியில் இருக்க, இச்சாதகன், நல்ல வணிகனாக விளங்குவான்.

### விலங்கிடப்படுபவன்

ஏந்திய ஒன்றோ டாறுக்
கிறைவரும் சனிசேயுங் கூடிக்
கேந்திர கோணம் தன்னைக்
கிட்டினும் இவர்கள் பாம்பைச்
சேர்ந்திடில் அரச ராலும்
தேடும்சத் துருவி னாலும்
பாந்தள்போல் மிகந டுங்கிப்
பந்தனப் படுவன் தானே. *(517)*

(இ-ள்.) சென்ம இலக்கனாதிபதி, ஆறாமிடத்திற்கு அதிபதி, சனி ஆகியோர் ஒன்றுகூடி கேந்திர திரிகோணங்களில் இருந்தாலும் இவர்களோடு பாம்பு இருந்தாலும், பாம்பைப் போல் மிகவும் நடுங்கி மன்னராலும் பகைவராலும் விலங்கிடப்படுபவன்.

## மோட்சம்

ஆட்சி யான கருமமீ
ராறிற் செவ்வாய் புதனிற்கின்
மோட்ச மடைவன் தன்மகன்ம
முதல்வர் நாலு கிரகமுடன்
சூட்சி யாகக் கூடிடினும்
துய்ய மோட்சம் தனையடைவன்
காட்சி யான சோதிடநூல்
கவிஞ ருரைத்த படியிவையே. (518)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பத்தாம் இடத்திற்கு அதிபதி ஆட்சிபெற்று விளங்க, பன்னிரண்டாம் இடத்தில் செவ்வாய், புதன் இருக்க, இச்சாதகன் மோட்சம் அடைவான். ஒன்பதாமிடம், பத்தாமிடம் ஆகிய இடங்களில் ஒன்றில் நான்கு கிரகங்கள் ஒன்றுகூடி இருந்தாலும் இச்சாதகன் மோட்சம் அடைவான். இதனைச் சோதிடநூல் கற்றுவல்ல பெரியோர்கள் கூறியுள்ளார்கள்.

## இதுவுமது

பத்துக் குடையோன் குருவாகிப்
பத்தி லிருக்கப் பன்னிரண்டை
சித்த முறவே சுபர்பார்க்கிற்
தேவ னாவன் கடகத்தில்
வைத்தத் தனுரங் கிசமாக
மறையோன் இருக்க அல்லாமல்
மெத்த நால்வ ருடன்கூடி
மென்கேந் திரத்திற் பரமபதம். (519)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பத்தாமிடத்திற்கு அதிபதி குருவாகிப் பத்தாமிடத்தில் இருக்க, பன்னிரண்டா மிடத்தைச் சுபக்கோள் நோக்க, இச்சாதகன் தேவனாவான். கடகத்தில் தனுரங்கிசம் பெற்று குரு இருக்க, அல்லது குரு நான்கு கோள்களுடன் கூடி கேந்திரத்தில் இருக்க, இச்சாதகன் மோட்சத்தை அடைவான்.

**இதுவுமது**

ஒள்ளிய உதயம் தன்னில்
ஒண்குரு இருக்க ஏழில்
வெள்ளிநின் றிடவே கன்னி
வீட்டில்வெண் மதியி ருக்க
தெள்ளிய மேடாங் சத்திற்
சிலையிலக் கனம்பி றக்கில்
தெள்ளிய பவத்தை நீக்கி
வியன்மோட்சம் பரம பாதம். *(520)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்தில் குரு இருக்க, ஏழா மிடத்தில் சுக்கிரன் இருக்க, கன்னி இராசியில் சந்திரன் இருக்க மேடாங்கிசத்தில் தனுசில் இலக்கனம் பிறக்க, இச்சாதகன் இப்பிறவி துன்பத்தை நீக்கி மோட்சத்தை அடைவான்.

**உலோகாதிபத்தியம்**

செய்ய உதயம் தனிற்பொன்னோன்
தெய்வ லோகாங் கிசத்திருக்க
வெய்ய செவ்வாய் கதிர்பலக்கின்
மீண்டு மனித ருலகாள்வன்
துய்ய வெள்ளி மதிபலக்கில்
தொழுதே பெறுவன் பிதுருலகம்
பெய்யு மேடங் கடகவரை
பிறக்கிற் பெறுவன் பூலோகம். *(521)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்தில் குரு தேவலோகாங் கிசத்தில் ஏறி இருக்க, செவ்வாய், சூரியன் பலம்பெற்று விளங்க, இச்சாதகனுக்கு மறுபிறவி உண்டு. சுக்கிரன், சந்திரன் பலம்பெற்று விளங்க, இச்சாதகன் மீண்டும் பிறவி எடுப்பான். மேடம் முதல் கடகம் வரை உள்ள இராசிகளில் பிறந்தவர்கள் மீண்டும் பிறவி எடுப்பார்கள்.

## சொர்க்கத்தை அடைபவன்

நடைகொள் சிங்கம் முதல்நாலு
இராசிப் பிறக்கில் இராசாங்கம்
அடைவன் தனுசு முதல்மீனம்
வரையிற் பிறக்கில் சுவர்க்கமுளன்
விடையும் வியத்தில் உச்சர்நிற்க
வீரன் கூடச் சபர்பார்க்க
வடையும் எட்டிற் றீயநல்லோர்
அணுகிற் சுவர்க்க் போகமென்பார். *(522)*

*(இ-ள்.)* சிம்மம், கன்னி, துலாம், விருச்சிக இராசிகளில் பிறந்தவர்கள் அரசாங்க நன்மை அடைவார்கள். தனுசு, மகரம், கும்பம், மீன இராசிகளில் பிறந்தவர்கள் சுவர்க்கத்தை அடைவார்கள். சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டாம் இடத்தில் உச்சக்கோள் இருக்க, செவ்வாய் ஒன்றாகக் கூடி இருக்க, இவர்களைச் சுபக்கோள் பார்க்க, எட்டாமிடத்தில் தீயக்கோள்களும் சுபக்கோள்களும் கலந்து நிற்க, இச்சாதகன் சுவர்க்கத்தை அடைவான்.

## நரகத்தை அடைபவன்

தோற்றிய சனியும் மாலும்
துடியொடு பலன்பெற் றாலும்
சாற்றிய வியத்தோன் பாவ
சஷ்டியங் கிசமே யாக
வேற்றிய தீக்கோ ளானோர்
எதிருற பார்க்கு மேனும்
நீற்றிய நரக மெய்தி
நெடுங்காலம் இருப்பன் தானே. *(523)*

*(இ-ள்.)* சனியும் புதனும் பலம்பெற்று விளங்கினாலும் சென்ம இலக்கனத்திற்கு பன்னிரண்டாம் இடத்திற்கு அதிபதி பாவ சஷ்டியங்கிசம் பெற்று விளங்க, தீயக்கோள்கள் இவர்களைப் பார்க்க, இச்சாதகன் நரகத்தை அடைவான்.

## இதுவுமது

பாசமாம் வியத்தா னத்தான்
பாவச்சேத் திரமே யாகி
நீசக்கோள் இருக்கப் பின்னும்
நீருமட் டந்தோன் மாந்தி
வாசமாய்க் கூடி நிற்க
மருவும்ஆ றுடையோன் பார்க்கில்
ஈசனார் உள்ள மட்டும்
எய்துவர் நரகம் தானே. (524)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரெண்டாம் இடம் பாவ வீடாகி, பாவக்கோள் அதில் இருக்க, எட்டாமிடத்திற்கு அதிபதி, மாந்தியுடன் கூடி நிற்க, இவர்களை ஆறாம் இடத்திற்கு அதிபதி பார்க்கில், இச்சாதகன் நரகை அடைவான்.

## பத்தாம் பாவத்தில் சூரியன், சந்திரன் நின்ற பலன்

ஒருபத்தில் இரவிநிற்கில் வாகனப்ர சித்தன்
உரவர்கூட் டானவித்தை பிதுர்வழியிற் கன்மி
மருநல்ல தருமபுத்தி மான்மன்னர் சேவை
மைந்தரைப் பெற்றிழப்பன் காரியச்ச மர்த்தன்
திருமதிபத் துறிற்றொடுத்த காரியத்தில் வல்லன்
தீர்த்தயாத் திரைக்கல்வி மாதுர்வழி கன்மி
கருதியசொற் செலவுமிகு தனதான்ய இலாபம்
காட்சிசகந் திரிமோகம் நன்மைதனம் பலவான். (525)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பத்தாமிடத்தில் சூரியன் இருந்தால், இச்சாதகன் வாகனங்களை உடையவன். கூட்டாகத் தொழில் செய்பவன். தந்தை வழியிலான தொழிலைச் செய்வான். தரும சிந்தனை உடையவன். அறிவாளி; அரசாங்கப் பணி உடையவன்; புத்திரர்களைப்

பெற்று இழப்பான்; செய்யும் செயல்களைத் திறம்பட முடிப்பவன். சென்ம இலக்கனத்திற்குப் பத்தாமிடத்தில் சந்திரன் இருக்க, இச்சாதகன், தொடங்கிய காரியம் எதுவாக இருந்தாலும் திறமையுடன் செய்பவன். புனித யாத்திரை செல்பவன்; கல்வியில் மேன்மையுள்ளவன்; தாய்வழியில் தொழிலைச் செய்பவன்; தனதான்ய இலாபம் உடையவன்; பெண்களிடம் விருப்பம் கொண்டவன்; நன்மை செய்பவன்; வலிமையுடையவன்.

### பத்தாம் பாவத்தில் செவ்வாய் நின்ற பலன்

*நீடுபத்திற் சேயிருக்கிற் சூரன்தாட் டீகன்*
*நிலமையுளன் அனாசாரன் வெகுசனபூ சிதனாம்*
*தேடுகின்ற பிரதாபி நினைத்தபடி முடிப்பன்*
*செகராசர் சேவைதனம் புத்திரபாக் கியவான்*
*ஈடில்கொடு வருஞ்சோராக் கினிகருவி பயமாம்*
*எக்யாதி கன்மனெனும் இயலுடைய னாகும்*
*கூடுபுரு வச்சிலையும் புயமலர்க்கண் மயிலே !*
*குறிப்புடையர் கணிதத்தோர் கூறினதிவ்*
*வகையே.(526)*

*(இ-ள்.)* ஒன்று சேரும் வில்போன்ற புருவத்தையும், தாமரை மலர் போன்ற கண்களையும், மயிலைப் போன்ற சாயலையும் உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்குப் பத்தாமிடத்தில் செவ்வாய் இருந்தால், இச்சாதகன் தைரியசாலியாக இருப்பான். பெரிய உருவம் கொண்டவன். நல்ல நிலையில் வாழ்பவன்; அனாசாரன்; மக்களால் போற்றிப் புகழப்படுபவன்; நினைத்த காரியத்தை முடிப்பவன்; மன்னரிடம் சேவை செய்பவன். செல்வம் உடையவன்; பாக்கியங்களைப் பெற்றவன். திருடர்களாலும் தீயாலும், ஆயுதங்களாலும் கண்டம் உடையவன்; எக்யம் முதலான தொழிலை உடையவன் என்று சோதிடக்கலையில் வல்லவர்கள் எடுத்துரைத்துள்ளார்கள்.

## பத்தாம் பாவத்தில் புதன் நின்ற பலன்

*ஆனபத்திற் புதனிருக்கிற் பிரதானி சேவை*
*ஆசாரம் பிரதாபி பரதேச வாசம்*
*ஞானபுத்தி குருதெய்வம் பிராமணர்தன் பத்தி*
*நல்லகல்வி நித்யகன்மி தனுமுடையன் சீவன்*
*தானமுறு சாத்திரிகன் நினைத்தபடி முடிப்பன்*
*சரசவினோ தம்பகடி வித்தையிற்பிர சங்கன்*
*மானமுறு சத்தியவான் மன்னவர்ச மானன்*
*வாலிபர்க்கு மதனகலை வருத்தியதெள் ளமுதே! (527)*

(இ-ள்.) வாலிபர்களுக்குக் காதல்நோயை ஏற்படுத்தும் திகட்டாத தெள்ளமுதம் போன்றவளே! சென்ம இலக்கனத்திற்குப் பத்தாமிடத்தில் புதன் இருக்க, அரசாங்கப்பணி உடையுவன். ஆசாரம் மிக்கவன்; புகழ் உடையவன்; பிறநாடுகளுக்குச் சென்று தங்குபவன்; ஞானம், அறிவு உடையவன்; குரு, தெய்வம் மற்றும் பிராமணர்களிடத்து பக்தி கொண்டவன்; நல்ல கல்விமான்; தினமும் செய்வனவற்றைச் சிறப்புடன் செய்பவன்; செல்வன்; சாத்திரங்களைக் கற்றவன். எண்ணியவற்றைத் திறம்பட முடிப்பவன்; பெண்கள் விஷயத்தில் ஆர்வம் உடையவன்; பேச்சுக்கலை தொடர்புடைய தொழிலைக் கொண்டவன்; மானமுடையவன்; சத்தியவான்; மன்னர்க்கு நிகரான பெருமையுடன் திகழ்பவன்.

## பத்தாம் பாவத்தில் குரு நின்ற பலன்

*நிகர்பத்திற் குருவிருக்கிற் தொடுத்தகாரியத்தை*
*நிறைவேற்றுஞ் சமத்தன்வா கனமுடைய சுமுகன்*
*பகர்தனவான் தன்மவான் கல்விதீர்க் காயுள்*
*பார்த்திபர்பூ சிதனாகும் மதிக்குப்பத் துற்றால்*
*சுரதன்ம தீர்க்காயுள் பிரசித்தன் கன்மி*
*தூயமந்திரி பிரதாபி காரியவல் லவனாம்*
*செகமன்னர் சமானவான் கீர்த்திசெயம் உடையன்*
*சிவபூசை தீர்த்தயாத் திரையுடையன் என்பார். (528)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பத்தாம் இடத்தில் குரு இருந்தால், இச்சாதகன் எடுத்த காரியத்தை நிறை வேற்றும் சாமர்த்தியம் உடையவனாக இருப்பான். எல்லோரிடமும் சுமுகமாகப் பழகக்கூடியவன்; செல்வன்; தர்மவான்; கல்வி கற்றவன்; தீர்க்காயுள் கொண்டவன்; மன்னர்களால் மதிப்பளிக்கப்படுபவன். குரு, சந்திரனுக்குப் பத்தாம் இடத்தில் இருந்தால், இச்சாதகன் தர்மவான்; தீர்க்காயுள் கொண்டவன்; பிரபலமானவன்; தொழி லுடையவன்; மந்திரி; புகழ் உடையவன்; காரியங்களில் வல்லவன்; மன்னர்க்கு நிகராக பெருமை கொண்டவன்; வெற்றி உடையவன்; சிவபூசை செய்பவன், புனித யாத்திரைக்குச் செல்லக்கூடியவன்.

## பத்தாம் பாவத்தில் சுக்கிரன் நின்ற பலன்

துய்யபத்தில் வெள்ளிநிற்கில் சுமுகன்பூ சிதனாம்
தொடுத்தகா ரியசெயத்தன் கல்விதீர்க் காயுள்
வையமகிழ் யூகிமந்திரி பிரசித்தன் தனவான்
வாகனத்தன் யோகவான் இவன்மதிக்குப் பத்திற்
பையநிற்கில் அழகுதனம் அநேகம்அலங் காரம்
பயிர்ச்செலவு தனலாபம் பவிஷவெகு மானம்
செய்யமட மாதராற் தனலாபம் பிரபு
செலுங்கீர்த்தி பாக்கியவான் திரமுடையன் என்பார். (529)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பத்தாம் இடத்தில் சுக்கிரன் இருக்க, இச்சாதகன் அனைவரிடமும் சுமுகமாகப் பழகக்கூடியவன்; புகழ் உடையவன்; எடுத்த காரியத்தை நிறைவேற்றக் கூடியவன்; கல்விமான்; தீர்க்காயுள் உடையவன்; மதியூகி; மந்திரி; செல்வன்; போற்றப்படுபவன்; வாகனம் உடையவன்; யோகவான்; சுக்கிரன் சந்திரனுக்குப் பத்தாமிடத்தில் இருக்க, அழகன், செல்வன்; இலாபம் உடையவன்; பல பொருள்களை வெகுமதியாகப் பெறுபவன்; பெண்களால் செல்வ வரவு உடையவன்; மன்னனுக்கு நிகரான புகழ்மிக்கவன்; பாக்கியங்களைப் பெற்றவன்; உறுதியானவன்.

### பத்தாம் பாவத்தில் சனி நின்ற பலன்

மந்தனொரு பத்திநிற்கின் மந்திரிபாக் கியவான்
மன்னுகுரு வுடன்தெய்வம் பிராமணர்தன் பக்தி
முந்துகிரா மாதிக்கம் தனலாபம் முன்னே
முழுமதிக்குப் பத்திநிற்கிற் பசுவர்க்க முடையன்
சொந்தமா துருதனக்குச் சத்துருவாம் வயிரம்
சொல்லுமா சாரமன மடிவுதொழில் முடக்கம்
முந்திலெதிர் கன்மிகுல வான்புத்தி யாத்ரை
உடையவனாம் மானமுள்ள வாக்குடையன் தானே. *(530)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்குப் பத்தாமிடத்தில் சனி இருக்க, இவன் மந்திரியாக இருப்பான்; அனைத்துப் பாக்கியங்களையும் பெற்றிருப்பன்; குரு, தெய்வம், பிராமணர் போன்றோரிடம் பக்தியுடன் இருப்பான். கிராமத்தை அதிகாரம் செலுத்தும் உரிமை உடையவனாக இருப்பான். செல்வ இலாபங்களை உடையவனாக இருப்பான். பூரண சந்திரனுக்குப் பத்தாமிடத்தில சனி இருக்க, கால்நடைகளால் இலாபம் உடையவன்; தாயிடம் பகைமை பாராட்டுபவனாக இருப்பவன்; ஆசாரம் உடையவன்; மனதில் துன்பம் கொண்டவன்; தொழிலில் முடக்கம் உடையவன்; நல்ல குலத்தில் தோன்றியவன்; புத்திமான்; விரும்பாத தொழிலைச் செய்பவன்; பயணங்களை உடையவன்; மானஸ்தன்; நல்ல வாக்கினை உடையவன்.

### பத்தாம் பாவத்தில் இராகு நின்ற பலன்

அனையபத்திற் இராகுநிற்கில் அநேககளத் திரமாம்
அற்பபுத்தி ராள்மாட கூடபிர தாபம்
நினையும்உப காரிபிர தாபிபுண் ணியவான்
நீடுசா மர்த்தி தியமுளன் துர்க்கன்மிக் கலகி
வினையமுறு சோரராற் றுட்டனனா சாரன்
வேந்தர்கள் சன்மானன் மன்னர்மிக்க வெகுமானன்
நனைமலர்ப்பூங் குழலின்வண்டு படிந்திடைதான் துவளும்
நாகரிக மடவனமே நறைதருஞ்சந் தனமே. *(531)*

(இ-ள்.) வண்டுகள் மொய்க்கும் தேன்நிறைந்த மலர்களைச் சூடிய துவளுகின்ற இடையினைக் கொண்ட அழகான மட அன்னம் போன்றவளே! மணம் வீசும் சந்தனம் போன்று குளிர்ச்சியான பெண்ணே !சென்ம இலக்கனத் திற்குப் பத்தாம் இடத்தில் இராகு இருந்தால், இச்சாதக னுக்குப் பல மனைவியர் இருப்பார்கள்; சில புதல்வர்கள் பிறப்பர்; பெரிய மாளிகைகள் கட்டுவான்; பெருமை உடையவன்; பிறருக்கு உதவிகள் செய்பவன்; புகழ் உடையவன்; புண்ணியவான்; சாமர்த்தியசாலி; தீயக் காரியங்களையும் செய்பவன்; கலகம் செய்பவன்; திருடர்களால் துன்பமடைவான்; அனாசாரன்; மன்னர் களிடம் வெகுமதி பெறுபவன்.

**பத்தாம் பாவத்தில் கேது நின்ற பலன்**

*நலந்தரு பத்திற் கேதுவே இருக்கில்*
*நற்புத்தி சனவிரோ தத்தன்*
*நலந்திகழ் பலவான் சுதந்தரன் ஞானி*
*தனமுளன் லோபிசஞ் சாரன்*
*துலங்கனா சாரன் சிலேட்டும ரோகி*
*சூரன்சே வகத்தொழில் உடையோன்*
*நலங்கி ருதமிலான் மத்தன்*
*யாசக சீவனம் என்பார். (532)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பத்தாம் இடத்தில் கேதுவே இருக்கில், இச்சாதகன் நல்ல புத்திசாலியாக இருப்பான்; உற்றார் உறவினர்களுக்குப் பகைவனாவான்; பலம் உடையவன்; சுதந்திரமாகச் செயல்படுபவன்; ஞானி; செல்வம் உடையவன்; கருமி; அலைச்சல் கொண்டவன்; அனாசாரன்; சிலேத்தும நோய் கொண்டவன்; தைரியசாலி; வேகத்தொழில் உடையவன்; பிறரிடமிருந்து யாசகமாகப் பொருளைப் பெற்று வாழ்வான்.

குறிப்பு: நலங்கிருதமிலான் பொருள் விளங்கவில்லை.

**பத்தாம் பாவத்தில் குளிகன் நின்ற பலன்**

*கருமத் தானம் குளிகனிற்கிற்*
*கைவிரற் குறைவாம் மனோதுக்கம்*
*பொருந்து கன்மம் பத்தினிலே*
*புகலுங் குளிகன் பவனநிற்கில்*
*உருகும் பிச்சை பிழைப்பாகி*
*ஊனே விற்றுச் சீவனமாம்*
*மிருமை பத்தோன் இரவியங்சம்*
*ஏறின் முன்சொற் பலனாமே.* **(533)**

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு பத்தாமிடத்தில் குளிகன் இருந்தால், இச்சாதகனின் கைவிரல் நீளம் குறைவாக இருக்கும். மனதில் துக்கம் ஏற்படும். பத்தாமிடத்தில் குளிகன் நின்ற இராசிக்கதிபதி நிற்கில் இச்சாதகனுக்குப் பிச்சை எடுத்தலும், மாமிசம் விற்பதும் தொழிலாக இருக்கும். பத்தாமிடத்திற்கு உடையவன் சூரிய அங்கிசம் ஏறி இருந்தாலும் பிச்சை எடுத்தலும் மாமிசம் விற்பதும் இச்சாதகனுக்குத் தொழிலாக அமையும்.

**இதுவுமது**

*அட்டமா திபனே பத்தில்*
*அன்புடன் இருப்பா னாகில்*
*இட்டமாம் பிதுரா லவத்தை*
*எய்துவன் என்ன லாகும்*
*தொட்டலக் கனத்தோர் பத்திற்*
*தோன்றியே பலமாய் நின்றாற்*
*பட்டுநூ லுடையாய் ! சொந்த*
*பாக்கியன் என்ன லாமே.* **(534)**

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்திற்கு அதிபதி பத்தாமிடத்தில் இருந்தால், இச்சாதகன், தந்தையால் துன்பங்கள் எய்துவான். சென்ம இலக்கனாதிபதி பத்தாம் இடத்தில் பலத்துடன் நிற்க, இச்சாதகன் மிகுந்த பாக்கியங்களை உடையவன் என்பதைப் பட்டாடை அணிந்தவளே அறிவாயாக.

# பதினோராம் பாவம்

### *பதினோராம் பாவத்தில் சூரியன் நின்ற பலன்*

அருக்கனிலா பத்திருக்கில் வெகுதனவான் மன்னரால்
அதிக இலாபம்
பெருக்கமுள்ள பேருடையான் ஆளடிமை உடையன்
பிரியம் இல்லான்
வருக்கமுடன் எடுத்தகாரியம் செயமே செய்வனகம்
அசதி உள்ளோன்
உருக்கமுடன் தேடிவைப்பன் சனப்பகைஞன் காதினோயும்
உடைய னாமே. (535)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பதினோராம் இடத்தில் சூரியன் இருக்க, இச்சாதகன் மிகுந்த செல்வன்; மன்னரால் மிகுந்த இலாபம் பெறுபவன். அனைவராலும் நல்லவனெனப் போற்றப்படுபவன்; பணியாட்கள் உள்ளவன்; அன்பு இல்லாதவன்; எடுத்த காரியங்கள் அனைத்தையும் வெற்றியுடன் முடிப்பவன். உடல் சோர்வு கொண்டவன்; உறவினர்களிடம் பகை பாராட்டுபவன். காதில் நோய் உடையவன். செல்வத்தைச் சேகரித்து வைப்பான்.

### *பதினோராம் பாவத்தில் சந்திரன் நின்ற பலன்*

வந்தலா பத்தின் மதியிருக்கின்
மாதுரு வழியாற் சாடிப்பேசல்
வந்துபயிர்ச் செலவினாற் சவுளி
வியாபா ரத்தால் வருமிலாபம்
அந்தமுறு ஆளடிமை நன்மைந்தர்
தீர்க்காயுள் அழகும் உள்ளோன்
மந்தர மாந்திரியம் உடையன்
போகபோக் கியமுடன் சூரணமே. (536)

**(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பதினோராம் இடத்தில் சந்திரன் இருக்க, இச்சாதகன், தாய்வழி வந்தவர் களை சாடிப் பேசுபவனாக இருப்பான். இவனுக்குப் பயிர்த் தொழிலாலும் ஆடைகள் விற்பனையாலும் மிகுந்த பொருள் இலாபம் கிட்டும். பணியாட்களை உடையவன்; நல்ல மைந்தர்களைப் பெற்றவன்; தீர்க்காயுள் கொண்டவன்; அழகு மிக்கவன்; மந்திரம், மாந்திரிகம் போன்றவற்றைச் செய்யக் கூடியவன்; அனைத்துவிதமான சுகங்களையும் அனுபவிப் பவன்; தைரியசாலி.**

### *பதினோராம் பாவத்தில் செவ்வாய் நின்ற பலன்*

*கிட்டிய இலாபத்திற் சேயிருக்கப் புண்பட்ட*
*கிலேசி சூரன்*
*ஒட்டியதோர் செவிமந்தன் நல்வாக்குச் சதுரன்*
*மகிழ்வுடையான் காமி*
*பட்டியுறுஞ் சோதரத்தாற் துணைவராற் பூமியார்*
*பண்ப தாக*
*பட்டியிலா தானியம்பொன் லாபம்உண் டாமழலை*
*மொழியி னாளே. (537)*

**(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பதினோராம் இடத்தில் செவ்வாய் இருக்க, இச்சாதகன் புண்பட்ட மனதை யுடையவன்; கவலையை உடையவன்; தைரியசாலி; காது கேளாதவன்; இனியமொழிகளைக் கூறக்கூடியவன்; திறமை சாலி; காமத்தினால் மகிழ்பவன்; உடன்பிறந்த சகோதரர் களாலும் பூமியாலும், தானியத்தாலும், பொன்னாலும் மிகுந்த இலாபம் பெறுபவனாக விளங்குவான்.**

### *பதினோராம் பாவத்திற் புதன் நின்ற பலன்*

*பண்பான இலாபத்தில் புதனிருக்கில் ஆளடிமை*
*பலிதம் கீர்த்தி*
*கண்பாயும் சந்தோஷம் செய்யும்வியா பாரத்தாற்*
*கவிதை மிக்காம்*

விண்பாய்வில் வல்லமையாற் கணக்குவழக்
கெடுத்துரைக்கும்
வித்தை யாலும்
நண்பான பந்துசன வழியாலும் தனம்படைப்பன்
நயந்து தானே. (538)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பதினோரா மிடத்தில் புதன் இருக்க, இச்சாதகனுக்குப் பணியாட்கள் இருப்பர். நினைப்பது நிறைவேறும்; புகழ் உடையவன்; மகிழ்ச்சியோடு இருப்பான். செய்யும் வியாபாரத்தாலும், கவிதைகள் படைப்பதாலும் ஆராய்ச்சித் திறத்தாலும், கணக்கு வழக்குகளை எடுத்துரைக்கும் தொழில்களாலும், உறவினர் களின் வழியாலும் செல்வத்தைச் சம்பாதிக்கக் கூடியவன்.

### பதினோராம் பாவத்தில் குரு நின்ற பலன்

தாங்கியலா பந்தனிலே குருவிருக்கின் மன்னவர்கள்
சரிச மானன்
ஓங்கியநற் புத்தியொடு நற்கேள்வி வாகனத்தால்
உண்மை ஞானம்
வாங்கியபொன் வாணிபத்தால் அந்தணரால் புத்திரரால்
மன்னர் தன்னால்
ஓங்கியநல் வித்தையினாற் றனலாபம் வெகுகளத்திரம்
சிறப்புள் ளோனே. (539)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பதினோராம் இடம் தனில் குரு இருக்க, இச்சாதகன், மன்னர்களுக்கு நிகரான பெருமை பெற்று விளங்குவான்; நல்லறிவு பெற்றவன்; கல்வி, கேள்விகளில் சிறந்தவன்; நல்ல வாகனம் உடையவன், உண்மை, ஞானம் உடையவன். பொன் வாணிபத்தாலும், அந்தணர்களாலும், பிள்ளைகளாலும், மன்னர்களாலும், நல்ல வித்தைகளாலும் செல்வ வரவு உடையவன்; அதிகமான மனைவியரைக் கொண்டவன்.

### பதினோராம் பாவத்தில் சுக்கிரன் நின்றபலன்

கொண்டலா பத்தில்வெள்ளி இருந்திடிற்அற் பாயுள்வஞ்சகன்
குரூர சிந்தை
விண்டபரத் தையர்கமனன் சனப்பகைநற் சுகமிருநல்
வெள்ளி யாலும்
பண்டரும்வெண் கலமுத்து வியாபாரி முப்பழமும்
பானெய் அன்னம்
அண்டரும்பொன் வாணிபத்தால் வழுத்திய சங்கீதத்தால்
இலாபம் உண்டே. (540)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பதினோராம் இடத்தில் சுக்கிரன் இருக்க, இச்சாதகன் குறைந்த ஆயுளை உடையவன்; வஞ்சனை செய்பவன்; கொடூர எண்ணம் படைத்தவன்; விலைமகளிரிடம் அன்புடையவன்; உறவினரிடம் பகைமை பாராட்டுபவன்; வெள்ளி, வெண் கலம், முத்து போன்றவற்றை விற்பனை செய்யும் வியாபாரி யாக விளங்கக் கூடியவன். மா, பலா, வாழை, பால், நெய், உணவு, பொன் வணிகத்தாலும், இசையாலும் இவனுக்குச் செல்வம் வந்து சேரும்.

### பதினோராம் பாவத்தில் சனி நின்ற பலன்

நீங்கரிய லாபத்திற் சனியிருக்கின் ஞான
நிபுணசிற்ப சாஸ்திரிக வாந்த கைமை உடையன்
தாங்கரிய சுமைஎடுத்த உயிர்வதைகள் செய்தற்
சகோதரதோ ஷத்தையுளன் பந்துசனப் பிரியன்
வாங்கரிய செவிமந்த மானகன ரோகன்
அனுபோக போக்கியன் பருத்திஉளுந் தாலும்
ஏங்கியநீசர் கள்சோரரா லும்மன்ன ராலும்
ஏற்றதன இலாபமுள்ளோன் ஏந்துதன மயிலே ! (541)

(இ-ள்.) தனங்களை ஏந்திய மயில்போன்ற சாய லுடைய பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்குப் பதினோராம் இடத்தில் சனி இருக்க, இச்சாதகன் ஞான நிபுணன், சிற்ப சாத்திரத்தில் ஆன்ற தகைமை உடையவன். சுமை எடுத்தல்,

உயிர்வதைகள் செய்தல் போன்ற காரியங்களைச் செய்பவன். சகோதர தோஷம் உடையவன். உறவினர் களிடத்தும் பிறரிடத்தும் அன்பு பூண்டவன்; செவி மந்த மானவன்; மிகுந்த நோயுடையவன்; போகங்களை அனுபவிப்பவன்; பருத்தி, உளுந்து போன்ற பொருள் களாலும் தீயோர், திருடர், மன்னர் முதலியோராலும் பொருள் வரவு உடையவன்.

### பதினோராம் பாவத்தில் இராகு நின்ற பலன்

அண்டிலா பந்தனிலே ராகுநிற்கில் பின்புத்தி
யான நோயன்
பண்டிதன்வல் லவன்பெரிய தெய்வபிரா மணர்மீது
பக்தி யுள்ளோன்
கண்டிதமாம் செவிமந்தன் சேஷ்டருக்குத் தோஷமுள்ளோன்
கனகம் உள்ளோன்
வண்டிறைக்கும் மலர்க்கூந்தல் துடியிடையஞ் சனவிழிப்பூண்
வனச மானே. (542)

(இ-ள்.) வண்டுகள் ரீங்காரம் செய்து மொய்க்கக் கூடிய மலர்களைச் சூடியுள்ள கூந்தலையும், துடி போன்ற இடையையும், மை பூசப்பட்ட கண்களையும் தாமரைப் போன்ற அழகான முகத்தைப்பெற்ற மான் போன்ற பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்குப் பதினோராம் இடத்தில் இராகு இருக்கில், இச்சாதகன் பின்புத்தி உடையவன்; நோயாளன்; நூல்கள் பலவற்றைக் கற்றவன்; வல்லமை உடையவன்; பெரியோர், தெய்வம், பிராமணர் அனைவரிடத்தும் பக்தி கொண்டவன்; காது செவிடானவன்; மூத்த சகோதர தோஷம் உடையவன்; பொன் உடையவன்.

### பதினோராம் பாவத்தில் கேது நின்ற பலன்

வாகான இலாபமதிற் கேது நிற்க
துணைவரால் துன்ப மகிழ்கம் பீர
பாகாய புத்திர ராற்கள் ளவியா
பாரத் தான ராதி பன்னால்

யோகாதி வித்தை யினால்நீச ராற்தன
முடையன் உபாய புத்தி
யோகன் சுபகன் மிகன ரோகி
யாவ னுற்றார் வியாதி யாமே. (543)

**(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பதினோரா மிடத்தில் கேது இருக்க, இச்சாதகனின் உடன்பிறந்த மூத்த சகோதரனுக்குத் துன்பம் ஏற்படும். இவன் மகிழ்வொடு கம்பீரமாக விளங்குவான். புத்திரர்கள், கள்ள வியாபாரம், மன்னர் வித்தை, தீயோர், போன்றோரால் செல்வம் வந்து சேரும். தந்திர அறிவு உடையவன்; சுபகர்மம் செய்பவன்; மிகுந்த நோய் உள்ளவன்.**

*பதினோராம் பாவத்திற் குளிகன் நின்ற பலன்*

அழியாத இலாபத்திற் குளிகன் நிற்கிற்
சாடிப் பேச்சாலே இலாப
மொழியாத சேஷ்டனுக்குத் தோஷம் துண்டாம்
மாந்தி பவனன்பன் னொன்றில்
றழியாக வேயிருக்கில் பிணைபட் டாற்தன
நாசம் வாழ்வு நாசம்
மொழியாத பசுங்கிள்ளை யெனமொழியு மொழியார்க்கு
மோக மானே! (544)

**(இ-ள்.) பேசாமல் பேசும் பசுமையான கிளிப் பிள்ளையைப் போன்று பேசக்கூடிய மோகம் கொண்ட மான் போன்றவளே! சென்ம இலக்கனத்திற்குப் பதினோராம் இடத்தில் குளிகன் இருக்க, பிறரைத் திட்டிப் பேசுவதால் இச்சாதகன் இலாபம் பெறுவான். மூத்த சகோதரனுக்குத் தோஷம் உண்டாம்; சென்ம இலக்கனத்திற்குப் பதினோரா மிடத்தில் மாந்தி நின்ற இராசியாதிபதி இருக்க, விலங்கிடப் படுதலால் சேகரித்து வைத்த செல்வத்திற்கு அழிவு ஏற்படும்; வாழ்க்கையும் அழியும்.**

குறிப்பு : இப்பாவத்தில் 544ஆம் பாடல் முதல் 550ஆம் பாடல்வரை அச்சுநூலில் கிடைத்தவை.

### சதிகாதிய பலன்

கருமத் தானும் சாமியுமே
கலந்து லாபம் தனிலுறினும்
இருமை இலாபத தானை
இருக்கில் நானா வகைலாபத்
தருலா பத்தோன் சரத்திருக்கிற்
தூரத் தேசம் தனிலாபம்
இருமைத் திரமேற் சுபதேசம்
உபயம் எங்கும் இலாபமுண்டாம். *(545)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்குப் பத்தாமிடத்திற்கு அதிபதியும் இலக்கனாதிபதியும் ஒன்றுகூடி பதினோராமிடத்தில் இருந்தாலும், இவர்கள் இருவரும் பதினோராமிடத்திற்கு அதிபதியைச் சேர்ந்து இருந்தாலும் இச் சாதகனுக்குப் பலவகையாலும் பொருள் வரவு உண்டாகும். பதினோராம் இடத்திற்கு அதிபதி சரஇராசியில் இருக்க, இச்சாதகனுக்குத் தூர தேசத்தில் பொருள் வருமானமும், ஸ்திர இராசியில் இருக்க, சொந்த தேசத்தில் பொருள் வருமானமும், உபய இராசியில் இருக்க, எந்த தேசத்தில் இருந்தாலும் பொருள் வருமானமும் கிடைக்கும்.

### இதுவுமது

பணம்பெறு மெட்டிற் கேதுவே இருக்கிற்
பாரிடத் திரய இலாபம்
வணம்புறும் ஒன்பான் இலாபத்திற் கேது
மகிழ்ந்துறில் நீசவித் தையினாற்
கணபுதைக் களவாற் சூத்திர மதனாற்
கணம்பெறு திரவிய இலாபம்
நன்புள தேனே! உதயமாய்க் கதிரோன்
நண்ணிடிற் பூமியுண் டாமே. *(546)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் கேது இருக்க, இச்சாதகனுக்குச் செல்வம் சேரும். சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாம் இடத்தில் அல்லது பதினோராம்

இடத்தில் கேது இருந்தால் தீய தொழில்களாலும், திருட்டாலும் கீழான செய்கைகளாலும் இச்சாதகனுக்குச் செல்வம் சேரும். சென்ம இலக்கனத்தில் சூரியன் இருந்தால், இச்சாதகனுக்குப் பூமி இலாபம் கிட்டும்.

### இதுவுமது

*செறிக்கும் இரண்டில் ஒருமூன்றில்*
*செவ்வா யுறினும் தண்மதியை*
*பொறிக்கும் செவ்வாய் தான்பார்க்கிற்*
*பூமி இலாபம் புதன்குருவுங்*
*குறித்துப் பார்க்க வுடன்கூடக்*
*குலவு பதியி னாலாபம்*
*பறிக்கும் பாவம் புதற்கேழிற்*
*பதிந்தாற் றிரியாற் றனமெய்தும். (547)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்தில் அல்லது மூன்றாமிடத்தில் செவ்வாய் இருந்தாலும், பூரணச் சந்திரனைச் செவ்வாய் பார்த்தாலும் பூமி இலாபம் கிடைக்கும். புதனும் குருவும் பார்க்க அல்லது சந்திரனுடன் சேர, பூமியினால் இலாபம் கிடைக்கும். பாவக்கோள் புதனுக்கு ஏழாம் இடத்தில் நிற்க, இச்சாதகனுக்குப் பெண்ணால் பொருள் வந்து சேரும்.

### வேறு

*சொல்லிய இலாபத்தில் சுடர வனுறின்*
*புல்லறுத்து விற்பன் பொன்னு முத்தையும்*
*கெல்லறு பவளத்தைக் கிரயம் செய்பவன்*
*சொல்லுந் தனத்தைத் திரிந்து தேடுவன். (548)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பதினோராம் இடத்தில் சூரியன் இருக்க, இச்சாதகன் புல் விற்பவனாக இருப்பான். பொன், முத்து, பவளம் முதலானவற்றை விற்பவன். செல்வத்தை அலைந்து திரிந்து தேடுபவனாக விளங்குவான்.

### வேறு

**மருவிய இலாபத்தில் மதிஇ ருந்திடிற்**
**றருமன்ன ராலும் ஆசாரி கத்தினாற்**
**கிருமிய மாங்கிசக் கிரயத் தாலுமே**
**அருமையாய்ப் பொருள்களை அறிந்து தேடுவன் *(549)***

***(இ-ள்.)*** **ஜென்ம இலக்கனத்திற்குப் பதினோரா மிடத்தில் சந்திரன் இருக்க, இச்சாதகன், மன்னராலும், சடங்குகள் செய்வதாலும் பயிர்த்தொழில் செய்வதாலும், மாமிசங்களை விற்பதாலும் செல்வத்தைத் தேடுபவனாக விளங்குவான்.**

### வேறு

இடம்படு லாபத்திற் சேயி ருந்திடின்
கடன்கொ டுத்துடன் படல்கடிந்து வாங்குவன்
மடந்தெரி யாரச வாத மாமதாற்
புடம்படு கலகத்தாற் பொருளைத் தேடுவன். *(550)*

***(இ-ள்.)*** **ஜென்ம இலக்கனத்திற்குப் பதினோரா மிடத்தில் செவ்வாய் இருக்க, இச்சாதகன், கடன் கொடுத்து வட்டி வாங்குவான். இரசவாத வித்தையாலும் கலகங்களைச் செய்வதாலும் பொருளைத் தேடுபவனாக இருப்பான்.**

### வேறு

**போற்றிய இலாபத்திற் புதன்இ ருந்திடிற்**
**பார்த்திடுஞ் சிற்பத்தாற் பஞ்சலோ கத்தாற்**
**தோற்றும்வாத் திமையினாற் சோதி டத்தினாற்**
**சாற்றுமந் திரத்தினாற் றனத்தைத் தேடுவன் *(551)***

***(இ-ள்.)*** **ஜென்ம இலக்கனத்திற்குப் பதினோராம் இடத்தில் புதன் இருக்க, இச்சாதகன், சிற்பத்தொழில், பஞ்ச லோகத் தொழில், ஆசிரியர் தொழில், சோதிடம், மந்திரம் போன்றவற்றால் பொருளைத் தேடுபவனாக இருப்பான்.**

### வேறு

கூட்டிய இலாபத்திற் குருஇ ருந்திடிற்
பூட்டிய சாத்திரம் புராண காவியம்
நீட்டிய யாசக நிலைமை வாத்திமை
தீட்டிய மந்திரத் திற்பொன் தேடுபவன். *(552)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்குப் பதினோராம் இடத்தில் குரு இருந்தால் சாத்திரம், புராணம், காவியம் ஆகியவற்றைக் கற்றுத் தெரிந்தவனாக இருப்பான். பிறரிடம் பொருளை இரந்து பெறுபவனாக அல்லது ஆசிரியர் தொழில், மந்திரங்களைச் சொல்லுதல் போன்றவற்றைச் செய்து பொருள் தேடுபவனாக இருப்பான்.

### *மனைவியின் மூலம் பொருள், செயல்திறமை மிக்கவன்*

என்றார் மூர்த்தி வெள்ளிநவாங்
கிசத்தோன் மூன்றாம் இடத்தினையும்
ஒன்றாய்க் குருவி னுடன்கூடி
ஒளிதா ரத்தாற் றனலாபம்
குன்றாச் சனிமால் புகரொன்பான்
கூடி நிற்கில் பூமியுண்டாம்
பொன்றா வியத்தோன் சுபவர்க்கம்
பொருந்திற் சுபகா ரியத்தனவான். *(553)*

*(இ-ள்.)* இலக்கனாதிபதி, சுக்கிரனின் நவாங்கிசத்தோன், மூன்றாம் இடத்திற்கு அதிபதி ஆகிய மூன்று கோள்களும் குருவுடன் கூடி இருக்க, இச்சாதகனுக்கு மனைவியால் பொருள் வருவாய் கிட்டும். சனி, புதன், சுக்கிரன், ஒன்பதாமிடத்திற்கு அதிபதி ஆகியோர் ஒன்றுகூடி இருக்கின், இச்சாதகன் பூமியால் இலாபம் உடையவனாக இருப்பான். பன்னிரண்டாம் இடத்திற்கு அதிபதி சுபவர்க்கத்தில் பொருந்தி இருப்பின், இச்சாதகன் அனைத்துக் காரியங்களையும் சுபமாக முடிக்க வல்லவன்.

## இதுவுமது

உறையும் வாக்கு இலாபத்துக்
குடையோன் சாமிக் குறவாகில்
நிறையும் தனவான் இலாபத்தில்
நிலவும் கதிரும் கூடிநிற்கில்
இறைவ ராலும் ஆசாரியம்
எய்த லாலும் தனம்பெறுவன்
அறையில் இலாபக் கதிர்சேய்க்கே
அமைச்சர் துணைவ ராலாபம். (554)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடம், பதினோராமிடத்திற்கு அதிபதிகள் இலக்கனாதிபதிக்கு உறவாகில், இச்சாதகன் செல்வனாக விளங்குவான். பதினோராமிடத்தில் சந்திரனும் சூரியனும் கூடி இருந்தால் மன்னராலும் சமயம் தொடர்பான தொழில் செய்தலாலும் இச்சாதகன் பொருளைப் பெறுபவனாக இருப்பான். பதினோராம் இடத்தில் சூரியனும் செவ்வாயும் இருக்க, இச்சாதகனுக்கு அமைச்சராலும் உடன்பிறந்தோராலும் பொருள் வரவு உண்டாகும்.

## இதுவுமது

அடவான லாபமதிற் புதன்தான்
நின்றிடில் வித்தையால் உற்றார்கள்
இடமாகத் தனலாபம் இரவிகுரு
உறில்கன் மத்தினால் லாபம்
திடமான இரவிவெள்ளி நிற்க
ரத்தின வியாபாரமதிற் .....
நடமாடு இனியகன்று காலியினால்
தனலாப நளின மானே. (555)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பதினோராம் இடத்தில் புதன் நின்றால் இச்சாதகன் தான் கற்ற தொழிலாலும் உற்றார்களாலும் பொருள் இலாபம் பெறுவான். பதினோராமிடத்தில் சூரியன், குரு இருந்தால், இச்சாதகனுக்குத் தொழிலால் பொருள் கிடைக்கும்.

பதினோராமிடத்தில் சூரியன், சுக்கிரன் இருந்தால், இச்சாதகனுக்கு விலையுயர்ந்த மணிகளை விற்பதால் பொருள் கிடைக்கும். கால்நடைகளால் பொருள் இலாபம் கிடைக்கும்.

## இதுவுமது

*இனியலா பத்துடையோன் பலத்துகேந் திரமெய்த*
*இலாபம் தன்னிற்*
*கனிவிதிக் கோளுறினும் வியத்துடையோன் சுபருடனே*
*கலந்து கூடி*
*நனியில்பலம் போயிருக்கப் பன்னிரண்டிற் சுபரிருக்கில்*
*நயத்திற் பார்மேற்*
*றனியிலராய் தனலாபம் எய்துவன்கா முகர்க்கமிர்த*
*தடங்கண் மாதே!* (556)

(இ-ள்.) காமுகர்க்கு அமிர்தம் போன்று இனிமையாக விளங்கக் கூடிய பெரிய கண்களையுடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்குப் பத்தாமிடத்திற்கு அதிபதி பலம் பெற்று கேந்திரங்களில் இருக்க, பதினோராமிடத்தில் பாவக் கோள்கள் இருந்தாலும், பன்னிரண்டாமிடத்திற்கு அதிபதி, சுபக்கோளுடன் பலம்பெற்றிருக்க, பன்னிரண்டாமிடத்தில் சுபக்கோள் இருக்க, இச்சாதகன் செல்வம் பெற்று விளங்குவான்.

## பொருள் இலாபம்

ஒன்பதிற் சனிக்கு நீசரால் இலாபம்
உதயத்தில் இராகுவுக் கேதான்
வன்புறு மாதர் வழியினால் இலாபம்
மருவுநா லினில்இரா குற்றால்
அன்புறு மாதர் வழியினால் இலாபம்
அம்புலி யத்தமுற் றிடினும்
இன்புறு பத்தாம் இடத்தினின் றாலும்
எய்திடும் தானிய இலாபம். (557)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாமிடத்தில் சனி இருந்தால், இச்சாதகனுக்குத் தீயோரால் பொருள் வரவு உண்டாகும். இலக்கனத்தில் இராகு இருக்க, இச்சாதகனுக்குத் திருடர்களால் பொருள் இலாபம் உண்டாகும். இலக்கனத் திற்கு நான்காமிடத்தில் இராகு இருந்தால், இச்சாதகனுக்குப் பெண்களின் வழியினால் பொருள் வரவு கிட்டும். சந்திரன் அஸ்த நட்சத்திரத்தில் இருந்தாலும், பத்தாம் இடத்தில் இருந்தாலும் இச்சாதகனுக்குத் தானியத்தால் இலாபம் கிடைக்கும்.

### இதுவுமது

*மன்னுமா யிலியம் தனிலுறை சேய்க்கு*
*மருவுமாந் திரிகத்தால் இலாபம்*
*மின்னுறு கேட்டை மேவும்வெள் ளிக்கு*
*மிகுந்திடும் தானிய இலாபம்*
*கன்னியிற் பிறக்க சுபக்கிர கங்கள்*
*கலந்திடிற் றானிய இலாபம்*
*பன்னுமோர் இரண்டினில் இரவிதான் இருக்கிற்*
*பலபல இலாபமுண் டாமே. (558)*

(இ-ள்.) ஆயிலிய நட்சத்திரத்தில் அமைந்த செவ்வாய் இருக்க, இச்சாதகன் மாந்திரீகத்தால் பொருள் இலாபம் அடைவான். கேட்டை நட்சத்திரத்தில் அமைந்த சுக்கிரன் இருக்க, இச்சாதகன், தானியத்தால் நல்ல பொருள் இலாபம் அடைவான். கன்னி இலக்கனத்தில் பிறக்க அங்கு சுபக் கோள்கள் நிற்க இச்சாதகன், தானியத்தால் பொருள் இலாபம் பெறுவான். சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்தில் சூரியன் இருக்க, இச்சாதகனுக்குப் பல்வேறு வழிகளில் செல்வம் சேரும்.

பதினோராம் பாவம் முற்றும்.



# பன்னிரண்டாம் பாவம்

## விரய பலன்

தனலாபம் தனக்குடையோர் நீசமுடன் மூடம்
தானாகி ஆறெட்டுப் பன்னிரண்டில் இருக்க
வினமான சுபர்பாரா திருந்திடினும் இரண்டுக்
கிறைவர்பலம் தாழ்ந்திடினும் ராஜதண்டம் உண்டாம்
கனவியத்தில் இரவிநிற்கிற் பிதுர்வழியி னாலே
காசுபணம் செலவாகும் கனமதியும் நிற்கில்
வினவியநன் மாதுர்வர்க்கத் தாலுஞ்செல வுத்தான்
மிகுந்தபொருட் செலவாகும் மிகுமலர்ப்பூங்
குழலே! (559)

(இ-ள்.) மிகுந்த மலர்களைச் சூடிய கூந்தலையுடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடம், பதினோராமிடம் ஆகியவற்றிற்கு அதிபதிகள் நீசம், அஸ்தமனம் பெற்று ஆறாமிடம், எட்டாமிடம், பன்னிரண்டாம் இடங்களில் இருக்க, இவர்களைச் சுபக் கோள்கள் பார்க்கவில்லையாயினும் இரண்டாமிடத்திற்கு அதிபதி பலமிழந்து இருப்பினும் இச்சாதகன் அரசுக்கு அபராதம் கட்ட வேண்டியதாகும். பன்னிரண்டாமிடத்தில் சூரியன் இருந்தால் தந்தைவழியால் பொருள் செலவாகும். பன்னிரண்டாமிடத்தில் சந்திரன் இருந்தால் தாய்வழியில் மிகுந்த பொருள் செலவாகும்.

## இதுவுமது

பொற்பாம் வியத்திற் சேயிருக்கிற்
பூமி அதனாற் துணைவரினால்
மற்பார் சோரர் ஆக்கினையால்
மன்னுந் தனனா சமதாகும்

கற்பார் புதனே வியத்திருக்கிற்
கணக்கு வழக்கு விரோதத்தால்
நற்பார் அதனிற் வியாபாரம்
நடத்த லாலும் தனநாசம். (560)

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டாம் இடத்தில் செவ்வாய் இருந்தால், இச்சாதகனுக்குப் பூமியினாலும் தன்னுடன் பிறந்த இளைய சகோதரர்களாலும், திருடர்களாலும், தண்டனைகளாலும் செல்வம் அழிந்து போகும். சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டாமிடத்தில் புதன் இருந்தால், இச்சாதகனுக்கு கணக்குகளாலும், வழக்குகளாலும் வியாபாரத்தாலும் செல்வம் அழிந்து போகும்.

**இதுவுமது**

அனமே வியத்திற் குருவிருக்கில்
அருள்புத் திரரால் பிராமணராற்
தனமே செலவாம் புகர்நிற்கில்
தானே தேடிச் செலவழிப்பன்
வனமே இல்லாச் சனியிருக்கின்
வாத வாயு சரீரத்திற்
தினமே பாத வியாதியினாற்
செலவாம் காசு பணமெல்லாம். (561)

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டாம் இடத்தில் குரு இருக்க, இச்சாதகனுக்குப் பிள்ளைகளாலும் பிராமணர்களாலும் பொருட்செலவு உண்டாகும். சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டாமிடத்தில் சுக்கிரன் இருக்க, இச்சாதகன் மிகுந்த செலவு செய்பவனாக இருந்து பொருளை அழிப்பான். பன்னிரண்டாமிடத்தில் சனி இருக்க, இச்சாதகனுக்கு வாதம், வாயு, உடலில் நோய், காலில் நோய் ஆகியவற்றால் மிகுதியான பொருள் செலவாகும்.

### இராகு, குளிகன் நின்ற பலன்

பொறிக்கும் வியத்திற் இராகுநிற்கில்
போம்பூர் வத்திற் தனமெல்லாம்
செறிக்கும் கேது வுறில்விடுதாச்
செலவால் நீசர் விர்த்தியினால்
குறிக்கும் தனம்போம் குளிகனுறில்
கூறும் இரசவா தச்செலவாம்
எரிக்கும் குளிகன் பவனனிற்கில்
இனத்தார் சனத்தாற் தனம்போமே. (562)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டா மிடத்தில் இராகு நின்றால், இச்சாதகனின் முன்னோர் சேர்த்து வைத்த செல்வம் இவனை விட்டு நீங்கும். இப்பன்னி ரண்டாம் இடத்தில் கேது இருக்க, வீண் ஆடம்பரச் செலவாலும் நீயவர்கள் மிகுதியாகப் பெருகி இருப்பதனாலும் இவனுடைய செல்வம் கையைவிட்டுப் போகும். இப்பன்னி ரண்டாம் இடத்தில் குளிகன் இருந்தால், இரசவாதத்தினால் இச்சாதகன் மிகுந்த பொருளைச் செலவு செய்வான். இப்பனிரண்டா மிடத்தில் குளிகன் பவன னின்றால் உற்றார் உறவினர்கள் செல்வம் செலவழியும்.

### விரயங்கள்

நீளும் வியத்தில் அட்டமத்தோன்
நிற்கில் தெய்வ உபாதியினாற்
தாளும் பசாசு பீடையினாற்
றனம்போம் இரண்டிற் சனியிருக்கில்
நாளும் பழைய தனம்போகும்
நயமோ ரெட்டில் இராகுநிற்கில்
சூழும் விடத்தால் வயிற்றுளைவாற்
றுன்மந் திரத்தாற் றனநாசம். (563)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டா மிடத்தில், எட்டாமிடத்திற்கு அதிபதி இருக்க, இச்சாதகன்,

தெய்வ சாப நிவர்த்திக்காகவும் பிசாசுக்களின் பீடைகளில் இருந்து மீளுவதற்காகவும் செலவுகள் செய்வான். இரண்டாம் இடத்தில் சனி இருந்தால் பூர்வீக சொத்து கையைவிட்டுப் போகும். சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் இராகு இருக்க, விஷத்தாலும், வயிற்று வலியாலும் மந்திரத்தாலும் பொருள் அழிவு ஏற்படும்.

**இதுவுமது**

*மூன்றிற் குளிகன் தானிருக்கின்*
*முந்தும் வழியாத் திரைதன்னிற்*
*தோன்றும் பொருள்போம் காமத்திற்*
*துடியாங் குளிகன் பவனனுறில்*
*கான்ற பரதா ரத்தினிச்சை*
*கவலை அதனால் திரிகளினால்*
*ஊன்ற வளரும் பொருட்களெல்லாம்*
*ஒன்றா தொழிந்து செலவாமே. (564)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில் குளிகன் இருக்க, இச்சாதகன் பயணத்திற்காகப் பெரும் பொருட்செலவு செய்வான். காமம் மிக்கவனாக இருப்பான். குளிகன் பவனனுறில் பிறன்மனையிடத்தில் விருப்பம் கொள்வா; கவலையுடையவன்; பெண்களின் காரணமாக இவன் சேர்த்து வைத்த பொருட்களெல்லாம் கையைவிட்டு போய்விடும்.

**இதுவுமது**

*பார்க்கும் இலாபம் தனிற்குளிகன்*
*பவனன் இருக்கின் பிணைப்படலாற்*
*கூர்க்கும் தனம்போம் அட்டமத்திற்*
*குருவும் ஐந்தோன் இருந்தக்காற்*
*சேர்க்கும் புதல்வராற் றனம்போந்*
*திரள்பாக் கியத்தோன் எட்டிலுறிற்*
*ஆர்க்கும் எளியதாய்க் கொள்ளையில்வல்*
*லடியில் தனம்போம் மடமயிலே! (565)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பதினோரா மிடத்தில் குளிகன் பவனன் இருக்க, விலங்கிடப்படுதலால் செல்வம் செலவாகும். சென்ம இலக்கனத்திற்கு எட்டா மிடத்திற் குருவும் ஐந்தாமிடத்திற்கு அதிபதியும் இருந்தால், இச்சாதகனுக்குப் புத்திரர்களால் செல்வம் செலவழியும். சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாமிடத்திற்கு அதிபதி, எட்டாமிடத்தில் இருந்தால், இச்சாதகனின் செல்வம் கொள்ளையடிக்கப்படுதலாலும் அடிதடியினாலும் கையை விட்டுப் போகும் என்பதை மடமயிலே அறிவாயாக.

**இதுவுமது**

செய்ய நாலுக் கதிபனுடன்
செவ்வாய் சனிமந் தியும்கூடித்
துய்ய கிரகச் சேத்திரத்தாற்
சொல்லுங் கன்று காலியினால்
வையம் மகிழ்வா கனத்தினால்
வழிமேற் செலவாம் தனமெல்லாம்
வெய்ய இரண்டில் இராகுநிற்கில்
வேந்தர் தன்னால் தனநாசம். (566)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்திற்கு அதிபதியுடன் செவ்வாய், சனி, மாந்தி ஆகிய கிரகங்கள் கூடியிருக்க, இச்சாதகனுக்கு வீட்டு மனையினாலும் கால்நடைகளாலும், வாகனத்தினாலும் பயணத்தினாலும் செல்வம் மிகுதியும் செலவாகும். சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்தில் இராகு நிற்க, இச்சாதகனுக்கு அரசாங் கத்தால் பொருள் செலவு உண்டாகும்.

**இதுவுமது**

மொழியும் இரண்டில் இருந்தக்கோள்
மூட மாகச் சுபர்பார்க்கில்
அழியும் அவன்தன் திசைபொசிப்பில்
அபகா ரத்திற் பொருட்களெல்லாம்

மொழிவில் தனத்தோன் ஆறெட்டில்
உரைக்கும் வியத்தில் அத்தமனம்
பழிசேய் நீசம் அடைந்துநிற்கில்
பார்மேல் மிகவும் கடன்படுவன். (567)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்தில் இருந்த கோள் அஸ்தமனமாகி அதனைச் சுபக்கோள் பார்க்க, அவனுடைய திசை,புத்தியில் இச்சாதகனின் செல்வ மெல்லாம் கொள்ளையடிக்கப்படும். இரண்டாமிடத்திற்கு அதிபதி சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடம், எட்டாமிடம், பன்னிரண்டாமிடம் இவற்றில் ஒன்றில் அஸ்தமனம் அல்லது நீசம் அடைந்து இருந்தால், இவன் பெரும் கடனாளியாக இருப்பான்.

### அரச தண்டனையால் பொருள் அழிவு

மிகுபாக் கியத்தில் இரவிமதி
வெள்ளி கூடி நின்றாலும்
தகுமாம் செவ்வாய் இரவிசனி
தானே கூடி இருந்திடினும்
புகுதார் வெள்ளி சனிஅருக்கன்
பொருந்திக் கூடி இருந்தாலும்
மிகுதி யான இராசதண்டம்
இதனாற் தனநா சமதாமே. (568)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாமிடத்தில் சூரியன், சந்திரன், சுக்கிரன் ஆகிய மூன்று கோள்களும் கூடி இருந்தாலும் செவ்வாய், சூரியன், சனி ஆகிய மூன்று கோள்களும் கூடி இருந்தாலும், இச்சாதகனுக்கு இராச தண்டனையால் செல்வம் செலவழிந்து போகும்.

### நல்ல மனிதரால் பொருள் அழிவு

அறிக்கும் வியத்தோன் பாவவர்க்க
மாகிப் பாவ ருடன்கூடிக்
கறிக்கும் வியத்தோன் மனுராசி
கலக்க அதனுக் கிறைமேற்போய்
மறிக்கும் படியாய் இருக்கநல்ல
மனித ராலே தனநாசம்
செறிக்கும் மலர்ப்பூங் குழலணங்கே !
தேனே ! தெவிட்டா தெள்ளமுதே ! *(569)*

(இ-ள்.) செறிந்த மலர்களைக் கூந்தலில் அணிந்து இனிமையைத் தரக்கூடிய தெவிட்டாத தெள்ளமுதமாக விளங்கும் பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு பன்னிரண் டாமிடத்திற்கு அதிபதி பாவவர்க்கமாகி, பாவருடன் கூடி இருந்தாலும், பன்னிரண்டாமிடத்திற்கு அதிபதி சென்ம இராசியில் இருக்க, இராசியாதிபதி பலமிழந்து இருக்க, இச்சாதகனுக்கு நல்ல மனிதரால் பொருள் அழிவு உண்டாகும்.

### அரச தண்டனையால் பொருள் அழிவு

படிக்குள் நாலு கேந்திரமும்
பாவ ரிருக்கத் தனநாசம்
துடிக்கு மிரவி நீசமெய்திற்
துர்த்தா னத்தில் இருந்தக்காற்
பிடிக்கு தனமே செலவாகும்
பேசும் இரண்டில இரவிமதி
வடிப்புற் றிருக்கில் இராசதண்டம்
வருமே அதனாற் றனநாசம். *(570)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குக் கேந்திரங்களில் பாவக்கோள்கள் இருக்க, இச்சாதகனின் செல்வம் செலவழிந்து போகும். சூரியன் நீசம் பெற்றுத் தீய வீடுகளில் இருந்தால், இச்சாதகனின் செல்வம் செலவழிந்து போகும்.

இரண்டாமிடத்தில் சூரியனும் சந்திரனும் ஒன்றாகக் கூடி இருக்க, இச்சாதகனுக்கு அரச தண்டனையால் பொருள் அழிவு ஏற்படும்.

**இதுவுமது**

*உதய மதனிற் பாவர்நிற்க*
*உதயத் தோனே பாவியதாய்ப்*
*புதைய இராகு உடன்கூடிப்*
*புகல்கேந் திரத்தில லுறஒன்பான்*
*சிதையும் தீயோ ருறஒன்றிற்*
*நிற்கபாக் கியத்திற் பாவர்நிற்கிற்*
*சுதைவி லிராச தண்டத்தாற்*
*சுருக்க முடையன் அபிமானன்.* *(571)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற் பாவக்கோள் நிற்க, இலக்கனாதிபதி பாவக்கோளாக இருந்து, இராகுவுடன் ஒன்றுகூடி கேந்திரத்தில் இருக்க, ஒன்பதாமிடத்திற்கு அதிபதி, பாவக்கோளாக இருந்து,இராகுவுடன் ஒன்றுகூடி கேந்திரத்தில் இருக்க, ஒன்பதாமிடத்திற்கு அதிபதி, பாவக் கோளோடு இலக்கனத்தில் நிற்க, ஒன்பதாமிடத்தில் பாவக்கோள் நிற்க, இராச தண்டனையால் செல்வத்தைச் செலவிடுபவனாக இருப்பான்.

**சயன சுகம் உடையவன்**

*அலைவிலா பாக்கி யத்தில்*
*அட்ட மத் தோனே நிற்கத்*
*தலைமையா மதிமால் பார்க்கிற்*
*சயனத்திற் சுகம்உண் டாகும்*
*நிலையுறு வியத்திற் புந்தி*
*நீடுசுக் கிரனும் நிற்க*
*மலைவிலாச் சுபரே பார்க்கில்*
*வருஞ்சய னத்தில் இன்பம்.* *(572)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாமிடத்தில், எட்டாம் இடத்திற்கு அதிபதி நிற்க, அதைச் சந்திரனும் புதனும் பார்க்க, இச்சாகனுக்குச் சயனசுகம் கிடைக்கும். பன்னிரண்டாமிடத்தில் புதனும் சுக்கிரனும் இருக்க, இவர்களைச் சுபக்கோள் பார்க்க, இச்சாதகனுக்குச் சயனசுகம் கிடைக்கும்.

**இதுவுமது**

இதத்திடும் வியத்தில் நல்லோர்
இருந்திடிற் சுபர்கள் பார்க்க
அதற்குளோன் சுபனே யாகி
அணிசப்ர மஞ்சம் உண்டாம்
இதற்குமீ ராறோன் உச்ச
மேவவைந் துடையோன் பார்க்கிற்
தப்படும் சப்ர மஞ்சம்
துகளின்மெத் தையுமுண் டாமே. *(573)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டாம் இடத்தில் சுபக்கோள்கள் இருக்க, இப்பன்னிரண்டாம் இடத்தைச் சுபக்கோள்கள் பார்க்க, இப்பன்னிரண்டாம் இடத்திற்கு அதிபதி சுபனாக இருக்க, இச்சாதகன் அலங்கரிக்கப்பட்ட கட்டில், மெத்தை போன்றவற்றைப் பெற்றிருப்பான். பன்னிரண்டாமிடத்திற்கு அதிபதி உச்சம் பெற்று விளங்க, அவனை ஐந்தாமிடத்திற்கு அதிபதி பார்க்க, இச்சாதகன், கட்டில் மெத்தை போன்றவற்றைப் பெற்றவனாக விளங்குவான்.

**இதுவுமது**

நாலுடையோன் சுபனாகச் சுபர்கூடப் பார்க்க
நாலிநல்லோ ரிருக்கவே சயனாதி பதியும்
மேலுயர்ந்த பாக்யாதி பதியுமுச்ச மாகின்
மேடையின்மேற் றூங்கமஞ்ச சயனசுகம் உண்டாம்

கோலுமதி புதனுடனே கூடிநா லிடத்தை
குறிப்பாகப் பார்க்கிலுண்டாங் குலவிநல்ல கிரகம்
மேலுமதிபாவருடன் கூடியே நிற்க
மிதமிரண்டு பல்லிமேலே விழுமென்று
உரைப்பர். (574)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்திற்கு அதிபதி சுபனாக, சுபக்கோளோடு கூடி இருக்க, அல்லது நான்காமிடத்திற்கு அதிபதியைச் சுபக்கோள் பார்க்க, நான்காமிடத்தில் சுபக்கோள் இருக்க, பன்னிரண்டாம் இடத்திற்கு அதிபதியும், ஒன்பதாமிடத்திற்கு அதிபதியும் உச்சம்பெற்று இருக்க, இச்சாதகன் உயர்ந்த கட்டிலில் பஞ்சு மெத்தையில் படுத்துச் சுகம் பெறுவான். சந்திரன், புதனுடன் கூடி நான்காமிடத்தைப் பார்த்தாலும் வலிமை மிக்க பாவக்கோளுடன் சேர்ந்து இருப்பின், இச்சாதகன் மேல் இரண்டு பல்லிகள் விழும் என்று சொல்வார்கள்.

**வாகனங்களைப் பெற்றவன்**

பூவரும்வியத் தானத் தோன்தான்
புகழ்கேந்திர கோணம் ஏறித்
தாவருஞ் சுபவர்க் கத்தைச்
சார்ந்துதான் பலவா னாகி
தேவரும் தேவ லோகாங்
கிசமேறில் வாலி பத்தின்
மாவரும் புயத்தா னாகி
வாகனா தியுமாம் என்பர். (575)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பனிரண்டாம் இடத்திற்கு அதிபதி, கேந்திர திரிகோணங்களில் ஏறி, சுப வர்க்கத்தை அடைந்து பலம்பெற்று தேவலோகாங்கிசம் ஏறில், இச்சாதகன் வாலிபத்தில் புயவலிமை மிக்க வீரனாக, வாகனங்களைப் பெற்றவனாகத் திகழ்வான்.

### பன்னிரண்டாம் பாவத்தில் சூரியன் நின்ற பலன்

பன்னிரண் டதனில் இரவிதான் இருக்கிற்
பலமிறா யாதிகள் கலகம்
துன்னிய உடம்பிற் குறைபிதிர்த் தோஷி
துர்க்கன்மி மித்திரன் கண்ணோய்
மன்னிய புதல்வர் நற்புத்தி யுடையன்
வரும்பிதுர் தோஷமும் அல்லால்
உன்னிய தனமே நாசமே செய்வன்
உரையனா சாரனு மாவன். *(576)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டாம் இடத்தில் சூரியன் இருக்க, இச்சாதகனுக்குத் தாயாதிகளால் கலகம் ஏற்படும். உடலில் குறை உண்டாகும். இவனுடைய தந்தைக்குத் தோஷம் உண்டாகும். தீயசெயலைச் செய்பவனாக இருப்பான். அனைவரிடமும் நட்பு பாராட்டு பவன். கண்ணோய் உடையவன். புதல்வர்களைப் பெற்றவன். நல்லறிவு உடையவன். பொருள்களை மிகுதியாகச் செலவு செய்பவன். ஆசாரங்களிலிருந்து விலகியவனாக இருப்பான்.

### பன்னிரெண்டாம் பாவத்தில் சந்திரன் நின்ற பலன்

வியத்திற் வெண்மதி யுறிற்குண யீனன்
விரணதே கஸ்தன் சூரன்
தயக்குறு தரித்திரன் கண்ணோய் உடையன்
தனிபர தேசவா சத்தன்
மயக்குறு சலத்தால் பயிரச்செல வதனால்
மாதுரு வர்க்கத்தி னாலும்
தீயக்குவா ணிபத்தாற் பொருட்களும் கரும
சேர்க்கையாய் ஆயுளும் உளனே. *(577)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டாம் இடத்தில் நிறைந்த சந்திரன் இருக்க, இச்சாதகன் குணமற்ற வனாக இருப்பான்; காயமுடைய உடலல உடையவன்; வீரம் மிக்கவன்; வறுமையும் கண்ணோயும் உள்ளவன்; வேறு

தேசத்திற்குச் சென்று வசிக்கக் கூடியவன்; நீரினாலும் பயிர்த்தொழிலாலும், தாயார் வர்க்கத்தாலும் வாணிபத்தாலும் பொருட்சேர்க்கை உடையவன்; ஆயுள் மிகுந்தவன்.

### பன்னிரண்டாம் பாவத்தில் செவ்வாய் நின்ற பலன்

*தாயதோர் வியத்திற் சேயுறிற் துணைவர்*
*தன்தோஷ மாம்பொருட் சேதம்*
*நேயமாம் தாரம் விரோதங்கால் முடக்கம்*
*நேத்திர ரோகன்றூர்க் கன்மி*
*காயநேர் தரித்திரன் சாடியே சொல்வன்*
*கட்டுப்பட் டிடும்பி மானி*
*தாயமா னவர்க்கே விரோதமு மாகும்*
*தான்மிகு ரோகியா குவனே. (578)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டாம் இடத்தில் செவ்வாய் இருக்க, இச்சாதகனின் இளைய சகோதரர்களுக்கும் தோஷம் உண்டாகும். அவர்களால் பொருட்செலவும் உண்டாகும். மனைவியுடன் கருத்து வேறுபாடு உண்டாகும். கால் முடங்கும் கண்ணோய் உள்ளவன்; தீயச்செயல்களைச் செய்பவன். வறுமை உடையவன். பிறரைக் குறை கூறுபவன்; பிறருக்குக் கட்டுப் பட்டுபவன் அபிமானி; தாய் வர்க்கத்திற்கு விரோதியாவான். இவன் நோயாளியாக விளங்குவான்.

### பன்னிரண்டாம் பாவத்தில் புதன் நின்ற பலன்

*செலவாகும் வியமதனிற் புதனிருக்கிற் சோம்பல்*
*திரவியசே தந்தரித்ரம் வாதங்கால் முடக்கம்*
*விலகுமந்தா கினிசூலை கிராணிகுய்ய ரோகம்*
*மெலியுமுடல் வயிற்றுவலி சஞ்சலபுத் தியனாம்*
*நலமில்கல கப்பிரியன் பந்துசன வீனன்*
*நவிலுற்றார் விரோதியன் துர்ச்சனவிரோ தத்தால்*
*வல்லனெனக் கடன்படுவன் கடனில்பர பத்தியம்*
*வாங்கிடுநற் சமர்த்துசொல்லு மார்க்களன் இவனே. (579)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டாம் இடத்தில் புதன் இருந்தால், இச்சாதகன், சோம்பேறியாக இருப்பான்; இவனுடைய பொருள் சேதமாகும். வறுமை உடையவன்; வாதம், கால் முடக்கம், அக்கினி, சூலை, கிராணி, குய்யரோகம், உடல்மெலிவு, வயிற்றுவலி முதலான நோய்கள் உண்டாகும். சபல புத்தியை உடையவன்; கலகங்களில் விருப்பம் உடையவன். உறவினர்களிடம் பகை பாராட்டுபவன். உற்றாருக்கு விரோதியாக இருப்பான். தீயோரிடம் கொண்ட பகையால் கடனாளியாவான். கடன் வாங்கும் திறமை உடையவனாக விளங்குவான்.

**பன்னிரண்டாம் பாவத்தில் குரு நின்ற பலன்**

*படிகொள்வியத் தானத்திற் குருவிருக்கிற் சோம்பல்*
*பரதேச வாசனிரு வித்தைகள்சஞ் சாரன்*
*முடிகொளும் இன்மறையோர் புத்திராற் பொன்னால்*
*முற்றுந்தான் நினைத்தபடி முடித்திடமாட் டாமல்*
*மடிவுசஞ் சலப் படுவன் சேவகர் விர்த்தி*
*மனமகிழும் சயனசுகன் குரூரபுத்தி யுடையன்*
*கடினசபை வல்லவனென் றுரைத்தனர்கற் றுணர்ந்தோர்*
*கயல்விழிப்பங் கயமுகத்தாய் கனிமொழிப்பூங்*
*குயிலே. (580)*

(இ-ள்.) கயல்மீனை ஒத்த கண்களையும் தாமரை போன்ற முகத்தையும் கொண்டு கனிவான மொழிபேசும் பூங்குயில் போன்ற பெண்ணே! சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டாமிடத்தில் குரு இருந்தால், இச்சாதகன் சோம்பேறியாக இருப்பான். பிறதேசங்களில் தங்கி வாழ்வான். இருவித்தைகளில் தேர்ந்தவன்; அலைபவனாக இருப்பான்; சினமுடைய அந்தணராலும் புத்திரர்களாலும் பொன்னாலும் நினைத்தவற்றை நிறைவேற்ற இயலாமல் மனத்துயரம் அடைவான். அதிக பணியாட்கள் உடையவன்; சயன இன்பத்தைப் பெறுபவன்; குரூர சிந்தனை கொண்டவன்; சபையில் நன்றாகப் பேசக்கூடியவன்.

### பன்னிரண்டாம் பாவத்தில் சுக்கிரன் நின்ற பலன்

*நிகர்வியத்திற் புகரிருக்கிற் பந்துசனப் பகைஞன்*
*நிட்சேப வானுயர் குபேரபாக் கியவான்*
*பகருமச்ச முடையன் பரத்திரிகம னத்தாற்*
*பாரிலப வாதமுளன் சோம்பல்தன நாசம்*
*சகலசெல வுடையவனாம் மாரோக தேகன்*
*சயனசுகம் நயனசுகம் தானுடையன் என்பர்*
*அகலுறுகல் நெஞ்சுடைக்கும் கெட்டிலைவேற் கண்ணாய் !*
*அறிவுடைய கணிதத்தோர் ஆய்ந்துரைத்த படியே ! (581)*

(இ-ள்.) அகலுவதற்கரிய; கல்மனதையும் உடைக்கும் தன்மை கொண்ட இலையினையும் வேலினையும் ஒத்த கண்களையுடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டாம் இடத்தில் சுக்கிரன் இருக்க, இச்சாதகன் உற்றார் உறவினர் களின் பகைமை பாராட்டக்கூடியவன். புதையல் போன்ற செல்வம் பெற்று மிகுந்த செல்வனாக விளங்குபவன். அனைத்து நன்மைகளையும் பெற்றவன். மச்சம் உடையவன். பிறபெண்களிடம் உறவு கொள்பவன். பிறரால் இழிவாகப் பேசப்படுபவன்; சோம்பல் உடையவன்; பொருள் நாசமும் பொருட்செலவும் உடையவன்; பெரிய நோயை உடையவன்; சயன சுகம் உடையவன்; நல்ல கண் பார்வையைப் பெற்றவன் என்பதைக் கற்றறிந்த சோதிட வல்லுனர்கள் ஆராய்ந்து கூறியுள்ளார்கள்.

### பன்னிரண்டாம் பாவத்தில் சனி நின்ற பலன்

*அனையதோர் வியத்திற் சனியனே இருக்கில்*
*அவமிருத் தால்தோஷம் உண்டாம்*
*மனைவிகே டாகும்சஞ் சலப்புத்தி வஞ்சகன்*
*மூர்க்கன் பொல் லாதான்*
*வினையமாம் தானப் பிரட்டனாம் பாத*
*வியாதியால் சுரத்தினால் விசனன்*
*புனைதரு களப பயோதர முலையாம் !*
*புகன்றனர் கணிதநூற் புலவோர். (582)*

(இ-ள்.) சந்தனம் பூசப்பட்ட தனங்களை உடைய பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டாம் இடத்தில் சனி இருந்தால், இச்சாதகனு மரணத்திற்கு ஒப்பான கண்டங்கள் நேரிடும். இவனுடைய மனைவிக்குக் கேடு உண்டாகும். குழப்பமான மனம் படைத்தவனாக விளங்குவான்; பிறருக்கு வஞ்சனை செய்பவன்; கொடுமை யானவன்; தீமைகளைச் செய்பவன்; பொய் புரட்டு செய்யக் கூடியவன்; பாத வியாதியினால், சுரத்தினால் துயரமடையக் கூடியவன் என்று சோதிட நூல் வல்லவர்கள் கூறியுள்ளார்கள்.

### பன்னிரண்டாம் பாவத்தில் இராகு நின்ற பலன்

சொல்லிய வியத்திற் இராகுவே இருக்கிற
துர்க்கன்மி பாதரோ கத்தான்
மெல்லிய சரீரக் குறையுளன் சாது
மிகுந்தபூ ருவதன நாசம்
புல்லிய செல்வம் சகோதர நண்பன்
புகல்பர தேசசஞ் சாரன்
அல்லினை அடர்ந்து முகிலினைத் துரத்தும்
அரவென நீண்டபூங் குழலே ! (583)

(இ-ள்.) இருட்டினைக் காட்டிலும் கறுத்த மேகத்தைக் காட்டிலும் விரிந்த, பாம்பைப் போன்று நீண்டிருக்கும் பூக்களைச் சூடியுள்ள கூந்தலையுடையவளே! சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டாமிடத்தில் இராகு இருக்க, இச்சாதகன் தீயச்செயல்களைச் செய்பவன்; பாதங்களில் நோய் உள்ளவன்; மெலிந்த உடலைக்கொண்டவன். சாதுவானவன்; முன்னோர்களின் செல்வங்களை அழிக்கக் கூடியவன்; குறைந்த செல்வம் பெற்றவன், சகோதரனிடம் அன்பு பாராட்டுபவன்; பிற தேசங்களில் அலைபவன்.

### பன்னிரண்டாம் பாவத்தில் கேது நின்ற பலன்

தாக்கிய வியத்திற் கேதுவே இருக்கிற்
சதிருள வாகன முடக்கம்
நோக்கிய நேத்ர பாதரோ கத்தான்
நூதன மாகுமந் திரத்தாற்

போக்கிய நீசராலுசத்துருவாற்
　　பொறாத வஞ்சனைத் தொழிலும்
நீக்கிடும் பொல்லா வாணிபம் அதனால்
　　நிலைபெறு தனம்கெடும் என்பார். (584)

**(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டாம் இடத்தில் கேது இருக்க, இச்சாதகனின் வாகனங்களுக்கு முடக்கம் ஏற்படும். கண், பாதம் முதலானவற்றில் நோய் உண்டாகும். மந்திரத்தாலும் தீயவர்களாலும் பகைவர் களாலும், வஞ்சனைத் தொழிலாலும், தீய வாணிபத்தாலும் இவனுடைய செல்வத்திற்கு அழிவு ஏற்படும்.**

**பன்னிரண்டாம் பாவத்தில் குளிகன் நின்ற பலன்**

பொன்னார் குளிகன் வியத்திலுறிற்
　　பொருந்தும் பொருளே இரசவாதம்
தன்னாற் செலவாம் ஈராறில்
　　சதிராய்க் குளிகன் பவன நிற்கிற்
சொன்னார் பாத வியாதியினால்
　　தூய நேத்ர வியாதியினாற்
சின்னா பின்னம் எனப்பொருளே
　　செல்வாம் என்று தெரித்தனரே. (585)

**(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பனிரண்டாம் இடத்தில் குளிகன் இருக்க, இச்சாதகனுக்கு இரசவாதம் செய்வதால் செலவுண்டாகும். பனிரண்டாமிடத்தில் குளிகன் பவனன் நிற்க பாத வியாதியாலும் கண் வியாதி யாகும். மிகுந்த பொருட்செலவு ஏற்படும் என்று சோதிட வல்லுநர்கள் தெரிந்து உரைத்துள்ளார்கள்.**

**பன்னிரண்டாம் பாவம் முற்றிற்று.**



## சாதக சிந்தாமணி

# செய்யுள் முதற்குறிப்பு வரிசை

**(எண் - பாடல் எண்)**

(பன்னிரு பாவங்களில் உள்ள பாடல்களின் செய்யுள் முதல் குறிப்பு அகராதியில் இரண்டாம் மூன்றாம் பாகங்கள் முறையே 2, 3 என சுட்டப்பட்டு, அதன்பின் பாடல் எண்கள் குறிக்கப்பட்டுள்ளன.)



குறிப்பு : சாதக சிந்தாமணியின் சில பாவங்களில் பாடல்களின் முதல் எழுத்துக்கள் வருக்க வரிசையில் அமைந்துள்ளதால் அகர வரிசையில் அமைக்கப்படவில்லை.

**நான்காம் பாவம்**

**ஏழாம் பாவம்**

# துணை நூல்கள்


1. **சாதக சிந்தாமணி** (மூலபாடம்),
கூடலிங்கம்பிள்ளை, எஸ்., (பதிப்.) ஸ்ரீ ஆதிமூலம் பிரஸ்,
சென்னை. முதற் பதிப்பு-1922.

2. **சாதக சிந்தாமணி** (மூலபாடம்), வைத்தியலிங்க சோதிடர்,
பாலசுப்பிரமணிய முதலியார் (பதிப்.),
பூமகள் விலாச அச்சுக்கூடம், சென்னை, 1934.

3. **சாதக சிந்தாமணி** (மூலபாடம்), நித்தியானந்த சோதிடர்,
(பதிப்.) எஸ். பி. வி. பிரஸ், சென்னை-1941.


